உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# ஆசிரியர், ம. க. வே. பிள்ளைப் புலவர்

இயற்றிய

# சந்திரமௌலீசர் சதகம்

என்னும்

# ஈழமண்டல சதகமும்,

ஷை ஆசிரியர் குமாரர் மகாலிங்கசிவம் முன்னிலையில்.

யாழ்ப்பாணம் உரும்பராய்

## ந. சபாபதிப்பிள்ளை

இயற்றிய

# உரையும்.



இவை

ம. க. வே. திருஞானசம்பந்தப்பிள்ளையால்

சென்னபட்டணம்

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.

ருதிரோற்காரி௵ ஆவணி௴.

உ

சிவமயம்.

# முகவுரை.

சீவகோடி யடையமுனஞ் செம்மறசக் கிரீவனால்
அவகோடி யகற்றியயற் றருகோடி யாலயமுந்
தவகோடி வீடணனாற் றருமுக்கோ டியுமாக
நவகோடி சிவாலயங்க ணணிபதிலங் காநகரம்.

இத்துணைப் பெருஞ்சிறப்பினதாகிய ஈழமண்டலத்தின்மீது தொகுத்தல்யாப்பானே சதகநூலியற்றத் தொடங்கிய ஆசிரியர், இதனை, சைவோபநிஷத்து, சிவாகமம், தக்ஷிணகைலாசமான்மியம், வான்மீகம் முதலிய சம்ஸ்கிருத நூன் மேற்கோள் கொண்டும்; தேவாரம், திருவாசகம், திருமந்திரம், தலபுராணம் முதலிய திராவிட நூன் மேற்கோள் கொண்டும்; தமக்குத் திருவருட்பேறும் பிறர்க்கு ஈழமண்டல விசேஷ விருத்தாந்தங்களை விளங்க வைத்தலுமே பயனாகத் தங்குலதெய்வமாகிய சந்திரமௌலீசனை, அவர் திருவருட்சத்தியாகிய சாந்தநாயகியம்மையாரோடு ஒருங்குவைத்து எதிர்முகஞ்செய்து, விஷயங்களை இயன்றதுணை மிகவுஞ் சுருக்கி, யாவருக்கும் இனிதுவிளங்குமாறு வெளிப்படையான செந்தமிழ்ச் செய்யுணடையில் இயற்றினார். ஆயினும், தீர்க்க நிச்சயமாயினவும், இன்றியமையாதனவுமாகிய அனுபவவிஷயங்கள் சில பிரயோகித்தியற்றிய செய்யுள்களும் கிஞ்சித்துள்ளன. பெரும்பான்மையும் ஒவ்வொரு செய்யுளினும் ஈற்றடிகள் தம்மான்மலாபங்கருதியே இயற்றப்பட்டன. சில தமிழ்நூல்களினும், ஆங்கிலநூல்களினும் உள்ள பிற்கால இலங்கைச் சரித்திரங்களுட் பெரும்பாலன உலக

சம்பந்தமேயன்றி வேதசம்பந்தந் தழுவாமையானும், தம்முள் ஒன்றற்கொன்று சிறிதாகப் பெரிதாக வேறுபாடுடைமையானும், அவைகள் ஈண்டு ஆசிரியரால் ஓதுக்கப்பட்டன.

உ. இலங்கை யாழ்ப்பாணம் என்னும் இரண்டற்கும் சாமானிய தருமங்களாயுள்ளவைகளைத் தொகுத்து, பொதுப்பிரகரணம் எனப் பெயர்தந்து, முதலினும்; அவற்றுள் யாழ்ப்பாணம் ஒன்றொழிந்த ஏனைச் சிறு பாகங்கள் பலவற்றைத் தன்னுள் அடக்கியிருக்கும் ஒரு பெரும்பாகமாகிய இலங்கையொன்றற்கே உரிய விசேஷதருமங்களைத் தொகுத்து, இலங்காபுரிப்பிரகரணம் எனப் பெயர் தந்து, இடையினும்; அச்சிறுபாகங்கள் பலவற்றுள்ளும் தம்மால் ஈண்டு விதந்தெடுத்துக் கொள்ளப்பட்ட ஒருபாகமாகிய யாழ்ப்பாணத்திற்கே உரிய விசேஷதருமங்களைத் தொகுத்து, வீணாகானபுரப்பிரகரணம் எனப் பெயர்தந்து, இறுதியினும், வைத்து, மூன்று பிரகரணங்களாக இந்நூலை ஆசிரியர் வகுத்துக் கூறினார்.

ந. (தொண்டைமண்டலம் சோழமண்டலம் பாண்டிமண்டலங்களின் விசேஷ விருத்தாந்தங்களைப் பண்டைக் காலத் தாசிரியர் சிலர் சிறுநூலாகிய சதகநூலாற் கூறிப் போந்தமையின், இவ்வாசிரியர் தாமும் அத்தொல்லாசிரியர் தொன்னெறி பரம்பரையே பின்பற்றித் தொடர்வாராகி, இவ் வீழமண்டல விசேஷ விருத்தாந்தங்களைச் சிறுநூலாகிய சதகநூலாற் கூறினமையானும்) ஆதிபௌராணிகராகிய சூதர் ஆதிகவியாகிய வான்மீகி முதலிய மகாவிருடிகளானும், மேதாவிகள் பிறர் சிலரானும், விதந்தெடுத்து விளக்கிக் கூறப்பட்ட இவ்வீழமண்டல அப்தவைபவங்கண் முழுவதுஞ் சுருங்கப்புனையப்படும் இயல்பினதாகிய இச்சதகநூலுள் அடங்காமை ஒருதலையாகலானும், இன்னோரன்ன பிற ஏதுக்கள் பலவற்றானும், அவ்வைபவங்கள் அனைத்தையும்

அம்முதனூல்களினின்றும் ஆசிரியர் ஈண்டுத் தந்து கூறியொழிந்தாரென விபரீதக்கிரகணஞ்செய்யற்க; இம்மண்டலத்தின் உன்னத மகிமை அனந்தகோடிகளுள்ளே இச்சிறு நூலுள் அடங்கத்தகும் அவ்வளவே கூறியொழிந்தாரென்னும் இவ்வுண்மையினை உய்த்துணர்ந்து கடைப்பிடித்துக் கொள்க. அது, "தென்கயிலை மான்மியத் துள்ளபிற வூழியோதினு முலவுமோ" என ஆசிரியர் தாமே இந்நூலுட் கூறியவாற்றானும் அறிக.

௪. ஆசிரியரால் ஈண்டுச் சுருங்கத் தந்து கூறப்பட்டனவும், விரிவஞ்சிக் கூறப்படாதொழிந்தனவுமாகிய ஈழமண்டல விசேஷ விஷயங்களாவன:—

இலங்கை, திரிகூடமலை, திருக்கேதீச்சரம், கந்தமாதனம், உத்தரகைலாசம், தக்ஷிணகைலாசம், திருக்காளத்தி, திருச்சிராப்பள்ளிகளாகிய இவைகளின் உற்பத்தியும்; பாபநாசதீர்த்தம், விஷ்ணுசேனை, கன்னியாகங்கை, கங்கோற்பத்தி, பஞ்சசந்திரபருப்பதமான்மியம், கந்தாத்திரி - (கந்தசுவாமிமலை இது திரிகோணமலையிலுள்ளது.), மாபலிகங்கை, மாணிக்ககங்கை, காவேரிகங்கை, சிவசோதியாதம் - (சிவனொளிபாதம்.), சமனொசலம், காசை, கங்காள்கானவைபவம், அமுதகனி, சப்போதகிரி - (உவந்தமலை), அப்சகாமாத்திரிகளாகிய இவைகளின் மகிமையும்; நவகங்கை, விநாயகர்மலை, சப்தகாயம், சுவேலாத்திரி - (நன்றுகச் சமுத்திரத்தாற் சூழப்பட்ட மலை), அநுராசகம் - (அநுராசபுரம்), கண்டகிவடகாந்தாரம் - (புள்ளாலங்காடு), அசுவாத்திரி - (குதிரைமலை), முன்னீச்சரம், வேகாவனேச்சரம் - (தான்றோன்றியீசுரன்கோயில்), மாயாநதம், சிலாநதம் - (கல்லாறு), பயோட்டனுநதம் - (பாலாவி. பயம்-பால். உட்டணம்-ஆவி), கோடிதீர்த்தம், கடதீர்த்தம், கங்காசாகரசங்கமம், நகுலதீர்த்தம், நகுலேசமான்மியம், சொர்ணாலயம் - (பொன்னாலயம்-புன்

ணலை. இது இலக்குமி விஷ்ணுவைப் பூசித்த தலம்.), அசுவமோசனம் - (மாவிட்டபுரம்), நவகிரி - (நவற்கிரி), வல்லிபுரம் - (இது பூமிதேவி விஷ்ணுவைப் பூசித்த தலம். வல்லி-பூமிதேவி. இது பொதுப்பெயரன்று. சிறப்புப்பெயர். இது சம்ஸ்கிருத நிகண்டிற் கண்டது; சரித்திரமு மங்ஙனமே.), வாரிவனம் - (வாரியப்பர் கோயில். இது சாவகச்சேரியிலுள்ளது.), பிரளயபைரவக்ஷேத்திரம் - (பளமுயில் வைரவர் கோயில்.), யமுனாதீர்த்தம் - (யமுனாநதி-யமுனாரி. நல்லூரிலுள்ளது), தனுக்கோடி - (வில்லூன்றி), கிருச்சிரவிரதமகிமை, அதனை அனுஷ்டிக்கும்விதி என்பனவைகளும்; நவபிரமாக்கள், தசவிஷ்ணுக்கள், ஏகாதசருத்திரர்களாகிய இவர்களின் விசேஷ விருத்தாந்த விகற்பங்களும், இன்னோரன்ன பிறவுமாம். இவைகளுட் பூர்வீகமானவைகளைக் காந்தபுராண முதலியவற்றுள்ளும், ஏனையவைகளை வையபாமாலை, கைலாயமாலை முதலிய பிற்கால நூல்களுள்ளும் காண்க.)

நவபிரமாக்களாவார்:—வேதா, விரிஞ்சி, சிருட்டா, பத்மபூ - (தாமரையானுற்பத்தியானவர்.), பிதாமகன், கமலவாசி, சுயம்பு, சதுர்முகன், விசுவசிருட்டா என்பவர்கள்.

தசவிஷ்ணுக்களாவார்:—விஷ்ணு, அச்சுதன், சரோருகாக்ஷன், பத்மநாபன், கேசவன், நாராயணன், சக்கிரபாணி, வாசுதேவன், தாமோதரன், கிருட்டிணன் என்பவர்கள்.

ஏகாதசருத்திரர்களாவார்:—சங்கரர், சம்பு, கிரீசர், சமாட்டகா, சுகலாதரர், விரூபர், பகவான், சூலி, வாமேசர், தீப்தமூர்த்தி, கங்காதரர், என்பவர்களாம். இம்முத்திறத்து உட்பிரிவினர் முப்பதின்மர்களும், தனித்தனி ஒருவர்பின் ஒருவராகத் திரிகோணசல மகாலிங்கத்துக்கு நித்தியபூசை செய்து வந்தனரெனத் திரிகோணசலமகாலிங்கமான்மியம் கூறும். இன்னும், இத்தலத்து மகாவிசேடங்களை, மச்சேந்தி

யப், கல்வெட்டு முதலிய நூல்களும் விரித்து விளங்கக் கூறும். ஆண்டுக் காண்க.

ரு. இச்சந்திரபுரத்துக்குச் சந்திரமௌளீசரது பிர திஷ்டாகாலத்துக்கு முன்றொட்டு வழங்கிவந்த பட்டுவில் என்னும் புராதனபிதானம் பிறிதொன்றுளதாயினும், அது அந்நியபாஷாபிதானமாகி, இச்சதக தந்திர மகுடநா மம், ஈற்றடியிறுதி முக்கியச் செய்யுட் பிரயோகங்களுக்கு அநருகமாக; இக்ஷேத்திரமுதல்வர் திருநாமத்தான் வந்த இச்சந்திரபுரமென்னுங் காரணக்குறியே இவ்விரண்டற்கும் அருகமாக அமையுந் தகுதியுடைமையின், இந்நியாய ரீதி பற்றி ஆசிரியர் அண்டித்தனையே இவ்வூர்நாமமாகப் பிரயோகித் துக் கூறுவாராயினரென்பது. [சந்திரபுரம் சந்திரமௌளீச புரச் சுருக்கம்.] க்ஷேத்திர முதல்வர் திருநாமத்தால் க்ஷேத் திரப்பெயர் உற்பத்தியாகி, இங்ஙனம் வழங்கிவருதலை, சந்திர சேகரபுரம், நடராசபுரம், சிவபுரம், சிதம்பரம் முதலியன வாகப் பரந்துவரும் க்ஷேத்திரத் திருநாமங்களான் அறிக.

சு. இதுகாறுங் கூறியவாற்றான் இந்நூல் சந்திர மௌளீசர் சதகம், ஈழமண்டலசதகம் என்னு திருபெயரும் ஒருங்குபெறுதற்கு இன்றியமையா உரிமையுடைமை பொரு ந்துமாறும் அறிக.

எ. வைரவஸ்தோத்திரமாலை, புலியூரந்தாதியுரை, சைவுளிநூல்விளக்கவுரை, திருவாதவூரடிகள் புராணப் பொ ழிப்புரை, இதன் விருத்தியுரை, நாலாயிரப்பாடலாகிய வேதாரணிய புராண நூதனப்பதிப்புத்திருத்தம், இதன் குறிப்புரை, அபிராமியந்தாதியுரை, ஆருயிர்க்கண்மணிமாலை முதலியன முன்னர் இவ்வாசிரியராற் செய்யப்பட்டனவே யாம். இவற்றுள் திருவாதவூரடிகள்புராண விருத்தியுரை செய்த காலத்து இவர் தம் வித்தியாகுருவாகிய வித்துவ

சிரோமணி நல்லூர் ச. பொன்னம்பலபிள்ளையவர்களால் ஆசிரியர் என்னும் விசேஷாபிதானமும், இந்நூல் செய்தரங் கேற்றியகாலத்துச் சிதம்பரம் வையாகரணிகர் முத்தைய பட்டாரகர் முதலிய பேரறிஞர்களாலே பிள்ளைப்புலவர் என் னும் விசேஷாபிதானமும் இவர்க்களிக்கப்பட்டனவேயாம்.

அ. (விராட்புருடனுக்கு இருதயஸ்தானமும், தரி சிக்க முத்திதரும் உத்தமோத்தம மகாசிவக்ஷேத்திரமுமா கிய ஸ்ரீ. சிதம்பரத்திலே தலவாசஞ்செய்துகொண்டிருக்குங் காலத்து ஆசிரியர் இந்நூலை இயற்றி அரங்கேற்றினார் என அறிக.

கூ. இச்சதகம் அநேக விஷயங்களை, சுருங்கச் சொல் லல் என்னும் வனப்புவகையால் தொகுத்துச் செய்யப்பட் டமையினாலும், அவ்விஷயங்களின் விரிவுமுழுவதும் இதன் மூலத்தை மாத்திரம் படித்தவர்களுக்கு இனிது விளங் காமையானும், அவருட் சிலர் இதற்கோர் உரை யியற்றித் தருக என்று கேட்ட கேள்வியின்படி, ந. சபாபதிப்பிள்ளை யால் இவ்வுரை செய்யப்பட்டதெனவும், இஃது உரையாசிரியர் சபாபதிப்பிள்ளையின் பொருளுதவிகொண்டு அச்சிடப்பட்ட தெனவும் அறிக.

ம. க. வே. திருஞானசம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

## ம. க. வே. மாணிக்கவாசகர் செய்தது.

### கலிநிலைத்துறை.

சீதக நம்பிதா சாற்றுமுன் றம்பெரு நிலையைப்
புதர்பு கன்றனர் புரிந்தநூ லுரைமுகம் பொருந்த
இதமு றுங்கு லாசலத் திருக்குநா ளொன்றைக்
கதர்கொ ளுந்திறத் தைம்பதோ டொன்பதா மாயுள். (க)

அன்ன காலையிற் சிதம்பரத் தாறுமா முகப்பேர்
மன்னு நாவலர் தருபெருங் கழகமா னேசர்
துன்னி நீயிவண் வருகெனப் பாசுரந் தூக்கச்
சொன்ன சொன்மறு தேகிமா மதுரை[illegible]கை தொழுதார். ()

அருமை யாந்திரு நாவிலுக் கரசாய் டடைந்த
பெருமை யார்திருப் பூம்புக லூர்வயிற் பெருநாள்
உரிமை யாந்திரு வாசக பூசையை யுயர்த்தித்
திருமை யார்சிவ பூசையாச் சிறந்தினி தெடுத்தார். (ங)

ஆண்டு சங்கர னமர்ந்தரு டலம்பல வடைந்து
மீண்டு றும்பொழு தெதிருறு தலங்களும் விரும்பிக்
காண்டல் செய்தபின் கசிந்துளங் காமர்சீர்த் தில்லைத்
தாண்ட வந்தரி சித்தனர் கண்கணீர் ததும்ப. (ச)

அன்னை யோடுறை யடிகளை யன்பினின் வணங்கிப்
பின்னை மேவிய கழகத்தின் றலைமையும் பெற்றுத்
தன்னை யேநிகர் சேக்கிழார் மடந்தனிற் றங்கிப்
பொன்னை யேயனை யார்சில வாண்டுகள் போக. (ரு)

கங்கை யாடுமொ கருதியே கலந்துமேன் மார்க்கந்
துங்க பத்திரை கிருட்டிணை துன்னியே துளைந்து

பொங்கு கின்றகோ தாவரி படிந்துபின் போந்து
தங்கி லக்குவன் றடிந்தநா சிகையினைச் சார்ந்தார். (சு)

பீடுசால் பஞ்ச வடியினிற் பின்புசென் றுள்ளங்
கூடு மாதர வாற்றிரி யம்பகங் குறுகி
நீடு தண்டகா ரணியநேர்ந் தவ்வயி னீங்கிப்
பாடு சித்திர கூடமும் பார்த்தனர் பரிவால். (எ)

அல்ல னீங்கிட நருமதை யடைந்தகி லாடிச்
சொல்லெ ரும்பிர யாகைத்ரி வேணியிற் றோய்ந்து
வல்லே காசியின் வந்துமா கங்கைசங் கற்பஞ்
சொல்லி யாடினர் யாத்திரா பிண்டமுந் தூர்த்தார். (அ)

அறுசீராசிரிய விருத்தம்.

காமர்சீர் விசுவ நாதக் கடவுளைக் கங்கை நீரால்
ஆமுறை யாட்டிப் பல்வே றமுதமு மன்பி னூட்டிப்
பூமலர் கொண்டு பூசை புரிந்தடி வணங்கிப் பாகத்
தேவிமா விசாலாட் சிக்குஞ் செய்வன திருந்தச் செய்தே. (கூ)

அன்னபூ ரணியைக் கும்பிட் டடிவல மதுநூற் றெட்டுஞ்
சொன்னவா றியற்றிப் பஞ்சக் குரோசயாத் திரையுந் துன்னிப்
பின்மணி கன்னி கையிற் பேரன்பி னோடு மாடி
மன்னுமார்க் கண்ட லிங்கம் வரன்முறை வழிபட் டேத்தி. (க0)

இன்னவா றினைய காசி வாசியா யெனைத்துஞ் செய்தே
அன்னைதந் தையர்சி ராத்த காலமு மணைய வாற்றிப்
பின்னரே கயாவிற் போந்து பேருருத் திரபா தத்தில்
நன்னய சிராத்த பிண்ட நல்கினர் நமர்கட் கெல்லாம். (கக)

கலிவிருத்தம்.

வீடுசேர் கருத்தினுல் விமல யாத்திரை
மாடுசேர் தலமெலாம் வணங்கி வந்தபின்

கூடுசேர்த் தில்லையிற் குறுகிப் பண்டுபோல்
ஈடில்சீர்ப் பூசைசெய் திருக்கு நாளினே. (கஉ)

## அறுசீராசிரிய விருத்தம்

தேசாபி மானங் கொண்டு சிலர்சினந் திருகிச் செப்பும்
ஆபாச வாதந் தன்னை யறக்கண்டித் தகற்று மெல்லைத்
தேசாரு மீழ மேய சிறப்பிய நெறித்து வாக்கிற்
கீசாமா சற்ற நூலொன் றியற்றினர் தமக்கீ யென்ன. (கரு)

ஆங்கவர்க் கிரங்கி வேண்டு மதற்குடம் பட்டு முன்னூல்
தாங்கிய வாய்மை தம்முட் சிற்சில தந்து கோத்துச்
சாங்கமோ டொங்க மாகச் சதகமீ றியற்றித் தந்தார்
வீங்குநீர் ஞாலத் தியாரே வியந்திடாக் கல்வி வீரர். (கச)

செந்தமிழ்ச் செல்வ மோங்கச் செவிக்கின்ப தேங்கத் தேர்வார்
புந்தியின் மயக்க நீங்கப் புகல்பல வனைப்பும் வீங்க
அந்தமில் பொருள்க ளெல்லா மால்வித்தி னமைத்திங் காக்கித்
தந்தநூற் சுருக்கத் துக்கார் தகும்பொருள் விரிக்கத் தக்கார். ()

## கலிவிருத்தம்.

ஒரொரு சிறுதொட ருணரின் வேறொரு
பாரிய சரித்திரம் பற்ற வுஞ்செயும்
நேரிய சணகியுற் பத்தி வாதவூர்ச்
சீரியர் பூர்வமுந் தெரித்துச் செல்லுமே. (கசு)

நல்லவர் மதிப்பதே மதிப்பு நல்லவர்
அல்லவர் மதிப்பவ மதிப்ப தாமன்றே
வல்லவர் தேர்ந்துமேல் வருக்க வல்லபம்
இல்லவர் கூற்றுமிவ் விரண்டின் பாலதோ. (கஎ)

திருச்சிற்றம்பலம்.



## ம. க. வே. மகாலிங்க சிவம் இயற்றியது.

### வெண்பா.

செய்தபிழை யெல்லாஞ் சிவனே பொறுத்தருளி
உய்யவருள் செய்யெனும்வாக் குள் ளுறையாப்—பெய்தளித்தான்
வெள்ளைக் கவியான் விதுமௌலிக் கொண்சதகம்
பிள்ளைக் கவியென் பிதா.



உ.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

யாழ்ப்பாணத்துச் சந்திரபுரதலாலய

# சந்திரமௌலீசர் சதகம்

என்னும்

# ஈழமண்டல சதகமும் உரையும்.

## காப்பு.

நேரிசை வெண்பா.

செந்திருசேர் சந்த்ரபுரச் செல்வரருட் கேதாரச்
சந்திரமௌ லீசர் சதகபதப்—புந்திபுகும்
இந்துஞ்சிந் துந்நந்து மெந்தைமுந்து தந்தபொலந்
தந்தன்பந் தந்தவிர்க்குந் தாள்.

இதன்பொருள். இந்தும் சிந்தும் நந்தும் - ஒருகலையாகிய பிறைமதியும் ஆகாயகங்காநதியும் முறையே கலைகள் வளருதற்கும் பிரவாகஞ் சுருங்குதற்குங் காரணராகிய,—எந்தை முந்து தந்த பொலம் தந்தன் - எம்பரமபிதாவாகிய சிவபெருமான் முதவிற்றந்தருளிய ஏகதந்தரது,—பந்தம் தவிர்க்கும் தாள் - தம் மெய்யன்பர்களுக்குப் பாசபந்தத்தை ஒருதலையாக நீக்கியருளுந் திருவடிகளானவை,—கேதார அருட்செல்வர் - முன்பு கேதார

அருட்செல்வராய்,—செந்திருசேர் சந்த்ரபுரச் சந்திர மௌலீசர் சதகபதப் புந்திபுகும் - பின்பு மகாலக்ஷ்மியின் விலாசம் பொருந்திய சந்திரபுரதலாலயத்தில் எழுந்தருளியிருக்கும் சந்திர மௌலீசர்மீது தமியேன் பாடத்தொடங்குஞ் சதகத்திற்குப் பதப்பிரயோகம் நன்கு சித்திக்குமாறு; அப்பாடுதற் ஜெழிற் கின்றியமையாச் சிறப்புக்கருவியாகிய என் சிற்றறிவின்கண்ணே தாமேவந்து குடிபுகாநிற்கும். என்றவாறு.

செந்திருவென்பது "இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்" பதப்பிரயோகத்தைப் பதமென்ற துபசாரவழக்கு. இந்து சிந்து என்பன வடமொழிகளாயினும், தமிழ்மொழி மதம் பற்றித் தமக்குரிய செய்கைபெற்று நின்றன. ஒன்றற்கொன்று தம்முண் மாறுபட்ட ஆக்கக்கேடுகளென்னும் இருபொருளும் பயக்கும் நந்தலாகிய எதிர்ப்பொருட்கிளவி ஈண்டிரட்டுற மொழிதல். பொலம் - கிம்புரிக்காகுபெயர். செல்வருட் கேதாரமென்பன கேதார அருட்செல்வர் என மாற்றிப் பொரு ளுரைக்கப்பட்டன.

மங்கலமொழி முதல்வகுத்துக் கூறவேண்டு மென்பது அணியிலக்கணநூற் றுணிபாகலின், செந்திருசேர் சந்த்ரபுரச் செல்வரெனவும், தந்தையின்மீது தமியேன் பாடுஞ் சதகத் திற்கு அவர் முதன்மைந்தர் தாமே விரைந்து வந்திடையூறு நீக்கிப் பூரணானுக்கிரகஞ் செய்தல் ஒருதலையென்பது குறிப்பிப் பார் தாளென்னு மெழுவாய்க்கு முன்னர்ப் புகுமென்னும் பய னிலையைப் பிரயோகித்துப் புந்திபுகுமெனவும், இச்சதகநூல் தற்காலத்தினும் பிற்காலத்தில் இனிது நின்று நிலவிப் பெரி தும் பயன்படுதல் திருவருளான் நிகழா தொழியாதென்பார் இக்காப்புச் செய்யுளைப் பின்முடுகு வெண்பாவானுங் கூறினார். சதகம் நூறு செய்யுள்களான் ஆகியது. இன்னோரன்ன பிற வற்றையும் இவ்வாறுய்த்துணர்ந் துரைத்துக்கொள்க.

## தற்சிறப்புப் பாயிரம்.

பன்னிருசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

### சந்திரமௌலீசர் சாந்தநாயகி சமேதரென்பது.

நீரேறு செஞ்சடை நிருத்தரயல் சாட்சியாய்
நின்றருள் சபாநாயகி
நிகமாக மங்கடுதி செய்நிமல நாயகிமெய்
நித்யமங் கலநாயகி
காரேறு நெஞ்சினேற் கன்னையாய் முன்னின்று
கருணைபுரி திருநாயகி
கந்தனொடு கடகளிறை முந்துதந் தமரரிடர்
காத்தகட வுளர்நாயகி
பாரேறு சமயங்க ளோராறு மன்பினொடு
பாதுகாத் திடுநாயகி
பரமனரு ளிருநாழி நெற்கொடெண் ணென்கறம்
பாலித்த பெருநாயகி
தாரேறு சுரிகுழற் சர்வநா யகிகனுவ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைங்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நீர் ஏறு செஞ்சடை நிருத்தர் அயல் - ஆகாய கங்காநதி பிரவாகிக்குஞ் சிவந்த சடாமுடியையுடைய பஞ்ச கிருத்திய நிருத்தராகிய சிதம்பர சபாநாயகரது வாமபாகத் திலே,—சாட்சியாய் நின்றருள் சபாநாயகி - அந்நடன சாட்சி யாய் நின்றருளுகின்ற சிற்சபாநாயகியும்,—நிகம ஆகமங்கள் துதி செய் நிமலநாயகி - வேதசிவாகமங்கள் சதா தோத்திரஞ் செய் கின்ற மலரகிதநாயகியும்,—மெய் (நாயகி) - உண்மைநாயகி

யும்,—நித்யமங்கலநாயகி - நித்தியமங்கலத்தை உடைய நாயகி யும்,—கார் ஏறு நெஞ்சினேற்கு அன்னையாய் முன் நின்று கருணை புரி திருநாயகி - அஞ்ஞானாந்தகாரம் இறுகப்பற்றிய மனத்தையுடைய தமியேனுக்குப் பரம மாதாவாய்த் தமியே னெதிரே வந்துநின்று திருவருள் பாலித்த கிருபாநாயகியும்,— கந்தனொடு கட களிறை முந்து தந்து அமரர் இடர் காத்த கட வுளர் நாயகி - சுப்பிரமணியக் கடவுளையும் மதம் பிலிற்றும் யானைமுகத்தையுடைய விநாயகக் கடவுளையும் முன்னரே பெறுது பெற்றருளி இந்திரன் முதலாகிய முப்பத்து முக்கோடி தேவர்களுக்கும் அசுரரால் நிகழ்ந்த துன்பங்களினின்றும் அவர் களைப் பாதுகாத்த தேவநாயகியும்,—பார் ஏறு சமயங்கள் ஓர் ஆறும் அன்பினொடு பாதுகாத்திடு நாயகி - பூமியிலே ஏனை முக்கூற்றுச் சமயங்களின் உயர்ந்த உட்சமயங்கள் ஆறனையும் ஆன்மாக்கண்மீது கொண்ட பேரன்பினாலே பரிபாலனஞ் செய் தருளுகின்ற சற்சமயநாயகியும்,—பரமன் அருள் இரு நாழி நெற்கொடு எண்ணான்கு அறம் பாலித்த பெருநாயகி - காஞ்சீ புரத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஏகாம்பரநாத சுவாமியானவர் ஆன்மவர்க்கங்களின் சீவியத்தின் பொருட்டுக் கொடுத்தருளிய ஒருபடி நெல்லைக்கொண்டு ஆதுலர்க்குச்சாலை முதல் கன்னிகா தானம் ஈருகிய பொதுத் தருமங்கள் முப்பத்திரண்டனையும் பரிபாலனஞ் செய்தருளுகின்ற அரும்பெருந் தருமநாயகியும்,— தார் ஏறு சுரி குழல் சர்வநாயகி - மலர்மாலை புனைந்த உட் சுரித்த கூந்தலையுடைய அகிலலோக நாயகியுமாகிய,—கலுவ சாந்த நாயகி சமேத - கலுவமாகிய குறிச்சியில் எழுந்தருளி யிருக்கின்ற சாந்தநாயகியம்மையோடுகூடி எழுந்தருளியிருப்ப வரே,—சந்த்ரமௌலீசனே - சந்திரமௌலீசரென்னும் திருநா மத்தை யுடையவரே,—ஐந்தொழில் விலாசனே - பஞ்சகிருத் தியங்களாகிய அநாதி லீலைகளையுடையவரே,—சந்த்ரபுர தல வாசனே - சந்திரபுரமாகிய சிவக்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருப்பவரே. எ - று.

சாட்சி யென்பதற்குக் காண்பவள் என்பது பொருள். அங்ஙனந் தரிசித்தருள் எதன்பொருட்டெனின், ஒரு நற்றாய், தன்னோரிளஞ்சிறு குழவி நோயினாற் பீடிக்கப்பட்டுழி, அதற்கு அந்நோய்நீக்கத்தின் பொருட்டுப் பிரயோகிக்கப்படும் மருந்தை உட்கொள்ளு மியல்பின்றாகலின், அதனை அந்நற்றாயுட்கொண்டு பத்திய நியமம் பூண்டு அம்மருந்தோடு கலந்த தன்முலைப்பாலை அக்குழவிவாய்ப்புகட்டி, அதுவாயிலாக அந்நோயை நீக்கிச் சுகஞ்செய்வதுபோல, உலகமாதாவாகிய சிவகாமசுந்தரி தேவி யாரும், உண்மையறிவான் மிகவுமிளஞ்சிறு குழவிகளாகிய ஆன் மகோடிகள் மலநோயாற் பீடிக்கப்பட்டுழி, அந்நோய்க்கு மருந் தாகிய திருநிருத்தத்தை உள்ளபடி தரிசிக்கும் அறிவாற்றல் அவ்வான்மகோடி கட்கின்மையான் அதுகண்டிரங்கித் தாமே அந்நடனத்தை உள்ளபடி தரிசித்து, அத்தரிசனபலத்தோடு கலந்த தந்திருவருட்பாலை அக்குழவிகளின் அறிவுவாய்ப் புகட்டி அந்நோயைநீக்கி முத்திச்சுக மீந்தருளும் பொருட் டேயாமென்க.

நிகமம் - வேதம். மெய்ந்நாயகி நித்தியமங்கல நாயகி யெனத் தனித்தனி கூட்டுக. மெய்ந்நாயகி யென்றது உலகத் துள்ள ஏனைய நாயகிகளைப் போலாகாது சர்வான்மாக்களிடத் தும் வியாபித்து அவைகளை நடாத்தும் ஏகநாயகத்தன்மையை உள்ளபடியுடைய உண்மைநாயகி அவ்வம்மையா ரொருவரேயா மென்றவாறு. காரேறு நெஞ்சினேற்கென்றது அஞ்ஞானாந்த காரம் குடியேறப்பெற்ற மனத்தையுடைய தமியேனுக் கென் னும்பொருட்டு. அந்தகாரம் - குருட்டைச் செய்வது; இருள். அந்தம் - குருடு. காரம் - செய்வது. கார் ஆகுபெயர். பாரேறு சமயங்கள் ஓராறு மென்றது, இவ்வுலகத்துள்ள புறப்புறம், புறம், அகப்புறம் என்னும் முக்கூற்றுச் சமயங்களினுமுயர்ந்த பாடாணவாத சைவமுதல் சிவாத்துவித சைவமீறாகிய அகச்சம யங்கள் ஆறனையுமாம். அவற்றையும் அவற்றி னிலக்கணங்களை யும் சங்கற்ப நிராகரணமென்னும் சைவசித்தாந்த நூலுட் கண்டு

தெளிக. ஈண்டுரைப்பிற் பெருகும். ஏறுதல் - உயர்தல். அகச் சமயமாறையும் தேவி விசேடமாகப் பாதுகாப்பவ ரென்பதை, "செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய, மறுவறு மரனிட மரபின் மேவியே, அறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய, இறை விதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்." என்னும் கந்தபுராணச் செய்யுளகத்து இவ்வகச்சமயமாறனையும் பிரித்தெடுத்து முன் னர் வைத்தோதி, ஏனைமுக்கூற்றுச் சமயங்களையும் பின்னர்ப் பிறவென் றொழிந்ததனானும் உய்த்துணர்ந்துகொள்க. இந் நான்கு கூற்றுச் சமயங்கட்கும் அப்பாற்பட்டது சைவசித்தாந்த சமயமென்பதையும் ஈண்டுத் தெளிந்துகொள்க. பரமனருள் இருநாழி நெற்கொண்டு எண்ணான்கறம் பாலித்த பெருநாயகி யென்புழிப் பரமனென்றது காஞ்சீபுரத்திலே, ஏகாம்பரநாதர் என்னும் திருநாமத்தோடு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை. ஒருநாழி அரைப்படியாகலின் இருநாழி என்றது ஒருபடியை. இவ்வறங்களைப் பரிபாலித்து அரசுமுறையாக வீற்றிருத்தலின், ஸ்ரீ காமாட்சியம்மையாரைப் பெருநாயகி என விசேடித்தார். இச்சரித்திர விரிவுகளைக் காஞ்சிப் புராணத்துட் காண்க. சர்வ நாயகி என்றது பராசத்தியை. கலுவம் என்பது இச்சதக நூலின் நாயகராகிய சந்திரமௌலீசரது ஆலயமிருக்கும் குறிச் சிக்கொருபெயர். குறிச்சி ஓரூரின் ஒரு சிறுபிரிவு. இங்ஙனம் வழங்குவது வீணகான புரவாசிகளின் பூர்வீக வழக்கம். இது நிலமட்டம் கற்பாறைமயமா யிருத்தலையுடையதோர் நிலமாக லின், கலுவமெனவும் பெயர்த்தாயிற்று. கல் பகுதி. அம் வினைமுதல் விகுதி. உகரம் சாரியை. பகுதியீற்று லகரம் உயிர் வருவழி இரட்டாமை புறனடையாற் கொள்க. இச்சொற் பின் வந்துழியும் இவ்வாறே கொள்க. இக்காரணம்பற்றி இச் சிவாலயத்தைக் கலுவத்திற் சிவன் கோயிலென வழங்குவர். பொறுமையெனப் பொருள்படும் சாந்தமென்னும் பண்புப் பெயர் நாயகியென்னும் வருமொழியோடு புணருமிடத்து ஈறு கெட்டுப் புணர்ந்து சாந்தநாயகி என்றாயிற்று. தம் அடியவர்

செய்யுங் குற்றத்தைப் பொறுத்தருளுபவர் என்பதாம். அதுவே மேலாகிய திருவருட் குணமென்பது "நற்றமிழ் வல்ல ஞானசம் பந்த னுவினுக் கரையனுளைப் போவானுங், கற்றசூதனற் சாக்கி யன் சிலந்தி கண்ணப்பன் கணம் புல்லனென்றிவர்கள், குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங் கொள்கைகண்டுநின் குரை கழலடைந்தேன், பொற்றிரண்மணிக் கமலங்கண் மலரும் பொய் கைசூழ் திருப்புன்கூருளானே." "வெறுப்பனவே செய் யுமென் சிறுமையைநின் பெருமையினுற் பொறுப்பவனே" என் னும் தேவார திருவாசகச் சுருதிகளானும், "கோவிலன்பர்க ளிழுக்கிய புரியினுங் குணனுக் கொண்டாளு மெம்பிரான்" என்னும் கந்தபுராணச் செய்யுளானும், "பொறையுடையவர்க் கலது புகழ்புனைத லுண்டோ" என்னும் பாரதச் செய்யுளா னும், இன்னும் இங்ஙனம் பரந்துவரும் பேரிலக்கியங்களானும் உணர்க. இனிச் சாந்தநாயகி என்னுந் தொகைநிலைத் தொட ரைக் கருமதாரய சமாசமென்பர் வடநூலார். கருமதாரயம் - பண்புத்தொகை.

ஈண்டுச் சந்திரமௌலீசர் என்றது, இருபத்தைந்து கேவல மூர்த்திகளுள் ஒருவராய்ச் சகளமூர்த்தியாய் மகேசுரதத்துவ புவனத் தெழுந்தருளியிருக்கும் மகேசுர சந்திரசேகரரையன்று; பஞ்ச சாதாக்கியங்களுட் கன்மசாதாக்கியமாகிய மகா சிவலிங்க மூர்த்தியாய்ச் சகள நிட்களராய் அம்மகேசுர புவனத்துக்கு மேற்பட்ட சாதாக்கிய தத்துவபுவனத்தி லெழுந்தருளியிருக் கும் மகா சதாசிவமூர்த்தியை என இவ்விருமூர்த்திகட்கும் தம் முள் வேறுபாடு தெரிந்துணர்ந்துகொள்க.

சாந்தநாயகிசமேதன் - சாந்தநாயகி தேவியாரோடு கூட விருப்பவர். சமேதம் - கூடுதல். ஐந்தொழில்விலாசன் - சிருட்டி முதலிய ஐந்தொழில் விளையாட்டையுடையவர்; விலாசம் - விளையாட்டு; அத்துணை இலகுவாய்ச் செய்பவர் என்பதாம். இலகுவாய்ச் செய்தல் - தமது சத்தி சந்நிதி மாத்திரையிற் செய்

தல். சந்த்ரபுர தலவாசன் - சந்திரபுரத்திலே வீற்றிருந்தருளு பவர். சந்திரபுரதலவாசனே என்னும் விளியை, தேவரீருடைய அளவற்ற கீர்த்திப் பிரதாபங்களுள்ளே தேவரீர் உடனின்றறி வித்தும் அறிந்தும் என் கன்மானுசாரமாக விளக்க, என் சிற் றறிவுக்கு விளங்கிய திருப்புகழ் சிலவற்றை இங்ஙனம் பாடித் துதிக்கும் ஒன்றற்கும் போதாப் புழுத்த நாயினுங் கடையே னாகிய தமியேனைத் திருவுளமிரங்கித் தடுத்தாட்கொண்டு தேவ ரீருடைய அரும்பெருந் திருவருட் பேற்றை அடியேற்குப் பிர சாதித்து இரட்சித்தருளுக என்னும் இத்தொடர்மொழிகளை இசை யெச்சத்தான் வருவித்து, அவற்றோடு முடிக்க. இவ்வாறு முடித்தலே ஆசிரியர் கருத்தென்பதனை முடிப்புரை விண்ணப்ப மாகிய இச்சதகவீற்றுச் செய்யுளிலே "நீயே கரந்து முடனாகி யும் வேறாயுநின் றெனை நடாத்து நிகிலம், நீயே செயுங்குற்ற மும் குணமதாக் கொண்டு நேயருக் கருள்புரிகுவாய், நிமிர்புன் புலக்கன் மனப்பதகனேன் சதக நிமல கொண்டாட் கொண்ட ருள்" எனக் கூறியதனானு முணர்க. இங்ஙன முடித்தலே யன்றி, இவ்விறுதிச் செய்யுளிலுள்ள நீயே என்பதனோடு சந்த்ர புர தலவாசனே யென்னும் விளியைக்கூட்டி முடித்தலு மொன்று. பெரும்பான்மையும் ஏனையவும் அன்ன. சில செய் யுட்கள் தம்முட்டாமே முடிவனவுமுள. (க)

## சந்திரமௌளீசர் ஆதிகாலத்திலே தைவிக லிங்கப் பெருமானென்பது.

இந்திரன் முதலும்பர் வந்தாறு திங்களினு
 மிம்பர்மூ விருதிங்களு
மிறைவர்நித் தியபூசை தவறா தியற்றிட
 விலங்குகே தாரமதனிற்
சுந்தரந் தந்துமதன் முந்துதா பித்திட்ட
 தொன்மகா லிங்கமுதலே

தூயயாழ்ப் பாணநல் லூர்ச்சிங்கை யாரியத்
தோன்றல்பின் னுட்கொணர்ந்தோர்
மந்திரந் தந்துபிர திட்டைசெய நல்லூரின்
மன்னுகயி லாயநாதா
மற்றதன் பின்னல்லை விட்டோர்மா முதலிதர
வந்திந்த நகர்மருவினுய்
சந்ததந் தமியனிடர் சிந்திடத் திருவருள்செய்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இந்திரன் முதல் உம்பர் வந்து ஆறு திங்களினும்- இந்திரன் முதலாகிய தேவர்கள் சுவர்க்கத்தினின்றும் வந்து புரட்டாதிமாதப் பூரணைமுதலாக ஆறுமாதமும்,—இம்பர் மூவிரு திங்களும் - இப்பூமியிலுள்ள மனிதர்கள் பங்குனி மாதப் பூரணைமுதல் ஆறுமாதமும்,—இறைவர் நித்தியபூசை தவறாது இயற்றிட - சிவபெருமானுக்கு நித்திய பூசையைச் சைவாகமவிதி தவறாமற் செய்யாநிற்ப,—இலங்கு கேதாரமதனில் - உலகெங்கும் பிரகாசித்துக்கொண்டிருக்கும் மகா சிவக்ஷேத்திரமாகிய திருக்கேதாரத்தின்கண்,—சுந்தரம் தந்து மதன் முந்து தாபித்திட்டதொன் மகாலிங்க முதலே - அலங்காரஞ்செய்து (கவுரியம்மையாரோடு) பூர்வகாலத்திலே மன்மதன் பிரதிட்டைசெய்து வழிபட்ட பழைய தைவிக மகாலிங்க முதல்வரே,—தூய யாழ்ப்பாண நல்லூர்ச் சிங்கை ஆரியத்தோன்றல் பின்னுள் கொணர்ந்து - ஏனைத் தேயங்கள் போலாகாது சைவசித்தாந்த அனுட்டானம் முதலிய எதுக்கனாற் பரிசுத்தமாகிய யாழ்ப்பாணநாட்டின் இராசதானியாகிய நல்லூரிலே சோழமகாராசாவின் திருக்குமாரராகிய சிங்கையாரியச் சக்கிரவர்த்தி யென்பவர், சற்றேறக்குறைய இரண்டா

யிரம் வருஷத்துக்குமுன் அத்திருக் கேதாரத்தினின்றுங் கொணர்ந்து;—ஓர் மந்திரந்தந்து பிரதிட்டைசெய - ஒரு சிவாலயஞ் சமைத்துப் பிரதிட்டை செய்விக்க,—நல்லூரின் மன்னு கயிலாய நாதா - அந்நல்லூரிலே திருக்கைலாய நாதரென்னுந் திருநாமத்தோடு வீற்றிருந்தருளினவரே,—அதன்பின் நல்லை விட்டு ஓர் மாமுதலி தர - அதன்பின் அந்நல்லூரைவிட்டு நீங்கி வன்னியசிங்க முதலியாரென்கின்ற ஒரு வேளாண் பிரபு கொணர்ந்து இங்கே கோயில்கட்டிப் பிரதிட்டை செய்வியா நிற்ப,—வந்து இந்த நகர் மருவினுய் - எழுந்தருளிவந்து மட்டுவிலாகிய இச்சந்திரபுரத்தின்கண்ணே கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கின்றீர்,—சந்ததம் தமியன் இடர் சிந்திடத் திருவருள் செய் - பிரதிதினமுந் தமியேனுடைய சனன மரணங்களுக் கேதுவாகிய வினைத்துன்பங்கள் சிதையும்படி திருவருள் பாலித்தருளும்,—சாந்தநாயகிசமேத - சாந்தநாயகி யம்மையாரோடு கூடியிங்கெழுந்தருளி யிருப்பவரே,—சந்த்ரமௌலீசனே- சந்திரமௌலீசரே,—ஐந்தொழில் விலாசனே - பஞ்ச கிருத்தியங்களாகிய லீலைகளைச் செய்கின்றவரே,—சந்த்ரபுர தலவாசனே - சந்திரபுரமாகிய சிவக்ஷேத்திரத்தில் எழுந்தருளி யிருப்பவரே. எ - று.

உலகெங்கும் பிரசித்திபெற்ற இமயமலையின் தென்பாரிசத்திலே திருக்கேதார மென்றொரு மகா சிவக்ஷேத்திரமுண்டென்பது யாருமறிவர். அது பனிக்காலத்திலே அதனுன் மூடப்படுவதாகலின், அக்காலத்தில் அங்கே மனிதர் சஞ்சரிக்க முடியாமையினுல், கார்காலத் திறுதியாகிய புரட்டாசிமாதப் பூரணைமுதல் ஆறுமாதமும் இந்திரன்முதலாகிய முப்பத்துமுக் கோடி தேவர்களும் சுவர்க்கலோகத்தினின்றும் வந்து திருக் கேதாரநாதரையும் அவருடைய திருவருட் சத்தியாகிய கௌரி தேவியையும் நாடோறும் பூசித்துச் செல்வார்கள். மற்றைப் பனிக்காலத் திறுதியாகிய பங்குனிமாதத்துப் பூரணைமுதல் ஆறு மாதமும் மனிதர்கள்போய் நாடோறும் பூசித்து வருவார்கள்.

இத்துணை மகத்துவமுடையது அத்திருக்கேதார தெய்வீக தல மென்க. இங்கே எழுந்தருளியிருக்கும் பரமதயாளுவாகிய கேதாரகௌரி தேவியினுடைய திருக்கரங்களிலே கருப்புவில் லும் பஞ்சபாணங்களுமிருக்கும்.

இவைகளைக்கொண்டு அத்தேவி ஆடவர்களையும் பெண் களையும் போகபோக்கியப் பொருள்களி லமிழ்த்தி அவர்களுக் குக் கன்மசாமியம் வரச்செய்து மோக்ஷத்துக்குப் பரிபக்குவர்க ளாகச் செய்தருளுவர். விட்டுணுவின் குமாரனாகிய மன்மதன் இவ்வில்லையும் பஞ்சபாணங்களையும் அத்தேவியிடத்தினின்றும் தான்பெற்று, இவ்வுத்தியோகத்தை உலகிற்குத் தானே செய்து வரும்படி இச்சித்து, அத்தேவி சந்நிதியிலே மற்றொரு கௌரி தேவியையும் ஒரு சிவலிங்கப் பெருமானையும் வேறாகத் தான் நிருமித்துச் சிவாகமவிதிப்படி பிரதிட்டைசெய்து அவ்விரு மூர்த்திகளையும் பூசித்து நெடுங்காலம் வழிபட்டுத் தவஞ்செய்து அத்தேவி திருவருளினாலே அவ்வில்லையும் புஷ்பபாணங்களை யும் பெற்று, அத்தேவியானவர் மன்மதனாகிய தன்னை அதிட் டித்துச் சூக்குமமாய்நின்று அத்தொழிலை நிகழ்த்த, தான் தூல மாய் நின்று நடாத்தும் வரம் பெற்றுத் தன்னிடஞ் சென்று அவ்வுத்தியோகத்தி லமர்ந்தனன். தேவவர்க்கத்தவனாகிய மன் மதன் நிருமித்துப் பிரதிட்டைசெய்து பூசித்தமையால், இம் மகாலிங்கம் தைவிகலிங்கமாமென அறிக. இஃதிங்ஙனமாக; இக்கலியுகத்திலே இற்றைக்குச் சற்றேறக்குறைய இரண்டா யிரம் வருடங்களுக்குமுன்னே சோழமகாராசாவின் புத்திர னொருவன் ஸம்ஸ்கிருதம் படிக்கும்படி மிகவும் உத்தரத்துள்ள கௌடதேயத்திற்குப்போய், அங்கே படித்துக்கொண் டிருந் தான். அவன் அங்குநின்றும் அப்படிப்பை முடித்துக்கொண்டு சோழநாட்டிற்குத் திரும்பும்போது அதற்கு மிகவும் உத்தரத் தேயுள்ள திருக்கேதாரத்துக்குச் சென்று சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருக்கும்போது அத்தலத்தில் ஆசைமிக்கோங்கி அன்புமீக்கூர்ந்து அதைவிட்டுப் பிரிய மனமில்லாதவனாய்ச் சில

மாதமிருந்து பின்பு புறப்படும்போது மேலேகூறிய தைவிக மகாலிங்கப்பெருமானை எடுப்பித்துக்கொண்டு தன் வீடுவந்து சேர்ந்து அம்மகாலிங்கத்தை உடனே ஒரு சிறு கோயில்கட்டி அதிற் பிரதிட்டை செய்வித்துத் தரிசனம்பண்ணி மனம் ஆறுதலடைந்திருந்தனன்.

அதன்பின்பு அவ்வரசிளங்குமரன், பாண்டிய ராசாவினுடைய இராசதானியாகிய மதுராபுரியிலே ஒரு விசேஷ தனுநூலாசிரியன் வந்திருந்து பாண்டியராசாவின் புத்திரர்களுக்கு வில்வித்தை முதலியவைகளை விசேடமாகப் பயிற்றுவிக்கின்றானென்று கேள்விப்பட்டுத் தந்தையின் அநுமதியுடன் அங்கே போய்ப் பாண்டியனைக்கண்டு அவனுடைய நட்புப்பெற்று அவன் கீழிருந்து அவ்வின்னூலாசிரியனிடத்து வில்வித்தை முதலியவைகளை அதிதீவிரமாகக் கற்றுக்கொண்டிருந்தனன்.

இதுநிற்க. சோழமண்டலத்துள்ள பொன்பற்றியூரிலிருந்து யாழ்ப்பாணம் சென்று சேதிராயன் மரபிற்பிறந்த ஒரு கன்னியை விவாகம்புரிந்துகொண்டு திருநெல்வேலியிற் குடிபதியாயிருந்த மழவராயனென்பவன் யாழ்ப்பாணம் அரசின்றிச் சீரழிவதைக்கண்டு ஓரிராசகுமாரனைத் தேடும்படி தன் சோழநாட்டிற்சென்று விசாரிக்கும்போது, அங்கே சோழராசாவின் புத்திரனொருவன் மதுரையிலே படைக்கலக்கல்வி பயின்றுகொண்டிருப்பதை அறிந்து, அவன் பிதாவாகிய சோழமகாராசாவின் சம்மதத்தோடு மதுரையிற்போய்த் தான்வந்த செய்திகளனைத்தையும் பாண்டியராசாவுக்கு விவரமாகத் தெரிவித்தனன்.

பாண்டியன் படைக்கலவித்தையில் முதன் மாணாக்கனாய் விளங்கும் அவ்வரசிளங்குமரனைத் தன்முன் வருவித்து, மழவராயன் தனக்குத் தெரிவித்த விஷயங்களையெல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரிவித்து அவன் அதற்குப் பூரணவிருப்பத்துடன் உடன்பட்டதுகண்டு, ஒரு சுபமுகூர்த்தத்திலே அவனையும் அவன் மனைவியையும் வேண்டும் பரிசனங்களையும் ஒரு சிறு

சேனையையும் திரவியத்தையுங்கொடுத்து மழவராயனோடு அனுப்பினன். அவ்விராசகுமாரன் புறப்பட்டுத் திருவாரூரை யடைந்து, தன் பிதாவாகிய சோழமகாராசாவோடு கலந்து அவனது பூரண அநுமதியும்பெற்று, தந்தைகொடுத்த பலவரிசைகளோடும் மழவராயனோடும் புறப்பட்டுக் கோடிக்கரை மார்க்கமாக யாழ்ப்பாணத்திலிறங்கி நல்லூரை யடைந்தான். அடைந்த அவன் அந்நல்லூரில் ஓர் அரண்மனை கட்டுவித்து, அவ்வூரை அழகிற்சிறந்தவொரு நல்ல இராசதானியாக்கி, தன்னுயிர்த்துணைவனும் உயர்தரவேளாண் பிரபுவுமாகிய அம்மழவராயன் முடிதூக்கிக்கொடுக்கத் தன்னுடன்வந்த கங்காதரக் குருக்களால் இரத்தினகிரீடமும் சிங்கையாரியச் சக்கிரவர்த்தி என்னும் பட்டமும் சூட்டப்பெற்றுச் செங்கோலோச்சி அரசியற்றுவானாயினன்.

சிவபத்திமானும் சிவபூசா துரந்தரனுமாகிய அவ்வரசன் அதன்பின்பு தன் இராசதானியாகிய நல்லூரிலே ஒரு சிவாலயங் கட்டத் தீர்மானஞ்செய்து, தன் அரண்மனைக்குள்ளே, இப்போது இங்கிருக்கும் கைலாயநாதபிள்ளையார் கோயிலுக்கு ஒரு சிறிது மேற்கே கோயிலுக்கு நிலநியமனஞ்செய்து தொடங்கிக் கட்டி முடிக்குஞ் சமயத்தில் தான் முன்னே திருக்கேதாரத்தினின்றும் பெருவிருப்போடுங் கொணர்ந்து, சோழநாட்டிலே தம் அரண்மனைக்கருகே ஒருசிறு கோயிலிற் பிரதிட்டைசெய்து வைத்த மன்மத மகாலிங்கத்தை அனுப்பும்படி தன் பிதாவுக்குத் திருமுகமனுப்பி, வருவித்து, அதை மேற்படி ஆலயத்திலே நல்ல சுபமுகூர்த்தத்திலே கைலாயநாதர் கைலாயநாயகி என்னும் திருநாமகரணங்களோடு ஸ்ரீ வெள்ளியங்கைலாயகிரியிற்போலச் சைவாகமவிதிப்படி வெகு ஆடம்பரத்துடன் பிரதிட்டைசெய்வித்து, வழிபட்டுவந்தான். இக்காரணத்தாலும், கைலாயநாத சுவாமியின் திருவுளப்பாங்காலும் ஸ்ரீ வெள்ளியங்கைலாயகிரி முதலாவதும், ஸ்ரீ சிதம்பரம் இரண்டாங்கைலையுமாக, இந்நல்லூர் மூன்றாங் கைலையாயிற்று. இச்சிவாலயத்தின்

கீழைக்கோபுரவாயிற் பிள்ளையார் கோயில் இப்போதும் கைலாய நாதபிள்ளையார் கோயிலென வழங்கப்பெறுவதும் அறிக.

இச் சிங்கையாரியச் சக்கிரவர்த்தியின் மகன் குலோத் துங்க சிங்கையாரியன். இவன் மகன் விக்கிரம சிங்கையாரி யன். இவன் மகன் வரோதய சிங்கையாரியன். இவன் மகன் மார்த்தாண்ட சிங்கையாரியன். இவன் மகன் குணபூஷண சிங்கையாரியன். இவன் மகன் வீரவரோத சிங்கையாரியன். இவனுக்கு நெடுங்காலத்தின் பின்னர் வந்து அரசியற்றினவன் சயசிங்கையாரியன். இவன் காலத்திற்ருன், நல்லூர்க் கந்த சுவாமிகோயில், இவனுக்கு மந்திரியாக மதுரையினின்றும் வந்த புவனேகுவாகு என்னும் பட்டப்பெயருடைய நீலகண்ட ஐயராற் கட்டுவிக்கப்பட்டது. "இலகிய சகாத்தமெண்ணூற் றெழுபதாமாண்டினெல்லை, யலர்பொலி கமலமார்ப ஞம்புவ னேகுவாகு, நலமிகுயாழ்ப்பாணத்து நகரி கட்டுவித்து நல் லைக், குலவிய கந்தவேட்குக் கோயிலுங் குயிற்றிஞனே." இவ னுக்குச் சிலகாலத்தின்பின் குணவீர சிங்கையாரியச் சக்கிர வர்த்தி. இவனுக்குப்பின் இவன் தம்பி ஆரிய சக்கிரவர்த்தி. இவன்பின் குணவீர சிங்கையாரியன் மகன் கனகசூரிய சிங்கை யாரிய சக்கிரவர்த்தி. இவன்மகன் சிங்கைப் பரராசசேகரன். இவன்மகன் பரநிருபசிங்கன். இதன்பின் பரராசசேகரனுக்குக் காமக்கிழத்தியாக மணக்குடியிலிருந்து வந்த மங்கத்தம்மாள் மகன் சங்கிலி. கொடுங்கோலரசஞகிய இச் சங்கிலி பறங்கிக்கார ராற் கொலைசெய்யப்பட்டிறந்த பின்னர்ச் சற்றேறக்குறையக் கிறீத்தவருடம் ககூ௲0-ம் ஆண்டளவிலே பறங்கிக்காரர் ஆதி சிங்கையாரியச் சக்கிரவர்த்தியினது அரண்மனையை இடித்தழிக் கத் தொடங்குந்தினத்துக்கு இரண்டொரு தினத்துக்குமுன் இதனைக் கேள்விப்பட்டறிந்த கைலாயநாத கோயிற் குருக்கள் மனம் நடுநடுங்கிக் கண்ணீர்விட்டழுது அன்றிராத்திரி அதிசீக் கிரம் கோயிற்பூசையை முடித்துவிட்டு, மேலிடம் பனைமட் டைப்படலமைத்துத் தென்னைமரச் சிற்றுருளை பூட்டிய ஒரு

வண்டியிலே அத்தயாமமளவிலே கைலாயநாத சுவாமியாகிய சிவலிங்கப் பெருமானையும் தேவியையும் எடுத்துவைத்து இந் நல்லூருக்கு வடகிழக்கே பத்துமைல் தூரத்துள்ள மட்டுவி லென்னும் தம்மூருக்குக் கொண்டுபோகக்கருதி, அவ்வண்டியை இழுக்க, அது பாரம் மிகுந்து தம்மாலிழுக்க முடியாமையினால், கைலாயநாயகியாகிய அத்தேவியின் திருவுருவை மீள அவ் வண்டியினின்றும் இறக்கி, அக் கோயிற்றீர்த்தக் கிணற்றுக் குள்ளே மெல்ல இறக்கிவிட்டுச் சிவலிங்கத்தைமாத்திரம் அதி சீக்கிரம் அவ்வண்டியோ டிழுத்துக்கொண்டுபோய் அதிகாலை யில் இருட்டிருக்கும்போதே அம்மட்டுவிலையடைந்து, அங்கே செங்கற்றிருப்பணியாய் நெடுங்காலத்துக்கு முன்னெட்டிருந்து புதுக்குவாரின்றிக் கிலமடைந்திருந்த பழைய சிவாலயத்தின் திருமஞ்சனக் கிணற்றுக்குள்ளே இம்மன்மத சிவலிங்கப்பெரு மானை யாரும் அறியாத பிரகாரம் மெல்ல இறக்கித் தீர்த்தத் துண் முழுகவிட்டு அதன் பக்கத்துள்ள தம் வீட்டிலே உதய காலத்திற் போய்ச் சேர்ந்தனர்.

சிலகாலத்துக்குள்ளே அக்குருக்கள் காலமும் அப்பறங்கிக் காரர் இராச்சியபரிபாலனகாலமும் ஒழிந்தபின், ஒருதினம் அப் பழங்கோயிற் சந்நிதானத்துக்கெதிரே சமீபத்திற் குடியிருக்கும் * வன்னியசிங்க முதலியார் என்பவரது சொப்பனவத்தையின் கண்ணே அத்தைவிகலிங்கப்பெருமான் தோன்றி, அப்பழைய கோயிற்றானத்தில் ஒரு புதுக்கோயிலை வைரக்கற்றிருப்பணி யால் செய்வித்து அதிலே அக்கிணற்றுக்குள் இருக்கும் தம்மை எடுத்துப் பிரதிட்டைசெய்யும்படி ஆஞ்ஞாபித்து மறைந்தருளி னர். மறைந்தருளுதலும், அவ்வன்னியசிங்க முதலியார் விழித்

* யாழ்ப்பாணத்துக்குத் தென்கிழக்குத் திக்கிலுள்ள வன்னிய நாட்டை, அதிகாரி யுத்தியோகம்பெற்றுப் பரிபாலனஞ் செய்துவந்த காரணத்தினால் இவருக்கு வன்னியசிங்கமுதலியார் எனப் பட்டப் பெயர் உளதாயிற்றென அறிக.

தெழுந்து தாம் கண்ட சொப்பனத்திற்கு மிகவும் மகிழ்ந்தும் இரங்கியும் இருந்து விடிந்தவுடன் வேலைக்காரரை உடன் கொண்டு சென்று தூர்ந்து நிலமாய்க்கிடந்த அத்திருக்கிணற்றை மெதுவாகக் கல்லுவித்து சுவாமியிருக்கக் கண்டு பேரானந்தத் தோடும் எடுத்து வெளியிற்கொணர்ந்து பிராயச்சித்த முதலி யன செய்வித்து, ஓர் சிற்றாலயத்துட் பிரதிட்டை செய்து நித் தியபூசை முதலியவற்றை நடப்பித்துக்கொண்டு, சுவாமி ஆஞ் ஞாபித்தருளிய பிரகாரமே ஆலயங்கட்ட முயன்று அவ்வூரிலும் அடுத்த சுற்றுக்கிராமங்களினும் மற்றும் பிறவிடங்களினும் தாமும் தம் சிநேகர்களும் வெகு பிரயாசப்பட்டுத் திருப்பணிப் பணம் யாசித்தும், தாமாகவே உபகரித்தவர்கள்பாற் பணம் பெற்றும் இற்றைக்குச் சற்றேறக்குறைய நூற்றெண்பது வரு டங்களுக்குமுன் கட்டி முடித்து, அச்சிவாலயத்திற் சிவாகம விதிப்படி அம்மன்மதலிங்கத்தையும், அம்மையையும் தாபிக்கப் புகுங்கால், அப்பெருமான் தமக்குத் திருவாய்மலர்ந்தருளியபடி சந்திரமௌலீசர் சாந்தநாயகியம்மை என்னும் திருநாமங்க ளுடன் பிரதிட்டை செய்வித்தனர். மட்டுவில் எனப் பெயர் வழங்கப்பட்ட அவ்வூர்க்கும் அன்றுமுதல் சந்திரபுரம் என அப்பெருமான் திருநாமத்துக்கியைய அவர் அருளியபடியே திருநாமமுஞ் சூட்டினர். இம்முதலியாராலேயே மார்கழிமாசத் திருவெம்பாவைப் பூசாகாலத்தில் மகோற்சவமும் ஆரம்பித்து வருடந்தோறும் நடத்தப்பட்டது. இதுவே இத்தைவிக மகா லிங்கம் இத்தலத்தின்கண் வந்த வரலாறெனை அறிக



## நூல்.

முதலாவது

# பொதுப் பிரகரணம்



அஃதாவது இலங்கை யாழ்ப்பாணம் என்னும்
இரண்டற்கும் பொதுவாயுள்ள விஷயங்களின் பிரிவு.

### சுத்தாத்துவித சைவசித்தாந்தம்.

மிக்கபிர மாணங்க டிரிவித விலக்கணமு
மேவுபிர மேயமாகி
மிளிர்பாச பசுபதி யிலக்கண விகற்பமுநன்
மெய்ச்சரியை கிரியைமேன்மை
தொக்கசிவ யோகமொடு சிவஞான சாதனத்
தொல்சதுட் டயமுநாலோர்
சொல்பரம சாலோக முதனான்கு சாத்தியத்
தொடர்புமிவை பொருநபிறவும்
பக்கநிகர் பக்கமொடு வருவிபக் கங்களிற்
பட்டுப்ப டாதமுடிவைப்
பரவுசுத் தாத்துவித சைவசித் தாந்தப்
பரப்பென்பர் பருணிதர்பரை
தக்கசிவ காமசுந் தரிதுக்க நிக்கிரகி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மிக்க பிரமாணங்கள் திரிவித இலக்கணமும் - தார்க்கிகர் கூறும் பலதிறப் பிரமாணங்களுள்ளும் மேம்பட்ட பிரத்தியட்சம், அனுமானம், ஆகமமென்னும் பிரமாணங்கள் மூன்றன் வேறுபாட்டிலக்கணங்களும்,—மேவு பிரமேயமாகி மிளிர் பாச பசு பதி இலக்கணவிகற்பமும் - அப்பிரமாணங்களான் அறியற்பாலனவாகிய பிரமேயங்களாய் விளங்குகின்ற பாசம், பசு, பதி என்னுந் திரிபதார்த்தங்களின் இலக்கண வேறுபாடுகளும்,—நல் மெய்ச்சரியை கிரியை மேன்மை தொக்க சிவயோகமொடு சிவஞான சாதனத் தொல் சதுட்டயமும் - நல்ல உண்மைச்சரியையும் உண்மைக்கிரியையும் இவற்றின் மேம்பட்ட சிவயோகத்துடனே சிவஞானமுமாகிய பழைய சாதன சதுட்டயங்களும்,—நூலோர் சொல் பரம சாலோகமுதல் நான்கு சாத்தியத்தொடர்பும் - மாசற்ற நூலுடையார் பிரதிபாதிக்குஞ் சிவசாலோக சாமீப சாரூப சாயுச்சியமாகிய சாத்திய சம்பந்தங்களும்,—இவை பொருந பிறவும் - இவைபோல்வன பிறவும்,—பக்க நிகர்பக்கமொடு வருவிபக்கங்களிற் பட்டுப் படாத முடிவை - பக்கசபக்கங்களிலே அகப்பட்டு விபக்கத்திலே அகப்படாத தீர்மானந்தன்னையே,—பரவு சுத்தாத்துவித சைவசித்தாந்தப் பரப்பு என்பர் பருணிதர் - வேதாந்தத்தினும் துதிக்கப்படும் சுத்தாத்துவித சைவசித்தாந்தத்தின் விரிந்த தீர்மானமென்று கூறுகிறப்பர் மகாவித்துவ புருஷர்கள்,—பரை - பராசத்தியும்,—தக்கசிவகாமசுந்தரி - தகுதியாகிய சிவகாமசுந்தரிதேவியும்,—துக்க நிக்கிரகி - தம் மெய்யடியவர்களது சனனமரணத் துன்பங்களைப் பற்றறக் களைந்தழிப்பவருமாகிய,—சாந்தநாயகி சமேத - சாந்தநாயகி யம்மையோடுகூடியெழுந்தருளி யிருக்கின்றவரே,—சந்த்ரமௌலீசனே - சந்திரமௌலீசரே,—ஐந்தொழில் விலாசனே - பஞ்சகிருத்தியங்களாகிய அநாதி நித்தியத் திருவிளையாட்டை யுடையவரே,—சந்த்ரபுர தலவாசனே - சந்திரபுரமாகிய சிவக்ஷேத்திரத்தை வாசஸ்தானமாக வுடையவரே. எ - று.

இச்செய்யுளிற் கூறிய பிரமாணங்களும், அவற்றி லறி யப்படும் பிரமேயங்களும், உண்மைச்சரியை முதலிய சாதனங் களும், சிவசாலோகமுதலிய சாத்தியங்களும், பக்க சபக்க விபக்க லக்கணங்களும் முதலிய இன்னோரன்ன பிறவற்றை யெல்லாம் முறையானே தர்க்கநூல்களினும், சிவஞானசித்தி யார் முதலிய சைவசித்தாந்த நூல்களினுங் குருமுகமாகக் கேட் டறிந்துகொள்க. ஈண்டு விரிப்பிற் பெருகுமாதலின் அமைக. ()

## ப தி.

நித்தனிர் வியாபகனெர் நிட்களங் கன்சோதி
நிகமாக மங்கடந்தோ
னித்தியா னந்தன் பரப்பிரம மேவிபு
நிராமயான் மாவநாதி
முத்தனைந் தொழில்களு மியற்று தியற்றியிடு
முழுமுத லநாதிபோதன்
முத்திமா முதலகில காரணன் பரமேட்டி
முதலுணை நிமித்தமில்லான்
சுத்தன்வி சுத்ததே கத்தனந் தரியாமி
சொல்சிதா காசரூபி
சுவதந்தி ரன்மகா தேவனே யருளாழி
தொல்பரம சிவனேபதி
சத்தியஞ் சத்யமுக் காலுமிது சத்தியஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நித்தன் - அநாதி நித்தியரும்,—நிர்வியாபகன் - சர்வவியாபகரும்,—நிட்களங்கன் - பாபரகிதரும்,—சோதி - நிர்

மலவொளி வடிவினரும்,—நிகம ஆகமங்கடந்தோன் - வேதாக மங்கட் கதீதரும்,—நித்தியானந்தன் - சதாநந்தரும்,—பரப்பிர மம் - பரப்பிரமமும்,—விபு - ஐசுவரிய சம்பந்நரும்,—நிராம யான்மா - சனனமரண நோயற்ற பரமான்மாவும்,—அநாதிமுத் தன் - அநாதிமல முத்தரும்,—ஐந்தொழில்களும் இயற்றுது இயற்றியிடும் முழுமுதல் - சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங் களையும் நேரே தாஞ் செய்யாது தஞ் சந்நிதிமாத்திரையிற் செய் தருளும் முழுமுதல்வரும்,—அநாதிபோதன் - அநாதி நிர்மல ஞானவந்தரும்,—முத்தி மாமுதல் - அதிதீவிர பக்குவான்மாக் களின் முத்திக்கு வித்தாயுள்ளவரும்,—அகில காரணன் - சர் வத்திற்கும் மூலகாரணரும்,—பரமேட்டி - மேலான யாகத்திற் குரியவரும்,—முதல் துணை நிமித்தம் இல்லான் - முதல்துணை நிமித்த மென்னும் முக்காரணங்களுக்கும் முதற்காரணமாகி அவைகள் தமக்கில்லாதவரும்,—சுத்தன் - தூயரும்,—விசுத்த தேகத்தன் - விசேஷமாகிய சுத்தம் பொருந்திய அருட்டிரு மேனியை யுடையவரும்,—அந்தரியாமி - எவற்றுக்குமுள்ளே வசிப்பவரும்,—சொல்சிதாகாசரூபி - புகழ்ந்து சொல்லப்படும் ஞானகாசமாகிய ரூபத்தை யுடையவரும்,—சுவதந்திரன் - தம் வய முடையவரும்,—மகா தேவன் - மகாதேவரும்,—அருள் ஆழி - சிவகாருண்ணிய சமுத்திரமுமாகிய,—தொல் பரம சிவ னே பதி - பழைய பரமசிவனொருவரே உலகத்துக்கு முழுமுதற் கடவுள்,—சத்தியம் சத்தியம் இது முக்காலும் சத்தியம் - இது சத்தியம்! சத்தியம்!! முக்காலும் சத்தியம்!!! சாந்த நாயகி சமேத. எ - று.

நிர்வியாபகன் என்பதனை நிருக்தி, நிர்வாகம், நிர்மூடன் என்பன போலக் கொள்க; ஆணவமலத்தாற் றடுக்கப்படும் ஆன்மவியாபகம்போலாகாது, இச்சிவவியாபகம் நிரந்தர வியா பகமென்பது விளக்கிய நிர்வியாபகனென விசேடித்தார். நிர் என்னும் உபசர்க்கம் ஈண்டு அதிகமென்னும் பொருட்டு; இன் மைப் பொருட்டன்று. வேதாகமங்கடந்தோன் என்பதற்கு

இரட்டுற மொழிதலால், வேதாகமங்களை உலகத்துக்குத் தந்த வர் என்றும் பொருளுரைத்துக் கொள்க. (உ)

## மகேசுர மூர்த்தங்கள் இருபத்தைந்து.

கலைமதி தலைக்கொளுங் கடவுண்மா தங்காரி
காமாரி திரிபுராரி
கல்யாண சுந்தரனு மாமகே சன்காள
கண்டன் சலந்தராரி
அலைவில்பிச் சாடனன் கயமுகா னுக்கிரக
னர்த்தநா ரீசுரனரி
யர்த்தனிட பாரூட னேசபா பதிவீர
பத்திரனொ டந்தகாரி
சலமறு கிராதனே சண்டேச னுக்கருள்செய்
சாமிகங் காளனேக
தாளன் சுகாசீன னுமைகந்த ரொடுகூடி
சக்கரப் பிரதானையைந்
தலைவர்தாந் தக்கிணா மூர்த்திலிங் கோற்பவன்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். கலை மதி தலைக் கொளும் கடவுள் - ஒருகலையா கிய பிறைமதியைத் திருமுடியிற் றரித்தருளுஞ் சந்திரசேகர ரும்,—மாதங்காரி - யானையைத் தோலுரித்தவரும்,—காமாரி - மன்மதனைத் தகித்தவரும்,—திரிபுராரி - முப்புரதகனஞ் செய் தவரும்,—கல்யாண சுந்தரன் - கல்யாணசுந்தரரும்,—உமாமகே சன் - உமாமகேசுரரும்,—காள கண்டன் - ஸ்ரீகண்டரும்,— சலந்தராரி - சலந்தராசுரனைக் கொன்றவரும்,—அலைவில் பிச்

சாடனன் - தேவதாருவனத் திருடிகளாற் சிறிதும் வருந்துத லில்லாத பிச்சாடன மூர்த்தியும்,—கயமுகானுக்கிரகன் - கய முகனுக்கு அனுக்கிரகஞ் செய்தவரும்,—அர்த்தநாரீசுரன் - பாதித்திருமேனி உமாதேவியாகவுடையவரும்,—அரியர்த்தன் - விட்டுணுவைப் பாதித்திருமேனியாகவுடைய சங்கரநாராயண ரும்,—இடபாரூடன் - தருமதேவதையாகிய இடபத்தை வாகன மாகக் கொண்டெழுந்தருளினவரும்,—சபாபதி - ஸ்ரீ சிதம்பர சிற்சபை முதலிய பஞ்சசபைகளுக்கும் அதிபதியும்,—வீரபத் திரன் - வீரபத்திரரும்,—அந்தகாரி - அந்தகாசுரனைக் கொன்ற வரும்,—சலம் அறுகிராதன் - அருச்சுனன் பொருட்டுக் கோப மென்பதொரு சிறிதுமில்லாத கிராதவடிவத்தைக் கொண்டவ ரும்,—சண்டேசனுக்கு அருள் செய் சாமி - சண்டேசுரநாயனா ருக்குப் பூரணானுக்கிரகஞ் செய்தருளிய சகல சம்பத்துமுடைய வரும்,—கங்காளன் - சங்காரகாலத்தில் விஷ்ணுவினது முழு வெலும்பைச் சூலத்தலையிற் றரித்தவரும்,—ஏகதாளன் - ஒரே திருப்பாதத்தை யுடையவரும்,—சுகாசீனன் - சுகாசீனரும்,— உமைகந்தரொடு கூடி - சோமாஸ்கந்த மூர்த்தியும்,—சக்கரப் பிரதன் - சலந்தராசுரனைக் கொன்ற சக்கரத்தை விஷ்ணுவுக் குக் கொடுத்தவரும்,— தக்கிணாமூர்த்தி - தக்ஷிணாமூர்த்தியும்,— லிங்கோற்பவன் - லிங்கோற்பவரு மாகிய,—ஐயைந்தலைவர் - இருபத்தைந்து மூர்த்தங்களும் மகேசுர வடிவங்களாம்,—சாந்த நாயகி சமேத. எ - று.

ஆசிரியர் இந்நூலான் எதிர்முகஞ் செய்தெடுத்துக்கொண்ட மூர்த்தி சதாசிவமூர்த்தியாயினும், அவர் பரியாய திருநாமமாகிய சந்திரமௌலீசர் என்பது இருபத்தைந்து மகேசுர மூர்த்தங்க ளுள் ஒன்றாகிய சந்திரசேகரர் என்னுந் திருநாமத்தோடொத்து வருதலின், அவ்வொப்புமைபற்றி, அச்சந்திரசேகர மூர்த்தத்தை இச்செய்யுளின் முதலிற்றந்து கூறினாரெனவறிக. ஐயைந்தலை வர்-இருபத்தைந்து மகேசுரவடிவினர். ஐந்தென்னுமெண்ணுப் பெயரினீறு விகாரமாயிற்று. அரி-பகைவர். லிங்கோற்பவர்-

வைரவமூர்த்தி. ஈண்டிலிங்க மென்றது திருவண்ணுமலையை. இம்மலை பிளக்க, அப்பிளப்பினின்றுந் தோன்றிச் சிவபெருமானை இகழ்ந்த பிரமாவினது உச்சிச்சிரசைக் கிள்ளித் தண்டித்தவர் வைரவக்கடவுள் என அறிக. சுகாசீனர்-நன்கிதாக இருப்பவர்; ஆசீனம்-இருத்தல்.

இக் கேவல மூர்த்தங்கள் இருபத்தைந்தும் மேலைச் செய்யுளிற் கூறிய பதிப் பொருளின் அருட்டிருமேனி விகற்பங்களாதலின், அவற்றையும் ஈண்டுத்தந்து கூறினுரென வுய்த்துணர்ந்து கொள்க. (௩)

## தசமகோற்சவ தாற்பரியம்.

விழாவொன்று தூலம் விடுத்தற் பயத்தது
 விழாவிரண் டடைவிரண்டும்
விள்ளற் பயத்தமூன் நாள்விழா வினைமுதன்
 மும்மையா மெழுமைவிட்டல்
விழாநான்கு நாற்கரண நால்வகைத் தோற்றம்
 விடுத்தலைந் தாநாள்விழா
விரவுமைம் பொறியைந் தவத்தைமல மைந்தும்
 விலக்கன்மூ விருநாட்டிரு
விழாகாம மாதிகலை யாதிபத முத்திகள்
 வினைக்குணமவ் வாறும்வீய்த்தல்
விழாவேழு சனனங் கலாதிமா யாமல
 விதங்களெவ் வேழும்வேறல்
தழாதுனத டித்தலஞ் சனனமி திழந்தெனே
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

களம் என்னும் வடிவமூன்றும்,—முத்தொழில் - சிருட்டி முத லிய முத்தொழிலும்,—மூன்றிடத்து உறைதல் என்னும் - தன்மை முதலிய மூன்றிடத் திருத்தலுமாகிய,—ஒன்பதும் இலை எனல் - ஒன்பதும் இல்லையென்பதைக் குறிப்பிப்பதாம்,— பண்ணு பத்தாம் நாள் விழா - செய்யப்படும் பத்தாநாட்டிரு விழா,—பரானந்தமாப் பரவையிற் படிதல் பயனும் - சிவானந்த மாகிய பேரின்ப சாகரத்திற் படிதலைப் பயனை உடையதாம்,— பத்துநாளின்மேல் விழா இல்லை - பத்துநாட் டிருவிழாவுக்கு மேலே திருவிழாவே யில்லை,—விம்பதந்திரம் ஈது பகரும் - விம்பதந்திரமென்னும் உபாகமம் இதனை வரையறுத்துக் கூறும்,—பத்துநாள் விழாக் காட்டு காரிய விரிவினை அதனிற் கண்ணுரவே காணலாம் - பத்துநாட்டிருவிழாக்களுங் குறித் துக்காட்டுங் காரிய விரிவுகளை அவ்வுபாகமத்திலே பிரத்தி யட்சமாகக் கண்டறிந்துகொள்ளலாம்; அதுநிற்க,—கழறிடும் மகோற்சவத்து - இங்கே சொல்லப்பட்ட மகோற்சவ தினங் கள் பத்திலும்,—ஒருகாலை பகலுண்டு விரதம் காத்தல் கடன தாம் - ஒருவேளை பகற்காலத்தில் மாத்திரம் போசனஞ்செய்து அம்மகோற்சவவிரதத்தைக் காமக்குரோதாதிகளாற் பங்கமுறா மற் பாதுகாத்தநுட்டித்தல் நம்மவர்களுக்கு முக்கிய கடமை யாம்;—தண் ஆர் தரும் கொன்றையாய் - குளிர்ச்சி பொருந்திய கொன்றைமலர் மாலையைத் தரித்தவரே,—பொன்றிடாமுன் அருள் - தமியேனுக்கு இவ்வுடம்பிறந்து நீங்குதற்குமுன்னே பூரணானுக்கிரகஞ் செய்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

ப௬.

அநாதியே யாய்வியா பகமுமாய்ச் சேதனமு
மாகியான் மாக்களளவற்
றறிவரும் பாசதடை யுடையரா யாங்காங்
கடைந்ததன் வண்ணமாகி

மனுதியாஞ் சரீரந் தொறும்வேறு வேருய்
  மயக்கத்தி ஞலிருவினை
மாருது செய்தவ் வினைப்பயன் களைநுகரு
  மரபுசிற் றறிவுதொழில்கொண்
டெனுதியா னென்னுஞ் செருக்குறுந் தூலமொ
  டிலங்குருக் குமரன்கெடுத்
தெழுபிறப் புடையரா யிம்மைமறு மையிஞேடு
  மெய்தரிய வீடுமடைவார்
சனுதனு தியர்தமக் கத்துவித முத்தியருள்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ-ள். ஆன்மாக்கள் - பசுக்களாகிய ஆன்மாக்கள்,—அநாதியேயாய் - தாமும் பதியைப்போல அநாதியேயுள்ளனவாய்,—வியாபகமுமாய் - எங்கும் வியாபகமுமாய்,—சேதனமுமாகி - அறிவுடைய பொருள்களுமாகி, — அளவற்று - எஞ்ஞான்றும் ஓர் தொகையின் வரையறைக்குள் அகப்படாதனவுமாகி,—அறிவு அரும் பாசதடை உடையராய் - தம்மை அறிந்து கோடற்கரிய பாசங்களினுலே தடுக்கப்பட்ட சிற்றறிவுஞ் சிறுதொழிலும் உடையவராகி,—ஆங்காங்கு அடைந்ததன் வண்ணம் ஆகி - அங்கங்கே எடுத்துக்கொண்ட உடம்பின் மயமேயாகி,—மனுதியாம் சரீரந்தொறும் வேறுவேருய் - மனம் முதலிய கருவிக்கொத்துக்களைக் கொண்ட ஒவ்வொரு சரீரங்கட்கும் ஒவ்வோர் ஆன்மாவாகி,—மயக்கத்தினுல் இருவினை மாருது செய்து - மயக்கத்தினுலே இருவினைகளையும் ஒழியாமலே செய்து,—அவ்வினைப் பயன்களை நுகரும் மரபு சிற்றறிவு தொழில் கொண்டு - அவ்விருவினைப் பயன்களாகிய சுகதுக்கங்களை அனுபவிக்கும் முறைமைக்கேற்ப, மேலே கூறியவாறு

சிற்றறிவு சிறுதொழில்களை மேற்கொண்டு,—எனது யான் என்னும் செருக்குறும் தூலமொடு இலங்கு சூக்குமம் நன்கு எடுத்து - எனது யானென்னும் செருக்கடைதற் கேதுவாகிய தூலசரீரம், விளங்குஞ் சூக்குமசரீரமாகிய இவைகளைத் தமக்கு ஆதாரமாக நன்கிதாக மேற்கொண்டு,—எழுபிறப்பு உடையராய் - தேவர் முதலிய எழுவகைப் பிறப்புக்களையுமுடையவராகி,—இம்மை மறுமையினோடும் எய்தரிய வீடும் அடைவர் - இம்மை யின்பம் மறுமை யின்பங்களோடு இறப்பவுமடைதற்கரிய மோக்ஷத்தையுமடைவார்கள்,—சனாதனாதியர் தமக்கு அத்துவித முத்தி அருள் - சனாதனர் முதலாகிய பிரமவிருடிகள் நால்வருக்கும் சுத்தாத்துவிதமுத்தியைக் கொடுத்தருளிய,—சாந்தநாயகி சமேத. எ - று. (சு)

## ஆதிசைவர்.

ஓதன்முத லாறினொடு சர்வாதி காரமு
  மொருங்குடையர் சிவவேதியர்
ஊக்கமொடு மதிகாலை தனினெழுந் தறன்மூழ்க
  லொல்கிடார் நியதிதவறார்
காதன்முற் கொண்டுகட வுட்பூசை புரிகுவார்
  கழிபசிக் கழிவுறார்நற்
கல்லினிற் செம்பினிற் கண்ணுதலை வருவிப்பர்
  கருணைமுத லியகழிந்து
போதன்மேற் கொண்டிடா ரறிவொழுக் கங்களைப்
  பொன்னிற் பொதிந்திடுவர்தீப்
பொய்யொன்று செப்பாச் சதாசார சீலராய்ப்
  பொலிவர்கலி நலிவர்புவியிற்
சாதுர்வே தச்சைவ தந்த்ரபா ரங்கதர்கள்
  சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சிவ வேதியர் - சிவப்பிராமணர்களென்னும் ஆதி சைவர்கள்,—ஓதல் முதல் ஆறினொடு சர்வாதிகாரமும் ஒருங்கு உடையர் - வேதமோதல் முதலிய அறுதொழில்களோடு ஆதி கிருத்தியம் அந்தியகிருத்தியமென்னு மிவைகளைச் செய்தற் கேற்ற சர்வாதிகாரங்களையும் ஒரு சேரவுடையவர்கள்,—ஊக்க மொடும் அதிகாலைதனில் எழுந்து அறல் மூழ்க ஒல்கிடார் - உள்ளக்கிளர்ச்சியோடும் அதிகாலையில் நித்திரைவிட்டெழுந்து பனிக்காலத்திலுந் தீர்த்தஸ்நானஞ்செய்தற்கு ஒருசிறிதும் பின் வாங்கமாட்டார்கள்,—நியதிதவறார் - நித்திய கர்மானுஷ்டானங் களிலே சிறிதுந் தவறார்கள்,—காதல் முற்கொண்டு கடவுட் பூசை புரிகுவார் - விருப்பம் அன்பு முதலியவற்றை எதுவாகக் கொண்டு ஆன்மார்த்த பரார்த்த பூசைகளைச் செய்வார்கள்,— கழிபசிக்கு அழிவுறார் - அங்ஙனஞ் செய்யுங்காலத்தில் வந்து பீடிக்கும் மிகுபசிக்குத் தந்தைரியந் தளர்ந் தொழியார்கள்,— நற்கல்லினிற் செம்பினிற் கண்ணுதலை வருவிப்பர் - நல்ல சிலா விக்கிரகங்களினும் சீருண விக்கிரகங்களினும் மந்திரக்கிரியா பாவனைகளினாலே பரமசிவனையும் மற்றுந் தெய்வங்களையும் சாந் நித்தியஞ் செய்துவைப்பார்கள்,—கருணைமுதலிய கழிந்துபோ தல் மேற்கொண்டிடார் - சீவகாருண்ணியம் முதலிய உத்தம குணங்கள் தம்மைவிட்டு நீங்கிப்போதலை ஒருபோதும் தாம் தலைக்கொள்ள மாட்டார்கள்,—அறிவொழுக்கங்களைப் பொன் னிற் பொதிந்திடுவர் - நல்லறிவு நல்லொழுக்கங்களைப் பொன் னைப்போலத் தம்மாட்டுப் பொதிந்து வைத்துக்கொள்வார் கள்,—தீப் பொய் யொன்று செப்பா - கொடிய ஒரு பொய்யை யேனும் மறந்தும் பேசாத,—சதாசாரசீலராய்ப் பொலிவர் - எஞ்ஞான்றுந் தவறாத நித்தியநியம ஒழுக்கத்தையுடையவராய் உலகெங்கும் விளங்கித் தோன்றுவார்கள்,—கலிநலிவர் - இக் கலியுகத்திற்குரிய வறுமைமுதலிய தீமைகளை மாந்திரிகம் முத

வியவற்றினாலே கண்டித்தொழிப்பார்கள்,—புவியிற் சாதுர்வேதச் சைவ தந்த்ரபாரங்கதர்கள் - இக் கன்மபூமியிலே சதுர் வேதங்களும் சைவாகமங்களுமாகிய சமுத்திரத்தின் கரையை யடைந்தவரா யிருப்பார்கள்,—சாந்தநாயகி சமேத. எ - று. (எ)

## அரசர்.

சித்திதரு மிருதிமந் திரிசொற் செவிக்கொண்டு
செங்கோல் செலுத்துகாலைச்
சின்னமிரு பத்தொன்று மாறொடா றியல்களுஞ்
செறிபஞ்ச குழுவுமெட்டுப்
பத்திமிகு துணைவருஞ் சுற்றங்க ளாந்தொடு
படைக்கலம் பயிறன்முதலாப்
படுமாறு தொழில்பிறவு முடையராய் நிகழ்கோப
பாவத்தை யஞ்சியிதய
சுத்திகொடு நடுநின்று விவகார பேதங்க
டேக்கியாங் காங்குபோக்கித்
துட்டநிக் கிரகமொடு சிட்டபரி பாலனஞ்
சோரா தியற்றியென்றும்
சத்தியந் தவறுமை மனுநீதி மன்னர்செயல்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சித்திதரும் மிருதிமந்திரிசொல் செவிக்கொண்டு செங்கோல் செலுத்துகாலை - இஷ்டசித்திகளைத்தரும் ஸ்மிருதி மந்திரிகளின் சொற்களைச் செவியிலேற்றுக்கொண்டு செங் கோல் செலுத்துங்காலத்தில்,—சின்னம் இருபத்தொன்றும் - அரசசின்னங்கள் இருபத்தொன்றும்,—ஆறொடு ஆறு இயல்களும் - அரசியலாறும் மற்றோராறும்,—செறிபஞ்சகுழுவும் - அங்

தரங்கத்திற்குரிய ஐங்குழுவும்,—எட்டுப்பத்திமிகு துணைவரும் - விசுவாசம்மிகுந்த அரசியற்றுணைவர் எண்மரும்,—சுற்றங்கள் ஐந்தொடு - அரசியற் பஞ்சசுற்றங்களுடனே,—படைக்கலம் பயிறன்முதலாப்படும் ஆறு தொழில் பிறவும் உடையராய் - படைக்கலம் பயிறன்முதலாகிய க்ஷத்திரியதருமம் ஆறும் இவைபோல்வன பிறவும் உள்ளவராகி,—நிகழ்கோப பாவத்தை அஞ்சி - ஆணவமலத்தின் காரியமாய் நிகழுங் கோபத்திற்கும் பாவத்திற்கும் பயந்து,—இதயசுத்திகொடு நடுநின்று விவ காரபேதங்கள் தூக்கி - சித்தசுத்தியை மேற்கொண்டு வாதி பிரதிவாதிகட்கு மத்தியஸ்தராயிருந்து வழக்குக்களின் விகற் பங்களை நுண்ணிய அறிவான் ஆராய்ந்து,—ஆங்காங்கு போக்கி- அவ்வவற்றிற்கியைந்த நீதிநூற்பிரகாரம் தீர்மானஞ்செய்து,— துட்ட நிக்கிரகமொடு சிட்ட பரிபாலனம் சோராது இயற்றி - துஷ்டநிக்கிரகங்களையும் சிஷ்டபரிபாலனங்களையும் ஒருசிறிதும் நீதியின் வழுவாது செய்துகொண்டு,—என்றும் சத்தியந் தவ றுமை - இவற்றினும் இவைபோல்வன பிறவற்றினும் எக்கா லத்துஞ் சத்தியந்தவறுமையே,—மனுநீதி மன்னர் செயல் - மனுநீதியையுடைய அரசர் தருமமாகும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

அரசசின்னம் இருபத்தொன்றுவன :—

முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், நீர்க்குடம், பூமாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசனம் என்பனவாம். அரசியல் ஆறுவன :— படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்பனவாம். மற்றோரரசியலாறுவன:—அறநிலை யறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள், அற நிலையின்பம், மறநிலையின்பம் என்பனவாம். ஐங்குழுவாவார்:— மந்திரிகள், புரோகிதர், சேனைபதிகள், தூதர், சாரணர் என்பவர் களாம். எட்டுப் பத்திமிகு துணைவராவார்:—மந்திரி, கருமாதி

காரன், சுற்றம், கடைகாப்பாளர், நகரமாந்தர், படைத்தலைவர், இவுளிமறவர், யானைவீரர் என்பவர்களாம். அரசர்க்குறுதிச் சுற்ற மாவார்:—நட்பாளர், அந்தணாளர், மடைத்தொழிலாளர், மருத் துவக்கலைஞர், நிமித்திகப்புலவர் என்பவர்களாம். (அ)

## வைசியர்.

கொண்டவிலை கண்டிலாபஞ்சிறிது கூட்டியே
குய்யுத்தி வார்த்தைகொளுவிக்
கோடல்விற் பவர்தங் குணுகுண மறிந்தரைக்
காசையொரு கோடிபொன்போற்
கண்டதிக முரையாது தங்காரியத்தினிற்
கண்ணுங் கருத்துமாகிக்
காலநிலை யுங்கருதி விற்றல்கொளல் செய்தவை
கணக்கிற் பதித்தலதிரார்
பண்டைவிதி தவறும லுபவீத தாரணம்
பண்ணிமறை பயிலுபவராய்ப்
பாரில்வெகு தானதரு மஞ்செய்து நறியசுவை
படவுண்டு வாழ்வர்வணிகர்
சண்டிக டமக்கொன்று முதவிடார் மதிகெடார்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். வணிகர் - வைசியர்களாவார்,—கொண்டவிலை கண்டு - தாம் பிறர்மாட்டு வாங்கின பொருள்களின் மூல விலையை முதலுத்தேசித்துக்கொண்டும்,—இலாபம் சிறிது கூட் டியே - சிறிது இலாபத்தையதனோடு சேர்த்து,—குய்யுத்தி வார்த்தை கொளுவி - தாந்திரிகமாகிய இதவார்த்தைகளினாலே வாங்குவோரை அயற்கடைக்குப் போகாவண்ணம் இறுகப்பற்றி

வளைத்துத் தம்வயஞ் செய்துகொண்டும்,—கோடல் விற்பவர் தங் குறைகுணம் அறிந்து - தம்மிடத்து வாங்குபவர்கள் தமக்கு விற்பவர்களது விவேக அவிவேகங்களை முதல் நிச்சயித்தறிந்து கொண்டும்,—அரைக்காசை ஒரு கோடி பொன்போற் கண்டு - அரைக்காசை ஒருகோடி பொன்போல நன்குமதித்தும்,—அதிகம் உரையாது-அவரோடு அதிக சம்பாஷணை செய்யாது,—தங் காரியத்தினிற் கண்ணும் கருத்துமாகி - வாங்குவோரது சிநேக முதலியவற்றைப் பொருட்படுத்தாது தஞ்செட்டுத் தொழிற் காரியத்திலேயே கண்ணோக்கத்தையுங் கருத்துநோக்கத்தையுஞ் செலுத்துபவராகி,—காலநிலையும் கருதி விற்றல் கொளல் செய்து - தாம் முன்னரே வியாபாரப்பொருளை வாங்கிய காலமும் பின்பு விற்குங்காலமுமாகிய இவ்விரு காலநிலையையு நன்றாகச் சீர்தூக்கி அக்காலநிலைக்கேற்பத் தாம் விக்கிரயஞ் செய்தலும் பிறர்மாட்டு வாங்குதலுமாகிய செட்டுத் தொழில்களைச் செய்து,—அவை கணக்கிற் பதித்தலது இரார் - அவ்விலைகளைக் கணக்குப் புத்தகத்தின்கண்ணே உடனுடனெழுதியல்லது தாமோய்ந்திருக்க மாட்டார்; இவைகளேயன்றி,—பண்டை விதி தவறாமல் உபவீததாரணம்பண்ணி மறைபயிலுபவராய் - பூர்வீக நூல் விதி வழுவிப்போகாமல் உபவீததாரணஞ்செய்து அதன்பின் வேதாத்தியயனஞ் செய்பவராய்,—பாரில் வெகு தானதருமஞ் செய்து - அவ்விலாப சம்பாத்தியத்தினாலே பூமியிலே அநேக தானதருமங்களைச் செய்து,—நறிய சுவைபடவுண்டு வாழ்வர் - நற்சுவை பொருந்தப் போசனமுஞ்செய்து சீவியாநிற்பர்,—சண்டிகள் தமக்கு ஒன்றும் உதவிடார் - நாணயம் முதலியன இல்லாத சண்டித்தனமுடையார், தமக்குற்ற சிநேகிதராயினும் அவர்மாட்டுக் கொடுக்கல் வாங்கல் சிறிதும் செய்யார்,—மதிகெடார் - தமது செட்டுத் தொழிற் புத்திசாதுரியத்தி லொருசிறிதுந் தவறமாட்டார்,—சாந்தநாயகி சமேத. எ - று. (௯)

## சூத்திரர்.

பொய்கடிந் திட்டதுந் தன்வயப் பட்டதும்
பூசுரரை நிலையிட்டதும்
பூபாலர் பாரம் பொறுத்திட்ட தும்வறுமை
புணரா தொறுத்திட்டதூஉம்
வைசியர்க் கியல்வர்த்த கம்வளர்த் திட்டதும்
வண்கலை கொழித்திட்டதும்
வானோர்க்கு நித்யநை மித்திக நடாத்திமிகு
வான்புகழ் வளர்த்திட்டதூஉங்
கைகடந் திடுபசி தணித்திட்ட தும்மகளிர்
கற்பைப் புரந்திட்டதூஉங்
கண்டிடுங் காலைநல் வேளாளர் மேழிசேர்
கையலதி யாதுகண்டாய்
தையல்சிற் றிடைவல்லி தாயினுந் தவநல்லி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பொய் கடிந்திட்டதும் - பொய் பேசுதலை முழுவதும் விலக்கிவிட்டதும்,—தன் வயப்பட்டதும் - சுதந்திர முடையதும்,—பூசுரரை நிலையிட்டதும் - பிராமணர்களைச் சீவியத்திற்கு வேண்டிய பொருள்கொடுத்து நிலைபெறச் செய்ததும்,—பூபாலர் பாரம் பொறுத்திட்டதும் - க்ஷத்திரியர்களது அரசியற் பாரத்தை வேண்டுவன கொடுத்துத் தாங்கியதும்,—வறுமை புணராது ஒறுத்திட்டதும் - உலகத்தவர்கட்கு உண்டிமுதலிய வற்றால் வறுமை சம்பவியாமல் அதனைக் கண்டித்தொழித்ததும்,—வைசியர்க்கு இயல் வர்த்தகம் வளர்த்திட்டதும் - வைசியர்களுக்குச் சாதிதருமமாய் நிகழவேண்டிய வியாபாரத்தொழில்

களை விருத்திசெய்ததும்,—வண்கலை கொழித்திட்டதும் - வளவிய நூற்றுறைகளின் விலக்குக்களை ஒதுக்கி விதிகளை அனுசரிக்கச்செய்ததும்,—வானோர்க்கு நித்ய நைமித்திகம் நடாத்திமிகு வான் புகழ் வளர்த்திட்டதும் - தேவர்கட்கு நித்தியபூசை நைமித்திகபூசைகளைச் செய்வித்து மிக்க பெரிய கீர்த்திகளை உலகெங்கும் பரவசசெய்ததும்,—கைகடந்திடு பசி தணித்திட்டதும் - தம்முடைய அறிவைக்கடந்து மானமுதலிய பத்தையும் பறக்கச செய்யவல்ல பசிப்பிணியைச் சாந்திசெய்ததும்,—மகளிர் கற்பைப் புரந்திட்டதும் - பெண்களினுடைய பதிவிரதா தருமத்தை அவர்களுக்குப் பாதுகாத்துக் கொடுத்ததும்,—கண்டிடுங்காலை - நாம் உய்த்துணர்ந்து ஆலோசிக்கும்போது,—நல் வேளாளர் மேழிசேர் கை அலது யாது கண்டாய்—வேளாளரது கலப்பையின் ஒருறுப்பாகிய மேழியை இறுகப்பற்றிய கையேயல்லாமல் வேறியாது ஆராய்ந்து சொல்லக்கடவாய்,—தையல் - தையல் நாயகியம்மையும்,—சிற்றிடைவல்லி - சாதகக் கொடிபோலுஞ் சிற்றிடையினை யுடையவரும்,—தாயினும் தவ நல்லி - எனக் கென்னைப்பெற்ற நற்றாயினும் அநந்தகோடி மடங்கு நல்லவருமாகிய,—சாந்தநாயகி சமேத. எ - று. (சo)

## அக்கிராசனபதித்துவம்.

சேற்றிற் பிறக்கினுங் கமலமலர் சிவபிரான்
　திருமுடிக் கண்ணேறிடுஞ்
சீரறு சிலம்பிவாய்த் தோன்றினும் பட்டரன்
　திருவரை தனிற்செறிதரும்
போற்றரிய விப்பிவாய்த் தோன்றினுந் தரளமுமை
　புணர்முலைக் குன்றிலேறும்
புள்வாயி னுச்சிட்ட மாயினுந் தேன்முப்
　புராரிபொற் சடைபுக்கிடும்

நாற்றப் புலாலுட் பிறந்தகோ ரோசனையு
   நாதர்முடி மீதுநணுகு
நற்குலச் செல்வர்க டமக்குமுன் கற்றவர்க
   ளுயகத் தவிசேறுவார்
சாற்றிடிற் கல்வியெதிர் சாதிதலை நீட்டுங்கொல்
   சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
   சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சேற்றிற் பிறக்கினும் கமலமலர் சிவபிரான் திரு முடிக்கண் ஏறிடும் - சேற்றின்கண்ணே உற்பத்தியாகினும் தாமரை மலரானது சிவபிரானது பரிசுத்தமாகிய திருமுடியின் கண்ணே அருச்சிக்கப்பட்டு ஏறுநிற்கும்,—சீர் அறு சிலம்பி வாய்த் தோன்றினும் பட்டு அரன் திரு அரைதனிற் செறி தரும் - அழகற்ற சிலந்திப் பூச்சியினுடைய உச்சிட்டம்பொருந் திய வாயினின்றுந் தோன்றினாலும் அந்நூலைக்கொண்டமைத்த பட்டுவஸ்திரமானது சிவபெருமானுடைய தூய்தாகிய திருவரை யின்கண்ணே சாத்துதல் செய்யப்பட்டு ஏறுநிற்கும்,—போற்று அரிய இப்பிவாய்த்தோன்றினும் தாளம் உமை புணர் முலைக் குன்றில் ஏறும் - வலம்புரிச் சங்கு முதலியனவற்றைப்போலப் பேணிச சொல்வதற்கு முடியாத சிப்பியின் உச்சிட்டவாயிலே உற்பத்தியானாலும் முத்துவடமானது திருமலையாகிய உமா தேவியினுடைய ஈர்க்கிடை புகப்பெறாது ஒன்றோடொன்று நெருங்கிய பர அபரஞானங்களாகிய முலைமலைகளின்மேற் சாத் தப்பட்டேறுநிற்கும்,—புள் வாயின் உச்சிட்டமாயினும் தேன் முப்புராரி பொற்சடை புக்கிடும் - வண்டுகளின் வாயினாலே கவரப்படுகின்ற உச்சிட்ட பதார்த்தமாயினும் தேனானது முப்புரவைரியாகிய சிவபெருமானது பொன்போலும் நிரு மலமாகிய திருச்சடையிலே அபிஷேகிக்கப்படும்,—நாற்றப் புலாலுள் பிறந்த கோரோசனையும் நாதர்முடிமீது நணுகும் -

துர்நாற்றத்தையுடைய தசைக்குள்ளே உற்பவித்ததாயினுங் கோரோசனையானது சிவபெருமானுடைய திருமுடியின் கண்ணே சாத்தப்படும்,—இவைகளையே போல - நற்குலச் செல்வர்கள் தமக்கு முன் கற்றவர்கள் நாயகத் தவிசு ஏறுவார் - உயர்ந்த வருணத்தினும் உயர்குடியினும் பிறந்த செல்வர்களாயினும் அவர்கள் முன்னே ஒரு சபையிலே தாழ்ந்த வருணத்தும் இழிகுடியினும் பிறந்தவராயினுந் தரித்திரராயினும் குருமுகமாக ஐயந்திரிபறப் பல நூல்களையுங் கற்ற வித்துவான்கள் அக்கிராசனத்தின்கண் வீற்றிருக்கப்பெறுவார்,—சாற்றிடில் - சொல்லுமிடத்து,—கல்வி யெதிர் சாதி தலை நீட்டுங் கொல் - அறிவை விருத்தி செய்யுங் கல்வி மகிமைக்கு முன்னே அகங்கார விருத்தியைச் செய்யுஞ்சாதிப் பெருமையானது தலை நீட்டித் தன்னைக் காட்டவும் வல்லதோ? (வல்லதன்று.),—சாந்த நாயகி சமேத. எ - று. (கக)

## பாசம்.

ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீண்டுவிடு
மெண்ணில்சத் திகளுடையதா
யெவ்வுயிரை யுந்தன்னை யுங்காட்டி டாதிருளு
மெல்லெனும் படியிருண்ட
மோகமாய்ச் செம்பிற் களிம்பொத்து நித்தமாய்
மூலமலமே யறிவினை
முழுவது மறைக்குமினி மூன்றுவே றுண்டொழிய
மொழிதிரோ தானசத்தி
பாகமாம் வகைநின் றொருங்குப கரித்தலாற்
பகருவார் மலமென்று
பக்குவ முதிர்ந்துழிப் பரமனிணை யடிகளுயிர்
படரப் பயிற்றுமிதுவே

தாகமா யெனைநினடி சார்ந்திடக் கடவுமோ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ-ள். ஏகமாய்-தாமொன்றேயாய்,—தம் காலவெல்லைகளின் மீண்டுவிடும் எண்ணில் சத்திகள் உடையதாய் - தம்முடைய காலவரையறைகளிலே அவ்வவ் வான்மாக்களை விட்டுத் திரும்பி விடும் அநேக சத்திகளை யுடையதாய்,—எவ்வுயிரையும் தன்னை யுங் காட்டிடாது - தன்னாற் பந்திக்கப்பட்ட எவ்வுயிரையும் பந் தித்த தன்னையும் அவ்வுயிர்களுக்கு வெளிப்படக் காட்டாது,— இருளும் எல் எனும்படி இருண்ட - அந்தகாரமும் ஆதித்தன் என்று சொல்லும் வண்ணம் அத்துணை மிகக் கறுத்த,—மோக மாய்-மயக்கத்தைச் செய்வதாய்,—செம்பிற் களிம்பு ஒத்து நித்த மாய் - செம்புள்ளவன்றே அதனோடு சகசித்த அதன் களிம்பைப் போல ஆன்மாவுள்ளவன்றே அதனோடு சகசித்து நிற்கும் அநாதி நித்தியப் பொருளாயுள்ள,—மூலமலமே அறிவினை முழுவதும் மறைக்கும் - மூலமலமாகிய ஆணவம் ஒன்றே உயிர்களின் அறி வினை முழுவதும் மறைத்துக் கொண்டிருக்கும்,—(இது ஆணவ மலத்தினுடைய இலக்கணம்) இனி மூன்று வேறு உண்டு ஒழிய - இனிக் கன்மம், மாயை, வைந்தவம் என மூன்று பாசங் கள் இவ்வாணவ மலத்துக்கு வேறுவிதமாக ஆன்மாக்களைப் பற் றிக் கொண்டு நிற்பனவாம்; அம்மூன்று மலங்களும் இங்கே விரித்துச் சொல்லப்படாது தவிர்ந்து நிற்க,—மொழி திரோ தான சத்தி - ஐந்தாவது பாசமாகச் சொல்லப்படும் திரோதான சத்தியானது,—பாகமாம் வகை நின்று ஒருங்கு உபகரித்தலால்- பரிபக்குவம் வரப்பெறாத உயிர்களை அப்பரிபக்குவம் வரும் வண்ணம் அவ்வுயிர்களோ டொற்றித்து நின்று உபகரித்துக் கொண்டு வருதலினாலே,—மலமும் என்று பகருவார்-அதனையும் ஏனை நான்கு பாசங்களோ டொன்றாகவைத்து ஒரு மலமென்றுப

சரித்துக் கூறுவர் மெய்கண்டதேவர் முதலிய மகான்கள்,—
பக்குவ முதிர்ந்துழிப் பரமன் இணையடிகள் உயிர் படரப் பயிற்றும் இதுவே - அவ்வுயிர்கட்குப் பரிபக்குவந் தன்னனே முதிர்ந்தவழிச் சிவபெருமானுடைய உபயதிருவடிகளை அவ்வுயிர்கள் சேரும்படி இதுவே செய்யாநிற்கும்; (இது திரோதான மலத்தின் இலக்கணம்.) தாகமாய் எனை நின் அடி சார்ந்திடக் கடவுமோ - இவ்வாறு ஆன்மாக்கட்குப் பக்குவம் வரும் வரையுமவற்றைப் பற்றிநின்று அப்பற்று வாயிலாகப் பக்குவத்தை முதிர்விக்கும் இத்திரோதானசத்தியானது ஆன்மாவாகிய தமியேனை மிகவும் வேட்கையாய்ப் பதியாகிய தேவரீருடைய திருவடிகளை அடையும்படி இனி எக்காலத்துச் செலுத்துமோ! (அதனை யறியேன்.),—சாந்த நாயகி சமேத. எ - று. (கஉ)

## தத்துவத்திரயம்.

ஐம்பெரும் பூதமொடு பஞ்சவிட யங்களுமொ
  ரைம்பொறி களுங்கன் மமே
யாகுமிந் திரியங்க ளைந்துமந் தக்கரண
  மறுநான்கு மான்மதத்வம்
உம்பரும் புகழ்கால நியதிகலை வித்தைரா
  கம்புருடன் மாயையேழு
முயர்வித்தி யாதத்து வஞ்சுத்த வித்தையீ
  சுரசத்தி சாதாக்கியம்
நம்புசிவ மிவையைந்து நல்லசிவ தத்துவமிந்
  நாலாறு மேழுமைந்து
நண்ணின்முப் பத்தாறு தத்துவமு முட்கருவி
  நவில்புறக் கருவியறுபான்
சம்புமுன் றந்தசை வாகமஞ் சாற்றுமிது
  சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஐம்பெரும் பூதமொடு - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களும்,—பஞ்சவிடயங்களும்-சத்த ஸ்பரிச ரூப ரச கந்தமென்னும் பஞ்சதன்மாத்திரைகளும்,—ஒர் ஐம்பொறிகளும் - மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஞானேந்திரியங்களைந்தும்,—கன்மமேயாகும் இந்திரியங்கள் ஐந்தும் - வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்தமாகிய கன்மேந்திரியங்களைந்தும்,—அந்தக்கரணம் - மனம் புத்தி அகங்காரம் சித்தமென்னும் அந்தக்கரணங்கள் நான்குமாகிய,—அறு நான்கும் ஆன்மதத்வம் - இருபத்துநான்கு தத்துவங்களும் ஆன்மதத்துவங்களாம்,—உம்பரும் புகழ் கால நியதி கலை வித்தை ராகம் புருடன் மாயை ஏழும் உயர் வித்தியாதத்துவம் - தேவர்களும் புகழத்தக்க காலம், நியதி, கலை, வித்தை, ராகம், புருடன், மாயையென்னு மேழுதத்துவங்களும் (அவ்வான்ம தத்துவத்தின்) உயர்ந்த வித்தியா தத்துவங்களாம்,—சுத்த வித்தை ஈசுரம் சத்தி சாதாக்கியம் நம்பு சிவம் இவை ஐந்தும் நல்ல சிவதத்துவம் - சுத்தவித்தை, ஈசுரம், சத்தி, சாதாக்கியம், நம்பத்தகுந்த சிவம் என்னுமைந்து தத்துவங்களும் மேலே கூறிய அவ்விருவகைத் தத்துவங்களினும் பார்க்க நல்ல சிவ தத்துவங்களாம்,—இந் நாலாறும் ஏழும் ஐந்தும் நண்ணின் - இவ்வான்மதத்துவ மிருபத்துநான்கும், வித்தியா தத்துவங்களேழும், சிவதத்துவங்களைந்துமாகிய முத்திறத் தத்துவங்களுமொருங்கு கூட்டப்பெறின் (முப்பத்தாறு தத்துவங்களாம்.),—முப்பத்தாறு தத்துவமும் உட்கருவி - இம்முப்பத்தாறு தத்துவங்களுஞ் சரீரத்தினுள்ளிருத்தலால் உட்கருவியெனப் பெயர் பெறும்,—நவில் புறக்கருவி அறுபான் - சரீரத்தின் புறத்திலிருப்பனவென்று சொல்லப்படுகின்ற புறக்கருவிகள் அறுபது தத்துவங்களாகும், (இவ்வகக்கருவி முப்பத்தாறையும் புறக்

கருவி அறுபதையும் ஒருங்குகூட்டினல், இவைகளே தொண்ணூற்ருறு தத்துவங்களாம்,—இது சம்புமுன் தந்த சைவாகமஞ் சாற்றும் - சுகத்திற்கிருப்பிடமாகிய சதாசிவமூர்த்தி பூர்வகாலத்தில் ஆன்மாக்கள்பொருட் டருளிச்செய்த காமிகம் முதலிய இருபத்தெட்டாகமங்களு மித்தொண்ணூற்ருறு தத்துவங்களி னிலக்கணங்களை விரித்துக் கூருநிற்கும்,—சாந்தநாயகி சமேத. எ - று. புறக்கருவிகள் மயிர், நகம், முதலியன. (கரு)

திருச்சிற்றம்பலம்.



இரண்டாவது

# இலங்காபுரிப் பிரகரணம்.



## இலங்கையின் விசேடம்.

முப்பத்து முக்கோடி தேவர்க்கு முதல்வனுய்
 மூவுலக வேந்தர்வேந்தாய்
முந்திந் திரற்காக வேதேவ தபதிமுன்
 மூதறிவி னிற்றந்ததும்
ஒப்பற்ற விருநிதிக் கிழவற்கு நீள்கால
 முறுராச தானியாகி
யுற்றது மிலங்கையெனின் மற்றிதற் கிணையாக
 வொன்றிங் குரைக்கவுளதோ
இப்பெற்றி யன்றியுமுன் ஞரத மகாமுனி
 யிடத்தா யிரம்மறைபயி
லிராவணற் குஞ்ஞான பூடணற் குந்தொல்
 லிராசதா னியுமிணையதே

தப்புற்ற நாயினேற் கேவர் துணை நீயலது
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். முப்பத்துமுக்கோடி தேவர்க்கும் முதல்வனாய் - முப்பத்துமுக்கோடி தேவர்களுக்குந் தலைவனாகியும்,—மூவுலக வேந்தர் வேந்தாய் - சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகத்தினுமுள்ள அரசர்களுக்கெல்லாம் மகாராசாவாகியும்,— முந்து இந்திரற்காகவே தேவதபதி முன் மூதறிவினிற் றந்ததும் - முதன்மைபெற்ற தேவேந்திரனுக்காக அவனதாஞ்ஞைப்படி முன்னொருகாலத்திலே தேவதபதியாகிய விசுவகன்மா பழைய தன் அறிவினாலே நினைத்து நிருமிக்கப்பட்டு அவ்விந்திரனுடைய இரண்டாவதோ ரிராசதானியாய் நெடுங்கால மிருக்கப்பெற்றதும்,—ஒப்பற்ற இருநிதிக் கிழவற்கு நீள்காலம் உறுராசதானியாகி யுற்றதும் - அதன்பின் அவ்விந்திரனாலே கொடுக்கப்பட்டு நிகரற்ற இருநிதிக்கிழவனாகிய குபேரனுக்கு நெடுங்காலமாக அவனிருத்தற்கு இராசதானியாக விருந்ததும்,—இலங்கையெனின் - இலங்காபுரியென்று காந்தபுராணத்தின் ஒருபாகமாகிய தக்ஷிணகயிலாச மான்மியம் அறுதியிட்டுக் கூறுமேயானால்,—இதற்கு இணையாக ஒன்று இங்கு உரைக்க உளதோ - இவ்விலங்காபுரியாகிய இராசதானிக்கு நிகராக விதந்தெடுத்துக் கூறுதற்கு வேறோரிராசதானியுமுளதோ,—இப்பெற்றியன்றியும் - இம்மகா விசேடமேயல்லாமலும்,—முன் நாரதமகாமுனியிடத்து ஆயிரம் மறைபயில் இராவணற்கும் - முன்னரே நாரதமுனிவரிடத்திலே ஆயிரம் வேதங்களை விதிப்படி அத்தியயனஞ்செய்த ஆதிவருண சிரேட்டனாகிய இராவணனுக்கும்,—ஞானபூடணற்கும் - அவனிளையதம்பியாகிய ஞானத்தையுடைய விபூஷணனுக்கும்,—தொல் இராசதானியும் இனையதே - பழைய இராசதானியாயிருந்ததும் இந்த இலங்காபுரியே

யாம்,—தப்புற்ற நாயினேற்குத் துணை நீயலது எவர் - தவறு களைச் செய்கின்ற நாயினுங் கடையேனாகிய தமியேனுக்கு உயிர்த்துணை தேவரீர் ஒருவரேயல்லாமல் வேறியாவருளர், (ஒருவருமிலர்),—சாந்தநாயகி சமேத. எ - று.                    (கச)

சொல்லுநூற் றெட்டுத் தலங்களுண் மிக்குத்
 துலங்கலி னிலங்கையாம்பேர்
சூடிற்ற தன்றியு மிரத்தின கரமாய்த்
 துலங்கலா னும்மிலங்கை
அல்லதாம் புதியதா வடைதலா னேயிதற்
 கானதிவ் வபிதானமே
யாதிகுரு திருமூலர் சிவபூமி யென்றிதனை
 யன்றறுதி யிட்டருளினர்
ஒல்லுதே வாரம் பெறுந்தல மிரண்டுசிவ
 னொளிபாத மொன்றிளஞ்சேஎய்க்
கோங்குந் திருப்புகழ்த் தலநான்கு சிவநதி
 யுளதுநான் கொளிராகமச்
சல்லாப வுல்லாச கயிலையங் கிரிவாச
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சொல்லும் நூற்றெட்டுத் தலங்களுண் மிக்குத் துலங்கலின் இலங்கையாம் பேர் சூடிற்று - பதினெண்புராணங் களும் விதந்து கூறுகின்ற ஆயிரத்தெட்டுச் சிவக்ஷேத்திரங்கட் குள்ளே நூற்றெட்டுச் சிவக்ஷேத்திரங்கள் மிகவுஞ் சிறந்தன, அந்நூற்றெட்டுத் தலங்களுள்ளே சிறந்து பிரகாசித்தலி னாலே, இது இலங்கையென்னும் நாமகரணத்தைச் சூடுவதா யிற்றன்று,—அதன்றியும் இரத்தினகரமாய்த் துலங்கலானும்

இலங்கை அல்லதாம் - அதுவல்லாமலும் மாணிக்கம் முதலிய நவரத்தினங்களும் உற்பத்தியாதற்கு இடமாயிருந்து பிரகாசித்தலினாலும் இத்தேயம் இலங்கையென்னும் நாமகரணத்தைச் சூடுவதாயிற்றன்றும்,—புதியதா அடைதலானே இதற்கு ஆனது இவ்வபிதானமே - இந்த இரண்டேதுக்களுந் தமிழ்மொழி மதம் பற்றி அத்தமிழ்மொழி நூலாசிரியர் கூறுவனவாம், வடமொழி மதம்பற்றி வடமொழி நூலாசிரியர் அதனை முழுவதும் அல்லதென்று மறுத்தொழித்து, இவ்விலங்காபுரி சிருட்டிகாலத்துத் தோன்றாமல், அதன்பின் இடையாயதொருகாலத்துப் புதிதாக அடைந்தமையினாலே இதற்கு இலங்காபுரி யென்கின்ற பெயர் உளதாயிற்றென்று வியாகரணவிதியோடு பொருந்த நிச்சயித்துக் கூறுகிற்பர்; (லங்கா என்பது தமிழ்மொழியாதலின்றி வடமொழியா யிருத்தலானும் "லக" என்னும் தாது அடைந்தது எனப்பொருள்படுதலானும், இங்கே அடைந்ததென்பதற்குப் புதிதாக அடைந்ததென்பது தாற்பரியப் பொருளாதலானும், இதுவே இலங்கையின் வரலாற்றோடு ஒத்திருத்தலானும் இலங்காபுரி யென்பதற்குத் தமிழ்மொழி நூலாசிரியர் கூறும் பொருளினும், வடமொழி நூலாசிரியர் கூறும் பொருளே சிறந்த பொருளென்று நிச்சயித் தறிந்துகொள்க. இலங்கை யென்பதற்குத் தமிழ்நூலார் கூறும் பொருள் பூர்வபட்சமெனவும், வடமொழிநூலார் கூறும் பொருள் சித்தாந்தமெனவும் உய்த்துணர்ந்து உண்மைதெளிக. இங்ஙனமாதலின், இக்கூற்றுப் 'பிறர் தம்மதமேற்கொண்டுகளைவு' என்னும் மதமும், 'ஒருதலைதுணிதல்' என்னும் தந்திரவுத்தியும் படக்கூறிய கூற்றாமென வுய்த்துணர்ந்துகொள்க. இன்னும், "ஒருமொழியொழி தன்னினங்கொளற்குரித்தே" என்னும் உபலக்கணத்தான், "இலங்கையே துருத்தியாற்றினிடைக் குறையரங்கமும்பேர்" என்னும் நிகண்டுநூற்பிரமாணங்கொண்டு, இத்தேயம் இலங்கை எனப் பெயர்பெற்றது எனச் சாதிப்பாருளராயின், அங்ஙனம் இத்தேயம் இரண்டாற்றின் மத்தியிலுள்ள இடைக்குறை யாகா

மையான், இவர்மதமும் மறுத்தொழிக்கப்பட்டவாறும் உய்த்துணர்ந்துகொள்க.)—ஆதிகுரு திருமூலர் சிவபூமி யென்று இதனை அன்று அறுதியிட்டருளினார் - ஆதிகுரவராகிய திருமூலரானவர் தம்முடைய திருமந்திரமென்னும் நூலிலே இவ்விலங்காபுரி சிவபூமியென்று அக்காலத்திலேயே வற்புறுத்திக் கூறியருளினார்,—ஒல்லு தேவாரம் பெறும் தலம் இரண்டு - திராவிட வேதமாகப்பொருந்தும் தேவாரம்பெற்ற தலங்களிரண்டும்,—சிவனொளிபாதம் ஒன்று - சிவனொளிபாத மென்கின்ற மகாமேருபர்வதம் போன்ற விசேடமலையொன்றும்,—இளஞ் சேய்க்கு ஓங்குந் திருப்புகழ்த்தலம் நான்கு - இளைய திருக்குமாரராகிய சுப்பிரமணியக்கடவுளுக்கு உயர்ச்சிபெற்ற அருணகிரிநாதரது திருப்புகழ்பெற்ற தலமாகிய கதிரைமலை, செங்கடகநகரி, திரிகோணமலை, யாழ்ப்பாணத்து நல்லூரென்னும் நான்கு தலங்களும்,—நான்கு சீவநதி உண்டு - மாவிங்ககங்கை, மாணிக்ககங்கை, களனிகங்கை, கழுகங்கை என்னும் நான்கு சீவநதிகளும் இவ்விலங்கையிலுள்ளனவாம்,—ஒளிர் ஆகமச் சல்லாப - வேதங்களினுரைவடிவமாக விளங்குகின்ற சிவாகம வினாவிடைகளை யுடையவரே,—உல்லாச - கெம்பீர நடையை யுடையவரே,—கைலையங்கிரிவாச - உத்தர தக்ஷிண கைலையங்கிரிவாசரே,—சாந்தநாயகி சமேத. எ - று.

ஆதிகுருதிருமூலர் இலங்கையைச் சிவபூமி என்று கூறியருளியதை, "மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை, கூரு மிவ்வானிணிலங்கைக் குறியுறும், சாருந் தில்லைவனத் தண்மா மலயத்தூ, டேருஞ் சுழுனை யிவைசிவ பூமியே." என்னும் திருமந்திரச் செய்யுளான் அறிக. இது, பொற்பதிக்கூத்து, இருபத்தேழாம் பாட்டு.

சீவநதியாவது ஒருகாலத்தும் ஒழிவின்றி நீர் பெருகிக் கொண்டிருக்கும் நதி. இராவணனுடைய நற்றாயாகிய இராத்திரிகரி என்பவள் அரிசிமாவினாலே ஆயிரம் க்ஷணிகலிங்கம்

பாணித்து நாடோறும் பூசித்து அங்கிர்மாலிய இலிங்கங்களைக் கொண்டுபோய் இடும் நதியாதலினாலே இதற்கு மாலிங்ககங்கை எனப் பெயராயிற்று. இப்பெயர் பிற்காலத்து மாவலிகங்கை என மருவிற்று. (கரு)

இவ்விலங் காபுரி விராட்புரு டனுக்கென் று
 மிடைநாடி யாயிலங்கு
மிமயமலை பிங்கலை சிதம்பரஞ் சுழுமுனை
 யிரண்டொடொன் றுமிலங்கை
திவ்விய சிவாகமக் கொற்றங் குடிச்சிவஞ்
 செப்பியரு டிருவாக்கிது
திருமுருகர் செங்கடக நகரிகொ ளிலங்கைவான்
 றிகழ்மேரு சிகரமிதனாற்
குவ்விணைவ் வொருதல மிதற்குநிக ராக்கோடல்
 குணமேகொ ளுதுகோயிலாக்
கொண்டுளார் முப்பத்து முக்கோடி தேவருங்
 கோதின்முத் தொழின்மூவரும்
சவ்வியசா சிக்கருள்செய் திவ்யகயி லாசபதி
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இவ்விலங்காபுரி விராட்புருடனுக்கு என்றும் இடைநாடியாய் இலங்கும் - இந்த இலங்காபுரியானது விராட் புருடனுக்கு என்ஞான்றும் இடைநாடியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கும்,— இமயமலை பிங்கலை - இமயமலை வலநாடி யாகிய பிங்கலைநாடியாக இருக்கும்,— சிதம்பரம் சுழுமுனை - சிதம்பரம் சுழுமுனைநாடியாகிய நடுநாடியாக இருக்கும், ஆதலி னாலே,— இரண்டொடு ஒன்றும் இலங்கை - இவ்விலங்கையா

னது அவ்விமயமலை சிதம்பரம் என்கின்ற இரண்டோடு ஒரு தன்மைத்தான பெருமையுடையதாய் விளங்காநிற்கும்,—இது திவ்விய சிவாகமக் கொற்றங்குடிச்சிவம் செப்பியருள் திரு வாக்கு - இது விசேஷ சுருதியாகிய சைவாகம சீலராயுள்ள கொற்றங்குடி உமாபதிசிவம் கோயிற்புராணத்திலே கூறிய திரு வாக்காகும்,—(திருமந்திர நூலுடையாரும் இவ்வாறே கூறினர் என்பது மேலே காட்டப்பட்டது) திருமுருகர் செங்கடக நகரிகொள் இலங்கை - சுப்பிரமணியக்கடவுளது க்ஷேத்திர மாய்க் கண்டிக்குச் சமீபத்திலிருக்குஞ் செங்கடகநகரியைத் தன்னிடத்துக் கொண்டிருக்கும் இவ்விலங்கையானது,—திகழ் மேரு சிகரம் இதனால் - ஆகாயத்தை அளாவிவிளங்கும் மேரு கிரியின் பொன்மயமாகிய திரிகூடமென்னும் பெயரையுடைய ஒரு சிகரமாம், இக்காரணத்தினாலே,—குவ்வின் ஒவ்வொரு தலம் இதற்கு நிகராக் கோடல் குணமேகொல் - பூமியிலேயுள்ள மண்மயமாகிய ஒவ்வொரு க்ஷேத்திரங்களைப் பொன்மயமாகிய இந்த இலங்கைக்கு உவமானமாகக் கோடல் குற்றமாவதல்லது குணமாகுமோ,—உது கோயிலாக் கொண்டுளார் முப்பத்து முக்கோடி தேவரும் கோது இல் முத்தொழில் மூவரும் - இத் திரிகூட சிகரமாகிய (மேருமலையின்) கொடுமுடி அம்மலையின் கண்ணே வாயுவினால் ஒடிக்கப்படாதிருந்த பூர்வகாலத்தில் அதிலே வாசஞ்செய்த முப்பத்துமுக்கோடி தேவர்களும், குற்ற மற்ற சிருட்டிமுதலிய முத்தொழில்களையுஞ் செய்கின்ற மும் மூர்த்திகளும் அச்சிகரம் இலங்காபுரியாய் வந்த பிற்காலத்தி லும் அதனைத் தமக்கு வாசஸ்தானமாகக்கொண்டே சஞ்சரித் துக்கொண் டிலங்கையில் வசிக்கின்றார்கள்,—சவ்வியசாசிக்கு அருள்செய் திவ்விய கயிலாசபதி - வலக்கையினாற்போல இடக் கையினாலும் மாறிப் பாணப்பிரயோகஞ் செய்பவன் எனப் பொருள்படும் சவ்வியசாசி என்னும் பெயரையுடைய அருச்சுன னுக்குப் பாசுபதம் என்னும் படைக்கலத்தைக் கொடுத்தருளிய கைலாசபதியாகிய,—சாந்தநாயகி சமேத. எ - று.

கொற்றங்குடிச்சிவஞ் செப்பியருடிருவாக்கு:—"வலங்கை மான் மழுவோன் போற்றும் வாளர வரசை நோக்கி, யலைந்திடும் பிண்ட மண்ட மவைசம மாதலாலே, யிலங்கைநே ரிடைபோ மற்றை யிலங்குபிங் கலையாநாடி, நலங்கிள ரிமய நேர்போ நடுவு போஞ் சுழுனைநாடி." "நாடரு நடுவி னூடி நலங்கிளர் தில்லை நேர்போய்க், கூடுமங் கதனின் மூலக் குறியுள ததற்குத் தென்னர், மாடுறு மறைகள் காணு மன்னுமம் பலமொன் றுண்டங், காடுது மென்று மென்று னென்னையா ளுடையவையன்" என்பனவாம். (கசு)

ஈழம திலங்கையே லிங்கிதன் பொருள்பொன ல
  தில்லையிது சூதமுனிவாக்
கீழமதி லாருகத முதலாய பலசமய
  மின்னுமில்லை யிதுவிசேடம்
ஈழமதி லையரா கமநிந்தை மாசுண
  வியாதுமிலர் மாயாமதம்
யார்யா ரிடத்துமில்லை யுண்டுகொ லெனின்மூல
  மிதரதே சிகள்வாசமே
ஈழம திராவணன் மனைவிமந் தோதரிக்
  கிறைவர்பெண் மகவொன் றளித்
தினிதருள் செயப்பெற்ற திம்மகவு தான்சீதை
  யிவள்சனன பூமியுமிதே
தாழுநினை வாழ்த்தத் தியானிக்க வன்புதவு
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இலங்கை ஈழமேல் - இலங்கையானது சிங்கள மெனப் பொருள்படும் ஈழமென்னும் பெயரையுடைய தன்றோ

வென வினவின், (அப்பொருள் அழுக்காறுடையார் சிலர் கொண்ட பொய்ப்பொருளேயாம்; மற்றென்னையோ அதன் மெய்ப்பொருளெனின்),—இங்கிதன் பொருள் பொன் அலது இல்லை - இவ்வீழமென்பதன் பொருள் பொன்னென்பதல்லது வேறுபொருள் ஈண்டில்லையாம்,—இது சூத முனிவாக்கு - இது தக்ஷிண கைலாசமான்மியத்திலே பௌராணிகராகிய சூத மகாமுனிவர் கூறியருளிய திருவாக்கேயாம்,—ஈழமதில் ஆருகதம் முதலாய பல சமயம் இன்னும் இலை - ஈழமண்டலத்திலே சமணசமயம் முதலிய வேதபாகியமாயுள்ள சில அந்நிய சமயங்கள் பாவயுகமாகிய இந்தக் கலியுகத்திலும் இன்னும் சம்பவிக்கவேயில்லை,—இது விசேடம் - இது அச்சமணசமய முதலியவற்றையுடைய ஏனைத் தேயங்களினும் இவ்விலங்காபுரிக்கு மகா விசேடமான தொன்றேயாம்,—ஈழமதில் ஐயர் ஆகம நிந்தை மாசுணவு யாதும் இலர் - ஈழதேயத்திலே இருக்கின்ற பிராமணர்கள் சைவாகமங்களைத் தூஷித்தலும் அசுத்த போசனங்களை யுண்ணுதலும் முதலிய பாவச்செயல்களுள் ஒன்றுமில்லாத பரிசுத்தர்களேயாம்,—மாயாமதம் யார்யாரிடத்தும் இலை - இமசேதுபரியந்தமெங்கும் இப்பாவ யுகப்பயனைப் பரந்து வழங்கப்பெற்றிருக்கின்ற மாயாவாதமென்னுந் துர்மதம் இவ்விலங்கையிலே ஆதிகாலந்தொட்டு எவ்வெவர்மாட்டு மியல்பாகவேயில்லை,—உண்டுகொல் எனில் மூலம் இதர தேசிகள் வாசமே - தற்காலத்திலே இலங்கையினும் மாயாவாதம் அருகி அங்குரார்ப்பணம் செய்யப்படுகின்ற தன்றோவெனின், அதற்குக்காரணம், அம்மாயாவாத அநுசாரிகளாகிய இதரதேயத்தவர் தற்காலம் இலங்கையில் வந்து வசித்தலின், அவர்கள் சகவாசம் பற்றிவந்த தோஷமேயாம்,—ஈழமது - ஈண்டுக்கூறிய பெருந்தகைமைகளை யெல்லாமொருங்குடைய இந்த ஈழ தேயமானது,—இராவணன் மனைவி மந்தோதரிக்கு இறைவர் பெண்மகவு ஒன்று அளித்து இனிது அருள்செயப் பெற்றது - இராவணனது பட்டத்தரசியாகிய மந்தோதரி என்பவளுக்குச் சிவ

பெருமான் ஒரு பெண்குழந்தையை இனிதருள் செயப்பெற்ற மகா விசேடத்தையு முடையதாம்; (இதனை, "ஆர்கலி சூழி லங்கை யழகமர்வண் டோதரிக்குப், பேரருளின்ப மளித்த பெருமான்" எனத் திருவாசகத்துக் குயிற்பத்திலே மாணிக்கவாசக சுவாமிகள் கூறியருளியதனானும் நிச்சயித்தறிந்துகொள்க.) இம் மகவுதான் சீதை - இம்மந்தோதரி சிவானுக்கிரகத்தாற் பெற்ற இப்பெண்குழந்தையே தசரதராமனுக்கு மனைவியாகிய சீதையாம்,—இவள் சனனபூமியும் இதே - ஆதலினாலே பதிவிரதா தரும சிரோமணியாகிய இந்தச் சீதாபிராட்டியின் சனனதேயமும் இவ்விலங்கையேயாம்; (இம்மகா அற்புத அரியசரித்திரம் வாசிட்டராமாயணத்தினும், உத்தரகோசமங்கைத் தலபுராணத்தினும் விஸ்தரித்துக் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுக் கண்டிதனுண்மையைக் கடைப்பிடித்துக்கொள்க.),—நினைத் தியானிக்கத் தாழ வாழ்த்த அன்பு உதவு - தேவரீரைத் தியானிக்கவும், வணங்கவும் துதிக்கவும் அடியேன்மாட்டுப் பேரன்பைத் தந்தருளும்,—சாந்தநாயகி சமேத. எ - று.

இது சூதமுனிவாக்கு என்பதனை, "பாரு நாகமும் பைங்கிரியுந் திரை, நீரு நேர்புடை சூழ நிமிர்ந்தெழு, மேரு மீதில் விளங்கிய சென்னியொன், ரூர மாருதங் கொண்டிங் கமைத்ததே." "அமைத்த பொன்மலை யாதவி னப்பெயர், சமைத்த வீழமதென்றுத ழீஇயதா, விமைத்த மாமணி யெங்குமி லங்கலா, லுமைத்த நீர்வய லூருமி லங்கையே." என்னும் செய்யுள்களானறிக. இச்செய்யுள்கள், ஸம்ஸ்கிருதத்திலியற்றிய தக்ஷிணகைலாயமான்மியச் சூதமுனிவர் வாக்கின் நேர்மொழி பெயர்ப்பாய்ப் பிரமஸ்ரீ பண்டிதராச ரருளிச்செய்த தக்ஷிணகைலாய புராணத் தமிழ்ச் செய்யுள்களென அறிக. (௧௭)

ஆரூ ரெழிற்கச்சி ராமே சுரங்காசி
யையா றுடன்குடந்தை

யாலவா யாதியூர் வேதியர் சிவாகமத்
தாதிசை வச்சுசீலர்
சீரூ ரிலங்கையாழ்ப் பாணங்க ளின்வந்து
சேர்ந்துதந் தமர்களோடுந்
திருமண முடித்திவட் புல்லுவா ரில்லொடுஞ்
செல்லுவார் சென்மதேயம்
பேரூ ரிலாதபெரு மானிதற் குச்சான்று
பீடிலாத் தெய்வங்கள்பேர்
பேசாது நம்மவர் பிரானுமை குமாரரடி
பேணுதே யமுமீனயவே
தாரூ ரிருங்கங்கை நீரூர் தருஞ்சடில
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஆரூர் - திருவாரூரும்,—எழிற்கச்சி - அழகிய காஞ்சீபுரமும்,—ராமேசுரம் - இராமேச்சரமும்,—காசி - காசித் திருப்பதியும்,—ஐயாறு - திருவையாறும்,—குடந்தை - கும்ப கோணமும்,—ஆலவாயாதியூர் வேதியர் - மதுரையும் முதலாகிய சிவக்ஷேத்திரங்களிலேயுள்ள, வைதிகப் பிராமணர்களும்,—ஆதி சைவச்சுசீலர் - சிவாகமத்தை அனுசரிக்கும் ஆதிசைவர்களாகிய நல்லொழுக்கத்தையுடைய பிராமணர்களும்,—சீரூர் இலங்கை யாழ்ப்பாணங்களின் தமர்களோடும் வந்து சேர்ந்து - சிறப்புநிறைந்த இலங்காபுரியினும் யாழ்ப்பாணத்தினும் தங்கள் செனன தேயமாகிய இந்தியாவினின்றுந் தஞ் சுற்றத்தாரோடும் வந்து சேர்ந்து,—திருமணம் முடித்து இவட் புல்லுவார் - மேற்படி இலங்கை யாழ்ப்பாணங்களிலுள்ள பார்ப்பனக் கன்னிகைகளை விதிப்படி விவாகஞ்செய்து இவ்விலங்கை யாழ்ப்பாணங்களினுங் குடியிருப்பார்கள் சிலர்,—இல்லொடுஞ் செனன தேயஞ்

செல்லுவார் - தங்கள் தங்கள் மனைவியர்களோடும் தங்கள் சொன்ன தேயமாகிய இந்தியாவிற்குஞ் செல்வார்கள் சிலர்,—பேரூரிலாத பெருமான் இதற்குச்சான்று - இதற்கு நூற்பிரமாணம் சம்பவித்தல் கூடாமையின், தமக்கொரு திருநாமமுந் தமக்கோரூரும் உள்ளபடியில்லாத சிவபெருமானே இதற்குச் சான்றுவர்,—பீடு இலாத் தெய்வங்கள் பேர் பேசாது நம்மவர் பிரான் உமை குமாரர் அடிபேணுதேயமும் இனையவே-பெருமையற்ற காடன், மாடன், கறுப்பன், மதுரைவீரன் முதலிய போலித் தேவதைகளின் பெயர்களையும் வாக்காலொருகாற் பேசாமலே நம்மவர்களாகிய இலங்கை யாழ்ப்பாணவாசிகள் சிவபிரான், உமாதேவியார், இவர் திருக்குமாரர்களாகிய விநாயகர், சுப்பிரமணியர், வைரவர், வீரபத்திரர்களைமாத்திரம் அவர்களுடைய திருவடிகளைச் சாவதானமாக வழிபட்டு வாழ்ந்திருக்குந் தேயமும் இவ்விலங்கை யாழ்ப்பாணங்களேயாம்,—தாரூரிருங் கங்கைநீர் ஊர்தரும் சடில - கொன்றைமாலிகை புனைந்த பெருமை பொருந்திய கங்காசலம் பிரவாகிக்கும் திருச்சடையினையுடைய,—சாந்தநாயகி சமேத. எ - று. (கஅ)

நீலகிரி யுண்ணுசி கிரியிலக் கணகிரிவிண்
ணிமிர்சிறீ வர்த்தனகிரி
நிகரில் கற்பூரகிரி யத்திகிரி தேனுகிரி
நீணிகும் பலைசலாபங்
கோரைத் தினபுரி விருத்தகங் காபுரங்
குமுதநதி குண்டலிபுரங்
கோயிறே வன்றுறை குமாரபுர மமிர்தகளி
குறுகேம கூடவாவி
கால்கருட கங்கைமா யவனுறு மூதூர்
கடம்பைகிரி கங்கைநீல
கங்கைமுன் னீச்சரஞ் சத்தகன் னியர்கங்கை
கண்டிலிங் கங்கரசையூர்

சாலநல தான்றோன்றி தாமுமீ ழத்திலுள
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நீலகிரி - நீலகிரியும்,—உண்ணுசிகிரி - உண்ணுசி கிரியும்,—இலக்கணகிரி - இலக்கணகிரியும்,—விண் நிமிர் சிறீ வர்த்தனகிரி - ஆகாயத்திலுயர்ந்த ஸ்ரீ வர்த்தனகிரியும்,—நிகரில் கற்பூரகிரி - நிகரற்ற கற்பூரகிரியும்,—அத்திகிரி - ஆனைமலை யும்,—தேனுகிரி - பசுமலையும்,—நீள் நிகும்பலை - உயர்ந்த நிகும் பலையும்,—சலாபம் - முத்துச் சலாபமும்,—கோல ரத்தினபுரி - அழகிய ரத்தினபுரியும்,—விருத்த கங்காபுரம் - விருத்த கங்கா புரமும்,—குமுதநதி - குமுதநதியும்,—குண்டலிபுரம் - குண்ட லினிபுரமும்,—கோயில் - திருக் கோயிலும்,—தேவன்துறை - தேவன்றுறையும்,—குமாரபுரம் - குமாரபுரமும்,—அமிர்தகளி - அமிர்தகளியும்,—குறுகு ஏமகூடவாவி - தீர்த்த ஸ்நானத்தின் பொருட்டுச் சமஸ்தரும் செல்லும் விசேட தீர்த்தமாகிய ஏம கூட வாவியும்,—கால் கருட கங்கை - கால்வாய்களை யுடைய கருட கங்கையும்,—மாயவன் ஆறு - மாயவனுறும்,—மூதூர் - மூதூரும்,—கடம்பைகிரி - கடம்பங்கிரியும்,—கங்கை - கங்கை யும்,—நீல கங்கை - நீல கங்கையும்,—முன்னீச்சரம் - முன்னீச் சரமும்,—சத்த கன்னியர் கங்கை - சத்த கன்னியர் கங்கா கூபங்களும், கண்டிலிங்கம் - கண்டிலிங்கமும்,—கரசையூர் - கரசையூரும்,—சால நல தான் றோன்றி தாமும் - மிகவும் நல்ல தான் றோன்றி யீசுரன் கோயிலும் பிறவு மாகிய அநந்தகோடி மலை விசேடங்களும் தீர்த்த விசேடங்களும் மூர்த்திவிசேடங்க ளும் தல விசேடங்களும்,—ஈழத்தில் உள - இவ்வீழ மண்டலத் தின்கண்ணுள்ளனவேயாம்,—சாந்தநாயகி சமேத. எ - று.

இராமன் இராவணனைக் கொல்லுமுன் பிரதிட்டை செய்து சிவபெருமானை வழிபட்ட தலமாதலினுலே இதற்கு முன்னீச்

சரமெனப் பெயருளதாயிற்று. இப்பெயர் பிற்காலத்து முனீச்சர மென மருவிற்று. (௧௧)

அடைதரு மனுக்கிரக தலமிதென வாதவூ
ரடிகள்கொண் டருளியதுமோங்
கருமறைச் சிரமான சாந்தோக்கி யாதிகளி
லறைதரப் பட்டதூஉமாம்
நடையதிது பதினெட்டு நாரிபீ டத்தாதி
நற்சத்தி பீடமுமெனு
நவில்வர்மா மேருகிரி யீசர்பரி வாரமொடு
நாளுமிங் கமர்நன்னயம்
உடைமையிற் சூதனோம் பத்தாறு தேயத்து
ளுத்தமோத் தமதேயமென்
றோதினன் றென்கயிலை மான்மியத் துள்ளபிற
வூழியோ தினுமுலவுமோ
சடையைவெள் விடையைதிக் குடையைநற் கிடை
சாந்தநா யகிசமேத [யைபொற்
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். வாதவூரடிகள் அடைதரும் அநுக்கிரகதலம் இதெனக்கொண் டருளியதும் - திருவாதவூரடிகள் புத்தரைவாதில் வென்ற விடத்துச் சிவாநுக்கிரகத்தைப் பெறுதற்குரிய மகா தலம் இது என்று மேற்கொண்டு கிளந்தருளியதும்,—ஓங்கு அருமறைச்சிரம் ஆன சாந்தோக்கி யாதிகளில் அறை தரப் பட்டதூஉம் ஆம் நடையது இது - கரும காண்டத்தின் உயர்ந்த ஞான காண்டமாகிய அரிய வேத சிரசாயுள்ள சாந்தோக்கி யோப நிடதமுதலிய சைவோப நிடதங்களிலே விதந்தெடுத்துப் பரமசிவனாலே சொல்லப்பட்டதுமாகிய விசேட வரலாற்றை

யுடையதும் இவ்விலங்காபுரியேயாம்,—பதினெட்டு நாரிபீடத்து ஆதிநல் சத்தி பீடமும் என நவில்வர் - இன்னும் மந்திரசாஸ்தி ரத்துக் கூறப்பட்ட பதினெட்டுச் சத்திபீடங்களுள் முதற்சத்தி பீடமும் இவ்விலங்காபுரியின் கண்ணுள்ள காலி நகரேயாம் என்று அம்மந்திர சாத்திர நூலுடையார் கூறுகிற்பர்,—மாமேரு கிரி ஈசர் பரிவாரமொடு நாளும் ஈங்கு அமர் நன்னயம் உடைமையில் - மகாமேரு பர்வதத்தின்கண்ணே அநந்தங் கலைக ளோடும் எழுந்தருளியிருக்கின்ற பரமசிவனனவர் தம் பரிவா ரத்தோடும் மேலே கூறிய பிரகாரம் வாயுவினால் ஒடித் தெறியப் பட்ட திரிகூடம் திருக்கேதீச்சரம் என்னும் சிகரங்களோடு உடன் எழுந்தருளிவந்து இலங்கை யாழ்ப்பாணங்களில் வீற்றி ருக்கும் நல்ல நியாயமுடைமையினாலே,—சூதன் ஐம்பத்தாறு தேயத்துள் உத்தமோத்தமதேயம் என்று ஓதினன் - சூதமகா முனிவர் தக்ஷிணகைலாய மான்மியத்திலே ஐம்பத்தாறு தேயங் களுக்குள்ளே உத்தமோத்தமதேயம் இவ்விலங்காபுரியேயாம் என்று இதனை விதந்தெடுத்துக் கூறியருளினார்,—தென்கயிலை மான்மியத்து உள்ள பிற ஊழி ஓதினும் உலவுமோ-அத்தக்ஷிண கைலாச மான்மியத்திலுள்ள பிறவிசேடங்கள் அனைத்தையும் தமியேன் உகாந்தகால பரியந்தம் என்னொரு நாவாலெடுத்துக் கூறினும் அவை கூறப்பட்டு முடியுமோ,—சடையை - செஞ் சடையை யுடையவரே,—வெள் விடையை - வெள் விடையை யுடையவரே,—திக்குடையை - திகம்பரரே,—நற்கிடையை - நல்லவேதங்களை யுடையவரே,—பொற் சாந்தநாயகி சமேத— பேரழகு பொருந்திய. எ - று.

நயம்-நியாயம். உடை-வஸ்திரம். கிடை-வேதவொலி. காளி நகரென்பது ளகர லகர அபேதம்பற்றிப் பிற்காலத்திலே காலி நகரென வழங்குகின்றது. காளி - சிவசத்தி. (உ0)

## திருக்கேதீச்சரம்.

அமலர்கே தீச்சரந் திருஞான சம்பந்த
ராரூரர் திருவாய்மலர்ந்
தருள்செய்தே வாரம் பெறுந்தலம தாகலி
னதற்குநிக ரார்சொலவலார்
குமலர்மா திரமீ திதற்குநிக ராகவருள்
குலவுதல மிலதெனற்குக்
கோடிதே வர்கணிதங் கூடியர்ச் சித்தல்கரி
கூறிலனு பவசித்தமாங்
கமலர்நேர் தருபிருகு முனிபருப் பதமுனிவர்
கழறுமா லியவான்முதற்
கணிதமிலர் கவுரிபவ வயிரியிவர் கழறெழுது
கடிதுசிவ கதிகடுகினர்
சமலர்மூ வரினுமிழி தமியனே னுக்குமளி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அமலர் கேதீச்சரம் - நிருமலராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கப் பெறுந் திருக்கேதீச்சரமென்னும் சிவக்ஷேத்திரமானது,—திருஞானசம்பந்தர் ஆரூரர் திருவாய்மலர்ந்தருள் செய் தேவாரம் பெறும் தலமதாகலின் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர் சுந்தரமூர்த்தி நாயனராகிய சமய குரவரிருவருந் திருவாய்மலர்ந்தருளிய தேவாரம்பெற்ற மகா தலமாதலின்,—அதற்கு நிகர் ஆர்சொல வலார் - அதற்குவமையை யாவர் சொல்லவல்லவர்,—குமலர் மாதிரமீது இதற்கு நிகராக அருள்குலவு தலம் இலது எனற்குக் கோடி தேவர்கள் நிதம் கூடி அர்ச்சித்தல் கரி - இப்பூமியின்கண்ணும் அகன்ற அட்ட

திக்கின்கண்ணும் இந்தத் திருக்கேதீச்சரத்துக்கு நிகராகத் திரு வருள் விளங்குகின்ற மகா சிவக்ஷேத்திர மில்லையென்று நாம் இங்கே கூறியதற்கு முப்பத்துமுக்கோடி தேவர்களும் பிரதி தினமும் இங்கேவந்து ஒருங்கு சேர்ந்து அர்த்தயாமத்திற் பூசித் தலே சான்ருகும்,—கூறில் அனுபவசித்தம் ஆம் - இதற்குப் பிரமாணஞ் சொல்லுகில் இத்திருக்கேதீச்சரதலத்தின் பக்கத்தி லுள்ளவர்களது குற்றமற்ற அவ்வர்த்தயாமப் பூசாதரிசன அநு பவமே முடிந்த பிரமாணமாம்,—கமலர் நேர்தரு பிருகு முனி - செந்தாமரை யாசனராகிய பிரமதேவரையொத்த பிருகு முனி வரும்,—பருப்பதமுனி - பருப்பத முனிவரும்,—கழறு மாலிய வான்முதற் கணிதமிலர் - இராமாயணத்து விதந்து சொல்லப் பட்ட மாலியவானும் முதலாகிய கணக்கற்றவர்,—கவுரி பவ வயிரி இவர் கழல் தொழுது கடிது சிவகதி கடுகிஞர் - இங் கெழுந்தருளியிருக்குங் கௌரியம்மை, அடியார்களது சனனத் துக்குப் பகையாகிய திருக்கேதீச்சர நாதரென்னுஞ் சத்திசிவ மிருவரது திருவடிகளையும் வழிபட்டு அதிசீக்கிரம் மோக்ஷத்தை அடைந்தார்கள்,—சமலர் மூவரினும் இழி தமியனேனுக்கும் அளி - மலத்தோடு கூடினவர்களாகிய மூவகை யான்மவர்க்கங் களினுந் தாழ்ந்த சகலவர்க்கத்தவனுகிய தமியேனுக்கும் பூரணா னுக்கிரகஞ் செய்தருளும்,—சாந்தநாயகி சமேத. எ - று.

கு - பூமி. மலர் மாதிரம் - அகன்ற திக்குக்கள். பவ வைரி- மெய்யடியார்களது பிறப்பிறப்பிற்குப் பகையாகிய சிவபெரு மான். சமலர் - மலசம்பந்தமுடையவர். மூவர் - விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்பது மேலுங் காட்டிஞம். அளி - முன்னிலை யேவல் வினைமுற்று. கோடி என்பது முப்பத்துமுக் கோடியைக் குறிப்பாலுணர்த்திற்று. (உக)

சுருதிபயி லறிஞன் முவட்டா வெனுந்தபதி
தொல்லைநா டன்னின்மன்னித்

தோகைமயில் பாகனரு ளென்னுங் கருத்தினிரு
துணையடிகள் புருவநடுவிற்
கருதிநிட் டாபரனு மாகித் திருப்பணிகள்
கண்டீண்டு வைகினனிக்
காரணத் தாற்றுவட் டாபுரம தெனுநாம
கரணமுன் கடுகிற்றிவட்
பரிதிபன் னிருவரெழு முனிவர்வசு வெண்மர்குளிர்
பாலாவி தீரமருவிப்
பத்திவித் திச்சுத்த சித்தசெறு விற்சைவ
பரமஞா னிகளாயினர்
தருதியுரு குனதன்பு வருதிதரு மன்முன்பு
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சுருதி பயில் அறிஞன் துவட்டா எனும் தபதி - வேதங்களை அத்தியயனஞ் செய்த பேரறிஞனாகிய மகாதுவட்டாவென்னும் பெயரையுடைய தேவதபதியானவன்,—தொல்லைநாள் தன்னின் மன்னி - பூர்வகாலத்திலே தேவலோகத்தினின்றும் இத்திருக் கேதீச்சரத்தில் வந்து,—தோகைமயில் பாகன் அருள் துன்னும் கருத்தின் - கலாபத்தையுடைய மயில் போலும் சாயலைக் கொண்ட அருட்சத்தியை வாமபாகமாகவுடைய திருக்கேதீச்சரநாதரது திருவடிகளைப் பெறவேண்டுமென்னும் எண்ணத்தினாலே,—இரு துணை அடிகள் புருவநடுவில் கருதி நிட்டாபரனுமாகி - அத்திருக் கேதீச்சரநாதரது உபயதிருவடிகளையும் தன்னுடைய இருபுருவ மத்தியாகிய விந்துஸ்தானத்திலே வைத்துத் தியானஞ்செய்து நிட்டானுபூதி பரனுமாகி,—திருப்பணிகள் கண்டு ஈண்டுவைகினன் - இத் திருக்கோயிற் றிருப்பணிகளை ஆதியந்தமாகச் செய்து இந்த

ஸ்தலத்தின்கண்ணே மோக்ஷமடைந்து சரீரங்கழியப்பெற்ற னன்,—இக்காரணத்தால் துவட்டாபுரம் எனும் நாமகரணம் மூன் கடுகிற்று - இக்காரணத்தாலே மகாதுவட்டாபுரம் என் கின்ற நாமகரணம் இத்திருக் கேதீச்சரத்திற்கு அக்காலத்தி லேயே சம்பவித்தது,—இவண் பரிதி பன்னிருவர் - இத்திருக் கேதீச்சரத்திலே துவாதச ஆதித்தர்களும்,—எழுமுனிவர் - சத்த விருடிகளும்,—வசு எண்மர் - அட்ட வசுக்களும்,—குளிர் பாலாவிதீரம் மருவி - குளிர்ச்சிபொருந்திய பாலாவிதீர்த்தக் கரையிலே இருந்து,—சுத்த சித்த செறுவில் பத்தி வித்திச்சைவ பரமஞானிகள் ஆயினர் - தங்களுடைய பரிசுத்தம் பொருந்திய மனமாகிய வயலிலே பத்தியாகிய விதையை விதைத்து அதன் விளைவாகிய சிவஞானத்தை அடைந்து அதனுள் மோக்ஷத்தை யும் பெற்றனர்,—உருகு உனது அன்பு தருதி - தேவரீரைக் குறித்து மனம் நெக்குநெக்குருகும் அன்பைத் தந்தருளும்,— தருமன்முன்பு வருதி - என்தேக நீக்ககாலத்திலே என்னுயி ரைக்கொண்டு செல்லவரும் இயமனுக் கெதிரேவந்து அவனைத் தடுத்தருளும்,—சாந்தநாயகி சமேத. எ - று.

பரமஞானிகளாயினர் என்புழியும் தருமன்முன்புவருதி என்புழியும் காரியங்கள் காரணங்களுள் அடக்கிக் கூறப்பட் டன. மகாதுவட்டாபுரம் என்பது பிற்காலத்து மாதோட்டம் என மரீஇயிற்று. மகாதுவட்டா என்பவன் விசுவகன்மாவின் புத்திரர்களுட் சிரேட்ட புத்திரன். இவன் தம்பிமார் - மரு, மயன் என்பவர். இவர்களுள் மயன் என்பவன் புத்திரி மந்தோ தரி எனவறிக. மந்தோதரியைத் தமிழ்நூலார் வண்டோதரி எனக் கூறுவர். மந்தோதரியின் மகள் சீதை. சீதைக்கு முறைக் கியை பிதா சிவபெருமானும், வளர்த்த பிதா சனகனுமாம். இம் மந்தோதரி இராவணன் பட்டத்தரசி. இப்பட்டத்தரசியாகிய மந்தோதரியின் காலமும், சமயகுரவராகிய மாணிக்கவாசக சுவாமிகளின், அடுத்த பூர்வசன்மகாலமும் ஒரே காலமென்பது பண்டைத்தமிழ்,சமஸ்கிருதநூலுடையார் வழக்கு.சுவாமிகளின்

அடுத்த பூர்வசன்மநாமம் குடமுழாநந்தீசர் என்பது. ஆனால், இக்குடமுழாநந்தீசர் காலத்துக்கும், இவரெடுத்த அடுத்த பிற்சனனமாகிய மாணிக்கசுவாமிகள் காலத்துக்கும் மத்தியில் இந்நந்தீசர் இலக்ஷக்கணக்கான வருடங்களாகச் சிவயோக நிட்டையில் அமர்ந்திருந்தார் என மேற்படி நூல்கள் கூறினும், இம்மாணிக்கவாசகசுவாமிகள்காலம், தற்கால ஆங்கிலக்கல்வித் தமிழ்ப்புதுமக்கள் வரையறுக்கும் சில நூற்றாண்டுகளுக்குள் அடங்காமை மலையிலக்கென ஒருதலையேயாமென்க. (௨௨)

மூவுலக மும்புகழு மாதோட்ட தலமகிமை
மொழிவதரி தென்றுருதன்
முதனூலின் மும்முறை முழங்கினு னென்னிலது
முடிவதா மோமூர்க்கனேற்
காவது சுயம்பிலிங் காகார மாகியே
யமலனுங் கமர்தலான்மற்
றகிலலோ கத்துமரு வானதொன் றுருவாகி
னதுமனுதிக் கரியதாம்
சீவரிங் குறுகிர குண்டத்தி னிடைதோய்ந்து
திலதர்ப்ப ணஞ்செய்திடிற்
சேர்வர்சிவ கதிசெவிச் செப்பப் படுஞ்சிவன்
றிருமந்தி ரஞ்சிதைவுழிச்
சாவதிங் ஙன்முத்தி தருமெனிற் பிறிதென்னை
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மூவுலகமும் புகழும் மாதோட்டதலமகிமை மொழிவது அரிது என்று - திரிலோகத்தாராலும் புகழப்படுகின்ற மகாதுவட்டாபுரமாகிய திருக்கேதீச்சரத்தின் உன்னதமகிமைகள்

எம்மாற் சொல்லப்பட்டு முடிவது ஒருவாற்ருனுங் கூடா தென்று,—சூதன் முதல்நூலில் மும்முறை முழங்கினுன் என்னில் - சூதமகாமுனிவர் இத்திருக்கேதீச்சரத்து மகிமையைக் கூறும் முதனூலாகிய தக்ஷிணகைலாச மான்மியத்தில் மூன்று தரம் முழங்கிக் கூறினுரே யென்ருல்,—மூர்க்கனேற்கு அது முடிவது ஆமோ - முழுமூடனுகிய தமியேனுக்கு அதுமுழுவதும் கூறிமுடியப் பெறுவதாகுமோ,—ஆவது - அங்ஙனஞ் சூதமுனிவர் முடியாதென்று கூறியதன் கருத்தாவது,—சயம்புலிங்காகாரம் ஆகியே அமலன் ஆங்கு அமர்தலால் - மலரகிதராகிய சிவபெருமான் சயம்புமகா லிங்கவடிவமாகி அங்கெழுந்தருளியிருத்தலினுலேயாம்,—மற்றகிலலோகத்தும்அருவானதொன்று உருவாகின் - சர்வலோகத்துமருவமாய் வியாபித்திருக்கின்ற பரம்பொருள் தாமே உருவத்திருமேனிகொண் டெழுந்தருளியிருப்பின்,—அது மனுதிக்கு அரியதாம் - அதன்மகிமை கூறுதல் மனமுதலிய கருவிகளுக்கு அமையத்தகாததேயாகும், ஆதலினுலென்க,—சீவர் இங்கு உறுகீரகுண்டத்தினிடைதோய்ந்து. திலதர்ப்பணஞ் செய்திடில் - சீவான்மாக்கள் இங்கேயுள்ள பாலாவிதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து அதன்கரையிலிருந்து தத்தம் பிதிர்வர்க்கங்களை உத்தேசித்துத் திலதர்ப்பணஞ்செய்தால்,—சேர்வர் சிவகதி - அப்பிதிர்வர்க்கங்கள் மோக்ஷத்தை அடைவார்கள்,—சிதைவுழி சிவன் திருமந்திரம் செவி செப்பப்படும் - இங்கே இறப்பவர்களுக்குக் (காசித்திருப்பதியினும், திருமுதுகுன்றத்தினும் போல) அவ்விறக்குந்தருணத்தில் சிவமூலமந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரம் வலச்செவியின்கண்ணே திருக்கேதீச்சரநாதரால் உபதேசிக்கப்படும், படவே இவரும் மோக்ஷமடைவர்,—சாவது இங்ஙன் முத்திதருமெனில் பிறிதுஎன்னை - இத்தலத்திலே ஊழின்படி தவருது மரிப்பதுவே முத்தியைக் கொடுக்குமாளுல், இதன்மகிமைகளைக் குறித்து வேறு நாம் பேசவேண்டுவதூ என்னை? சாந்தநாயகிசமேத. எ - று.

மகாதுவட்டாபுரம் என்பது பிற்காலத்தில் மாதோட்ட மென மரீஇயிற்று. என்பது மேலுங்காட்டினும். (௨௩)

## திரிகோணமலை.

தென்கயிலை யாகியொளிர் திரிகோண மாமலை
திருக்கயிலை யின்சிகரநந்
திருஞான சம்பந்தர் திருவாய் மலர்ந்தருள்செய்
தேவார தெய்விகதலந்
கொன்புனையு மனுநீதி கண்டசோழன்குலக்
கோக்குளக் கோட்டன்றருங்
கோயில்கொண் டுடையதெழு பாதாள கங்கையிடை
கோணே சுரன்வதிவதாம்
இன்புயிர்க் குதவுபிடி யன்னமென் னடையிறை
யிடப்பாக மினிதமர்வதிங்
கெழுபுவன முந்திக்கு நோக்கியெதிர் தொழுதிட
விருப்பது பொருப்பதியலார்
தன்பெருந் தலைமைதா னறிகிலாத் தனிமுதல்வ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தென்கயிலையாகி ஒளிர் திரிகோணமாமலை - தக்ஷிணகைலாசமாகி விளங்குகின்ற திரிகோணாசலமானது,— திருக்கயிலையின் சிகரம் - மேருவிற்போலப் பின்னொருகாலத் திலே ஒருவரோடொருவர் எஞ்ஞான்றுந் தம்முள் நயவஞ்சகர் களாயிருக்கும் ஆதிசேடனோடு பகைத்த வாயுவினாலே ஒடித்துத் தெற்குநோக்கி எறியப்பட்ட திருக்கைலாசகிரியின் சிகரங்கள் மூன்றனுள் ஒன்றாகும்,—நம் திருஞானசம்பந்தர் திருவாய்மலர்ந்

தருள்செய் தேவாரதெய்விகதலம் - இது, நமது பரமாசாரிய சுவாமிகளாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய் மலர்ந்தருளிய தேவாரம் பெற்ற தெய்வத்தன்மைபொருந்திய மகாசிவக்ஷேத்திரமாம்,—கொன் புனேயும் மனுநீதிகண்டசோழன் குலக்கோ குளக்கோட்டன் தரும் கோயில் கொண்டுடையது - நடுவுநிலைமையாகிய பெருந்தன்மைவாய்ந்த திருவாரூர் மநுநீதிகண்டசோழமகாராசாவின் குலத்திலே அவருக்குமூன்றுவது சந்ததியாயுள்ள குளக்கோட்டுமகாராசாவினாலே நிருமிக்பட்ட கோயிலைத் தன்னிடத்துக் கொண்டுள்ளது,—எழுபாதாள கங்கையிடை கோணேசுரன் வதிவது ஆம் - திருவருளினாலே மேலே குதிகொண்டெழுந்த பாதாளகங்காசலத்தின் மத்தியில் அமிழ்ந்திக் கோணேசுவர மகாசிவலிங்கப்பெருமான் வீற்றிருக்கப் பெறுவதாம்,—இன்பு உயிர்க்கு உதவு பிடி அன்ன மென்னடை இறையிடப்பாகம் இனிது அமர்வது- சர்வலோக இன்பங்களையும் ஆன்மவர்க்கங்களுக்கு அநுபவிக்குமாறு உபகரிக்கின்ற பிடியன்னமென்னடை யென்னும் திருநாமத்தை யுடைய அருட்சத்தியானவர் கோணேசுரரது வாமபாகத்திலே நன்கிதாக எழுந்தருளப்பெறுவது,—இங்கு எழு புவனமும் திக்கு நோக்கி எதிர் தொழுதிட இருப்பது - இப்பிரமாண்டத்தின்கண்ணுள்ள சத்தபுவனத்தாரும் தன்றிக்கைநோக்கித் தண்டஞ்சமர்ப்பித்து வழிபட உன்னத தோற்றங்கொண்டு விசேஷமகிமை வாய்ந்து இருக்கின்றது,—பொருப்பது - இது மலைத்தலமாயுள்ளது,—இயல் ஆர் தன்பெரும் தலைமைதான் அறிகிலாத் தனிமுதல்வ - பதியிலக்கணநிறைந்த தம்முடைய பெருந்தன்மைகளைத் தாம் சுட்டியறியாத ஒப்பற்ற முழுமுதல்வரே;—சாந்தநாயகிசமேத. எ - று.

மநுநீதிகண்டசோழர் திருத்தொண்டர் பெரியபுராணத்து விதந்து கூறப்பட்ட திருவாரூர் மநுநீதிகண்டசோழர். இவருடைய திருக்குமாரர் வரராமதேவசோழர். இவருக்கு வீதிவிடங்கர் என வேறொரு திருநாமமும் உண்டு. இவர்தாம் திரி

கோணமலைச் சிவாலயத்தை முதன்முதற் கட்டுவித்தவர். இவருடைய திருக்குமாரர் குளக்கோட்டுமகாராசா என்பவர். இவர் பிறக்கும்போது நெற்றியிலே ஒரு கொம்போடு பிறந்தமையாற் குளக்கோடர் என நாமகரணஞ் செயப்பெற்றார்; குளம்-நெற்றி; கோடு-கொம்பு. இவர் திரிகோணமலையிற் சென்று கோணேச நாயகருக்கும், பிடியன்னமென்னடை என்னுந் திருநாமத்தோடு மாதுமையம்மையென்னும் மற்றொரு திருநாமத்தையுமுடைய தேவிக்கும், பிதாவின் திருப்பணிக்குமேல் அனேகந் திருப்பணி செய்து, கந்தளாய்க்குளம் என்று தற்போது பெயர் வழங்கும் பிரமாண்டயந்திரவாவியையும், ஷை கோயில் வயலின் நீர்ப் பாய்ச்சலுக்காகக் கட்டுவித்து, வேறும் அனேக சிவகைங்கரியங்களையுஞ் செய்துகொண்டு திருவாரூருக்குத் திரும்பாமல் அங்கேயேயிருந்து முத்தியடைந்தருளினார் எனவறிக.

திரிகோணமலை என்னும் பெயர், இம்மலையும், இம்மகாலிங்கத்தின் சத்திபீடமும் முக்கோணமாயிருத்தலாற் பெற்ற பெயராம். இம்மலைத்தலத்துக்குத் திரிகூடம், மச்சேச்சுவரம், தக்ஷிணகைலாயம் முதலிய வேறுதிருநாமங்களுமுள. இது, இமாசலகைலாயம், மேருகைலாயம், மந்தரகைலாயம், அநாதியீசர் வாழும் உத்தரமகாகைலாயம் முதலிய கைலாயங்களுள்ளே வெள்ளிமயமாகிய இமாசலகைலாயத்தினின்றும் வாயுவினாலே ஒடித்தெறியப்பட்ட சிகரங்கள் மூன்றனுளொன்று. ஏனைய இரண்டு சிகரங்களாவன திருக்காளத்தியும், திரிசிராப்பள்ளியுமாம். இம்மூன்று சிகரங்களும் உத்தரத்துள்ள இமாசலகைலாயத்தின் சிகரங்களாய்த் தக்ஷிணபூமியில் வந்தமையினால் தக்ஷிண கைலாயங்களெனப் பெயர்பெறும். இவைகளன்றியும், வாயுவினால் ஒடித்தெறியப்பட்டுத் தக்ஷிணசமுத்திரத்தில் வந்துவீழ்ந்த மேருவின் சிகரங்களும் மூன்றுள. அவற்றுள்ளுமொன்று திரிகூடசிகரமென்னும் பெயருடையது. இதுதான் இந்திரனுடைய ஆஞ்ஞைப்படி விசுவகர்மாவினால் இலங்கையாக இயற்றப்பட்

டது. ஏனைய இரண்டினுள் திருக்கேதீச்சரசிகரம் விசுவகர்மா வின் சிரேட்டபுத்திரனாகிய மகாதுவட்டாவினாலே மகாசிவ க்ஷேத்திரமாகப் புனையப்பெற்றது. கந்தமாதனசிகரம் இரா மேச்சரத்தின் அதிசமீப உத்தரதிக்கிலே வீழ்ந்து இன்றும் அந் நாமத்தோடு சிவாலயமாகப் பூசிக்கப்பெற்றுவருகின்றது. சேது புராணத்து விதந்து கூறப்பட்ட கந்தமாதனமும் இதுவேயா மென்க. இம்மூன்றிடங்களும் அக்காலத்தில் தென்சமுத்திரமா கவே இருந்தன. பின் இராமன் அணைகட்டும்போது நிலப் பரப்பாயின என்க. கைலையின் சிகரங்கள் மூன்றிற்கும் மேரு வின் சிகரங்கள் மூன்றிற்கும் தம்முள் வேறுபாடுண்மை காந்த புராணத்துத் தக்ஷிணகைலாயமான்மியம் முதலியவற்றால் உய்த் துணர்ந்து தெளிக. இராமன் இராமலிங்க சிவப்பிரதிட்டை செய்ததும் இவ்வணைக்கட்டின் மீதேயாமெனத் தெளிந்து கொள்க.　　(உச)

குகையொன்று குணதிசைக் கோணேசர் சந்நிதிக்
　குறுகுநெறி யாங்குடதிசைக்
குகையொன்று பெருகருவி தரளங் கொழித்திடக்
　குலவுமா னிருதிகோணக் [லாக்
குகையொன்று குறளொன்று வெள்ளிவெண் கோயி
　குறுகிடுங் கூற்றுறுதிசைக்
குகையொன் றிரத்தினங் கொண்டுமண் டுங்கோண
　குன்றினேழ் குகைகுபேரக்
குகையொன்று மாமுனிவர் கூடியினி தமர்வதாங்
　குவடிறுத் தெறிகாறிசைக்
குகையொன்று நாகலோகம் புகக் கொடுசெலுங்
　கோதிலீ சானியதிசைத்
தகையொன்று குகைமுத்தி தவமிரண் டுந்தருஞ்
　சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌ ளீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். கோணகுன்றின் எழ்குகை - இத்திரிகோணமலை யிலே எழுகுகைக ளுள்ளன,—குண திசைக் குகை யொன்று கோணேசர்சந்நிதிக் குறுகுநெறியாம் - அவற்றுள்ளே அதன் கீழ்பாகத்துள்ள ஒரு குகையானது தன்மாட்டு வந்தவரைக் கோணேசரது சந்நிதியிலே கொண்டுபோய்விடும் மார்க்கமாயுள்ளது,—குடதிசைக் குகையொன்று பெருகு அருவி தாளம் கொழித்திடக் குலவும் - மேல்பாகத்துள்ள குகையொன்று தன்னிடத்துப் பெருகாநின்ற அருவிநீரானது முத்துக்களை ஒதுக்க வொதுக்க, அம்முத்துக்களின் வெள்ளொளியினுலே (சந்திர மண்டலம்போலப்) பிரகாசியாநிற்கும்,—நிருதி கோணக்குகை ஒன்று குறளொன்று வெள்ளிவெண் கோயிலாக் குறுகிடும் - நிருதிதிக்கிலேயுள்ள குகையொன்று பூதமொன்றுகாவல்கொண்டிருக்கும் வெள்ளிமயமான கோயிலொன்றனையுடையதாயிருக்கும்,—கூற்றுறுதிசைக்குகை ஒன்று ரத்தினங் கொண்டு மண்டும் - யமனிருக்குந் தென்றிசைக் குகையொன்று நவரத்தினங்களையும் தன்மாட்டுக்கொண்டு அவற்றுன் நிறைந்திருக்கும்,— குபேரக்குகை ஒன்று மாமுனிவர் கூடி இனிது அமர்வது - குபேரனிருக்கும் வடதிசைக் குகையொன்று பெருமைபொருந்திய இருடிகளநேகர் நிட்டைகூடி நன்கிருக்கப்பெறுவதாம்,— குவடு இறுத்து எறி கால் திசைக் குகை ஒன்று நாகலோகம் புகக் கொடு செலும் - மேருமலை கைலாயமலைகளின் மும்மூன்று கொடுமுடிகளை ஒவ்வொரு கற்ப காலங்களிலே தனித்தனி ஒடித்துத் தெற்குத்திக்கை நோக்கி யெறிந்த வாயுவின்திக்கிலுள்ள குகையொன்று தன்பால்வந்தவரை நாகலோகத்தின் கண்ணே கொண்டுபோய் விடும்,—கோது இல் ஈசானியதிசைத் தகை ஒன்று குகை முத்தி தவம் இரண்டுந் தரும் - குற்றமற்ற ஈசானிய திக்கின்கணுள்ள தகுதிபொருந்திய ஒரு குகையா

னது தன்னேவந் தடைந்தவர்கட்குத் தவத்தையும் அதன் பய
ஞகிய முத்தியையுங் கொடுக்கும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

இகத்தினில் விராதனுக் கிந்திரனெ ரேதுவி
 னிடுஞ்சாப மீண்டிநலிநா
ளிங்கடைந் தெம்பிரா னிணையடிகள் பூசித்
 திடர்க்கடல் கடந்ததுகலி
யுகத்திற் பெரும்பாவ முலகுளுற் றிடுதலினவ்
 வும்பர்க் கலாதிம்பருக்
குட்புகுந் திணையடிக டரிசிக்க முடியாத
 வுயர்வுதாய் மைகளுடையது
மகத்துக் களிற்சைவ போதா யனப்பெயர்
 மகாமுனிவர் சுரரசுரர்மெய்
மார்க்கத்து முன்னுள்ள மனிதர்சுத் தாத்துவித
 மாதவத் திருடிகளொடுஞ்
சகத்திருடி யும்மருச் சித்தருட் பெற்றதிது
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இகத்தினில் விராதனுக்கு இந்திரன் ஒர் ஏதுவின் இடுஞ் சாபம் ஈண்டி நலிநாள் - இம்மையின்கண்ணே விராத னென்னும் இராக்கதனெருவனுக்கு ஒரேதுப்பற்றி இந்திர னிட்ட சாபந் தன்னேவந்து பற்றி வருத்துங் காலத் தில்,—இங்கு அடைந்து எம்பிரான் இணேயடிகள் பூசித்து இடர்க்கடல் கடந்தது - இத்திரிகோண மலையை யடைந்து எம்முடைய கோணேசரது உபயதிருவடிகளைப் பூசித்து அவ் விந்திர சாபத்தான் வந்த துன்பசாகரத்தை அவ்விராதன் தாண் டப் பெற்றுள்ளது,—கலியுகத்திற் பெரும்பாவம் உலகு உளுற்

றிடுதலின் - பாவயுகமாகிய இக்கலியுகத்தின் கண்ணே மிகப் பெரும் பஞ்சபாதகங்கண் முதலியவற்றை உலகத்தவர் செய்து கொண்டு வருதலினாலே,—உம்பர்க்கு அலாது இம்பருக்கு உள் புகுந்து இணை அடிகள் தரிசிக்க முடியாத உயர்வு தூய்மைக ளுடையது - அவ்விண்ணுலகத்தின்கண்ணுள்ள புண்ணிய சீலர் களாகிய தேவர்களுக்கல்லது இம் மண்ணுலகத்தின்கண் ணுள்ள பாவிகளாகிய மனிதர்களுக்கு ஆலயத்துட் சந்நிதானத் திற் பிரவேசித்துச் சுவாமியினுடைய உபய திருவடிகளையும் நேரே தரிசிக்கமுடியாத மகாமகிமையையும் மகாபரிசுத்தத்தை யும் உடையது,—மகத்துக்களிற் சைவ போதாயனப்பெயர் மகாமுனிவர் - மகான்களுக்குள்ளே சித்தாந்த சைவத்திற்குரிய போதாயனரென்னுந் திருநாமத்தையுடைய மகாமுனிவரும்,— சுரர் அசுரர்-தேவாசுரர்களும்,—மெய்ம்மார்க்கத்து முன்னுள்ள மனிதர் - சன்மார்க்கத்தின்கண் முற்காலத்துள்ள மானுட சிரேட்டர்களும்,—சுத்தாத்துவித மாதவத் திருடிகளொடும் சகத்திருடியும் அருச்சித்து அருட்பெற்றது இது - சைவசித் தாந்த மகாதவத்தையுடைய சைவ தபோதனர்களோடுஞ் சகத் தென்னும் பெயரையுடைய முனிபுங்கவரும் கோணேசரை அருச்சனை செய்து திருவருளைப் பெறத் தானிடம் பெற்றுக் கொண்டது இத்திரிகோணசலம்,—சாந்தநாயகிசமேத. எ - று.

குடிலைநீர்க் குமிழியாய்க் குன்று யெழக்கோயில்
கொண்டுதிகழ் கோணேசனைக்
குவலயத் திற்சிவ புராணசிர வணஞனை
கோதில்வர ராமசோழன்
கெடிலதீர்த் தத்தமர் புரோகித னுரைத்திடக்
கேட்டில னவன்சேய்சொலக்
கேட்டுக் கிரீடம் புனைந்துமக னுக்குக்
கிரீசர்திரு வருள்கிடைக்கப்

படிலல தருதுபவ பௌவமென் றங்கட்
　　படர்ந்துதிரி கூடசைலப்
பணிகள்பல வுஞ்செய்து பாவநா சத்தும்
　　படிந்துபர கதிபற்றினன்
சடிலமா துமையம்மை யுந்தாவி லருடரச்
　　சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். குடிலே நீர்க் குமிழியாய்க் குன்று யெழ - பிரணவமானது முதலிலே நீர்க்குமிழியாகத் தோன்றி அதன்பின்பு சிலாலிங்கப் பெருமலையாய்த் தோன்றுகிற்ப,—கோயில் கொண்டு திகழ் கோணேசனை - அதனையே தமக்காதாரமான தொரு கோயிலாகக் கொண்டு விளங்காநின்ற கோணேசுரரை,—குவலயத்திற் சிவபுராண சிரவணஞன கோது இல் வரராம சோழன் - இப்பூமியின்கண்ணே நித்திய சிவபுராண சிரவணரான குற்றமற்ற வரராமதேவ சோழ மகாராசாவானவர்,—கெடில தீர்த்தத்து அமர் புரோகிதன் உரைத்திடக் கேட்டிலன் - கெடிலதீர்த்தக் கரையிலிருந்து தம்மால் வருவிக்கப் பட்ட புரோகிதப் பிராமணர் இத்திரிகோணசல மகிமைகளைக் கூறுந் தெக்ஷிண கைலாயபுராண மான்மிய சரித்திரத்தை மாத்திரம் ஒருபிரித்தத்தை யிட்டுப் பிரசங்கிக்காது மறைத்து வைத்தலினாலே அதனைத் தாமொருபோதுங் கேட்டறியாதவராய் ஏனைய சிவபுராண சரித்திரங்களை யெல்லாம் அப்புரோகிதர் பிரசங்கிக்கக் கேட்ட அவ்வரசர்,—அவன் சேய் சொலக் கேட்டு - அப்புரோகிதரது புத்திரர் ஒருதினம் வந்து இத்திரிகோணசல புராணத்தைப் பிரசங்கிக்க, அதனை அன்றைக்கே புதிதாகக் கேட்டு (உடனே தன் சோழமண்டல ராச்சியத்தைத் துறந்து அத்திரிகோணசல மகாசிவக்ஷேத்திரத்துக்குப் போகும்

கருத்துடையராய்),—மகனுக்குக் கிரீடம் புனைந்து - குளக்கோடனாகிய தன் சிறு புத்திரனுக்கு மகுடாபிஷேகஞ் செய்து வைத்துவிட்டு,—கிரீசர் திருவருள் கிடைக்கப் படில் அலது அருது பவபௌவம் என்று அங்கட் படர்ந்து - கோணேசரது திருவருள் கிடைக்கப் பெற்றாலன்றித் தனது சனன சாகரம் வற்றி யொழியாதென்று அப்புராண சரித்திரத்தான் நிச்சயித்து, அத்திரிகோணசலத்திற் சென்று,—திரிகூட சைலப் பணிகள் பலவும் செய்து - அத்திருக்கோயிற் றிருப்பணிகள் பலவற்றையுந் தொடங்கி வெகு திரவியஞ் செலவிட்டுப் பூர்த்திசெய்து,—பாவநாசத்தும் படிந்து - பாவநாசதீர்த்தத்தினும் நித்திய நியமமாக ஸ்நானஞ்செய்து,—சடில மாதுமை யம்மையுந் தாவில் அருள் தரப் பரகதி பற்றினன் - அம்மகாராசா அத்திரிகோணசலத்தின்கண்ணே மாதுமையம்மை யென்னும் மற்றொரு திருநாமத்தையுடைய சடாமுடியை மேற்கொண்ட பிடியன்ன மென்னடையாருங் கேடற்ற பூரணனுக்கிரகத்தைச் செய்தருள மோட்சத்தை யடைந்தனர்,—சாந்தநாயகிசமேத. எ - று.

புரோகிதர் அங்ஙனம் உரைக்காதது இத்திரிகோணசல புராண சரித்திரத்தைக் கேட்டவுடனே அரசர் இராச்சியத்தைத் துறந்து அங்கே போய்விடுவார்; இராசாவின் புத்திரனோ சிறுவனா யிருக்கின்றான். அதனால் இராச்சியம் மற்றோர் அரசர் கையிலகப்படவுங்கூடும். அல்லது பிரசைகள் அரசின்றிப் பெருந்துன்ப மனுபவிக்கவேண்டியும் வருமென்னுங் கருத்துக்களாமெனக். (உஎ)

## சிவனொளிபாதமலையும், சமனொசலமும்.

நிகரில்சிவ னொளிபாத மென்றிங்கொர் குன்றுண்டு
  நிமலர்திரு வடிநிலைபெறு.
நீடுவட மேருபோற் றென்மகா மேருவிது
  நிலவுசம னொசலத்தைப்

புகரில்கம் பளைவலவை புகழுமா வலிகங்கை
  பொற்புமிகு கல்லாறெனப்
புகலுமீ ரிருநதிகள் புடைசூழு மிவைதமிற்
  புல்லுமா ணிக்கமேநூல்  [ர்
பகருமா மதுரையெம் பரமர்கைக் கொடுசென்று
  பாண்டிய குமாரன்மகுடம்
பண்டுசெயு மாறவ னமைச்சர்க்கொர் வணிகராய்ப்
  பகருமா ணிக்கமணியாஞ்
சகமீது குடமுழா நந்தீ சனைத்தந்த
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நிகரில் சிவனொளிபாதம் என்றிங்கொர் குன்று உண்டு - தனக்கு நிகரில்லாத சிவனொளிபாத மென்னும் பெயரையுடைய ஒரு மகாபர்வதம் இவ்விலங்கையின் கண்ணுள்ளது,—நிமலர் திருவடி நிலைபெறும் - அம்மலையின் உச்சியிலே கடவுளது திருவடிச் சுவடொன்று பதிந்து நிலை பெற்றிருக்கும்,—நீடு வட மேருபோல் தென்மகா மேரு இது - உயர்வாகிய உத்தரமகா மேருவைப்போல இது தெக்ஷிணமகாமேருவாம்,—நிகரில் சமனு சலத்தை - இதுநிற்க; தனக்கு நிகரற்ற சமனு சலத்தை,—புகரில் கம்பளை வலவை புகழும் மாவலிகங்கை பொற்புமிகு கல்லாறெனப் புகலும் ஈரிருநதிகள் புடைசூழும் - குற்றமற்ற கம்பளை, வலவை, புகழப்படும் மாவலிகங்கை, அழகு மிகுந்த கல்லாறென்று பெயர் சொல்லப்படும் நான்கு நதிகள் பக்கத்திற் சூழ்ந்து பிரவாகிக்கும்,—இவை தமிற் புல்லும் மாணிக்கமே - இச்சமனுசல மலையையடுத்த இந்நதிகளிலே உற்பத்தியாகின்ற மாணிக்க ரத்தினங்களையே,—நூல் பகரும் மா மதுரை எம்பரமர் கைக் கொடு சென்று-இறையனாகப்பொருளுலைத்

திருவாய்மலர்ந்தருளிய பெருமை பொருந்திய மதுரையி லெழுந்தருளியிருக்கின்ற எம்பரம பிதாவாகிய சோமசுந்தரக் கடவுளானவர் தம்முடைய அருமைத்திருக்கரத்தா லெடுத்துக்கொண்டு சென்று,—ஓர் பாண்டிய குமாரன் மகுடம் பண்டு செயுமாறு அவனமைச்சர்க்கு ஓர் வணிகராய்ப் பகரும் மாணிக்க மணியாம் - ஒரு பாண்டிய ராசகுமாரனுக்குக் கிரீடத்தைச் செய்விக்கும்படி, இறந்துபோன அப்பாண்டியனுடைய மந்திரிகட்கோர் செட்டியாகி விற்ற மாணிக்க ரத்தினங்களாம்; (இம்மாணிக்க வரலாற்றினைப் பெரும்பற்றப் புலியூர்நம்பி திருவிளையாடலிற் கண்டுகொள்க),—சகமீது குடமுழா நந்தீசனைத்தந்த - கைலாயகிரியின்கணிருந்த குடமுழா நந்தீசரை இப்பூமியிலே திருவாதவூரிலே மாணிக்கவாசக சுவாமிகளாகத் திருவவதாரஞ் செய்யும்படி யனுப்பியருளிய,—சாந்தநாயகிசமேத. எ - று.

இக்குடமுழாநந்தீசரே மாணிக்கவாசகசுவாமிகளாக அவதாரஞ் செய்தாரென்பதனை, "குராமல ரோடராமதியஞ் சடைமேற் கொண்டாய் குடமுழநந்தீசனை வாசகனுக்கொண்டாய்" என வருந் திருநாவுக்கரசுநாயனர் பொதுத் திருத்தாண்டகத் தேவாரத்தானுமறிக. இத்தேவாரக்கூற்றின் இவ்வுண்மைப்பொருளை அறியாத தேவாரபுத்தகப்பதிப்புப் பண்டிதரொருவர், 'வாசகன்' என்பதற்கு வீட்டிலே வசிப்பவன் எனப் பொருள்கொண்டு, அதனை நந்திதேவர் தலையின்மேற் சுமத்தி, விபரீதார்த்தங் கொண்டமை இறப்பவும் அசம்பாவிதமேயாமெனை மறுத்தொழிக்க. (உஅ)

## கதிர்காமசைலம்.

மலைகளுட் டிலகமாங் கதிர்காம சைலத்து
மான்மியங் கயிலையுறையு
மறைமுத லுமைக்கருள்செய் பின்னர்நந் திக்கருள
மற்றவன் மாணுக்கருக்

கிலேமறைந் துறுகாயி னரிதெடுத் தீந்திடலு
மிதுசத்ய வதிபுத்திரற்
கெட்டிற் றிவன்கூத முனிவற் கியம்பலுமிவ்
விருடிசித் தாச்சிரமிகட்
குலேவிலா துதவினு ஞெளிர்காந்த மாங்கடலி
லுளகயிலே பயில்சங்கிதை
யுற்றதக் கிணைகலே மான்மிய முரைக்குமிஃ
தியர்வொப்பில் பாவியேன்புன்
றலேயினின் முள்சூட்டு தருணமும் முளதாங்கொல்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மலேகளுள் திலகமாம் கதிர்காமசைலத்து மான்மியம் - இந்நிலவுலகத்தின்கண்ணுள்ள விசேடமான மலேகளே யெல்லா மொருங்கு திரட்டிக் கரசரணுதி அவயவங்களே யுடைய ஒரு வடிவமாக உருவகப்படுத்தின் அவ்வுருவத்தின் நெற்றியிலிட்ட சிந்தூரதிலகம் போன்று விளங்குமத்துணே மகாவிசேடத்தையுடைய கதிர்காமசைலத்தினது மகோன்னத மகிமைகளே,—கயிலே யுறையும் மறைமுதல் உமைக்கு அருள் செய்பின்னர் - கைலாசகிரியின்கண் வீற்றிருக்கின்ற ஸ்ரீகண்ட பரமசிவனுனவர் தமது அருட்சத்தியாகிய உமாதேவியம்மை யாருக்குத் திருவாய்மலர்ந்தருளிச் செய்தபின்னர்,—நந்திக்கருள - திருநந்திதேவருக்குத் திருவாய்மலர்ந்தருள,—அவன் மாணுக்கருக்கு இலேமறைந்துறுகாயின் அரிது எடுத்தீந்திடலும் - அத்திருநந்திதேவர் தம்மாணுக்கர்களுக்கு ஒருவிருட்சத்தின் இலேகளுக்குள்ளே மறைந்து பிறருக்குத் தெரிந்து பறிக்கப்படாத காய் கனிகளேப்போல அறிவிற்சிறந்த பெரியோரனேவரது அறிவுக்கும் புலப்படாது கலேகளுண் மறைந்திருந்த இக்

கதிர்காம சைலமான்மியங்களை அருமையாக நூல்களினின்று மாங்காங்கு எடுத்து உபதேசித்தலும்,—இது சத்யவதி புத்திரற்கு எட்டிற்று - இம்மகிமை கன்ன பரம்பரையானே யோசனகந்தி, பரிமளகந்தியென்னும் மற்றிரு பரியாயநாமங்களையுடைய சத்தியவதி யென்னும் பெண்ணினது புத்திரராகிய வியாசமுனிவரது காதிற் கெட்டியது,—இவன் சூதமுனிவற்கு இயம்பலும் - இவ்வியாசர் இம்மகிமையைத் தம்மாணுக்கராகிய சூதமுனிவர்க்கு உபதேசித்தலும்,—இவ்விருடி சித்தாச்சிரமிகட்கு உலைவு இலாது உதவினன் - இச்சூதமுனிவர் நைமிசாரணிய விருடிகட்குச் சந்தேக விபரீதங்களாகிய கேடுகள் சிறிதுமே இன்றி யுண்மையாகவே உபதேசித்தனர்,—இஃது ஒளிர் காந்தமாங் கடலிலுள கயிலைபயில் சங்கிதையுற்ற தக்கிணகயிலை மான்மியம் உரைக்கும் - இதனைப் பதினெண்புராணங்களுண் மேம்பட்டு விளங்காநின்ற புராணநாயகமாகிய காந்தபுராண சமுத்திரத்தின்கண் ணுள்ள கயிலாயசங்கிதையின்கட் பொருந்திய தக்ஷிணகயிலாயமான்மியம் விரித்துப் பிரசங்கிக்கும்,— உயர்வு ஒப்பு இல்பாவியேன் புன்றலையின் நின் தாள் சூட்டு தருணமும் உளதாங்கொல் - பாவஞ்செய்தலில் மற்றொருவருமொப்புயர்வில்லாத மகாபாவியாகிய தமியேனது புன்றலையின் கண்ணே தேவரீருடைய நிருமலமாகிய திருவடியைச்சூட்டித் தீக்ஷை செய்யுந் தருணமும் தமியேனுக்குவருங் கொல்லோ அதனை யறிகின்றிலேன்,—சாந்தநாயகிசமேத. எ - று. (உக)

சூரனை வதைத்துழிச் சோதிட்கா மாசலந்
துகளிலா வேமகூடத்
தொல்பெயர் புனைந்திடுங் கதிர்காம சைலத்தொர்
தூய்நக ரியற்றுதியென
மாரனை வதைத்தவன் மைந்தனுரை தந்திடலுங்
வான்றபதி விசுவகர்மா
மாமேரு நிகராக வொளிர்குகா லயமொன்று

மரபின் வகுத்துதவினன்
றாரகனை வெல்குரிசில் கண்டுளக் களியினத்
தளியினரி யாசனத்திற்
றங்கினன் விண்டுமுதல் வானவ ரெலாமவன்
றன்னடி யருச்சித்தனர்
சார்குமர தந்திரத் தனிமந் திரத்தினற்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சூரனை வதைத்துழிச் சோதிட்காமாசலம் தூக ளிலா எமகூடத்தொல்பெயர் புனைந்திடுங் கதிர்காமசைலத்து - சூரபன்மாவைக் கொன்ற காலத்திலே சோதிட்காமாசலமுங் குற்றமற்ற எமகூடமுமாகிய பழைய திருநாமங்களை மேற்கொண்ட கதிர்காமசைலத்தின்கண்ணே;—ஓர் தூய்நகர் இயற்றுதியெனு மாரனை வதைத்தவன் மைந்தன் உரை தந்திடலும் - ஒரு பரிசுத்தமாகிய ஆலயத்தினை நமக்குச்செய்யக்கடவாயென்று மன்மதனைக் கொன்ற சிவபெருமானுடைய இளைய திருக்குமாராகிய சுப்பிரமணியக்கடவுள் பணித்தருளுதலும்,—வான்றபதி விசுவகர்மா - உடனே தேவதபதியாகிய விசுவகர்மாவானவன்,—மாமேரு நிகராக ஒளிர்குகாலயம் ஒன்று மரபின் வகுத்து உதவினன் - மாமேருகிரியை யொப்பாக ஒரு சுப்பிரமணியாலயத்தைச் சிற்பநூல் விதிப்படி சித்திரங்களைவகுத்து அழகாகச்செய்து முடித்துக் கொடுத்தனன்,—தாரகனை வெல் குரிசில் கண்டு உளக்களியின் அத்தளியின் அரியாசனத்திற் றங்கினன் - தாரகாசுரனைச் செயித்த அச்சுப்பிரமணியக்கடவுள் அதனைப் பார்த்துத் திருவுளமகிழ்ச்சியோடு அவ்வாலயத்தின்கண்ணுள்ள சிங்காசனத்தின்மீது தாமே வீற்றிருந்தருளினர்,—விண்டு முதல்வானவரெலாம் சார்குமர தந்திரத்தனி மந்

திரத்தினால் அவன்றன்னடி அருச்சித்தனர் - விட்டுணு முதலாகிய தேவர்களெல்லாம் யுத்தஞ்செய்தபோதுளதாகிய அசுத்தம் நீங்கும்படி வேதாகமசாரங்களையுடைய குமாரதந்திர விதிப்படி அம்மந்திரங்களினாலே ஆகாயகங்கா தீர்த்தத்தைக்கொண்டு அபிஷேகஞ்செய்து அக்கடவுளது உபயதிருவடிகளையும் அருச்சித்தனர்,—சாந்தநாயகிசமேத. எ - று. (௩௦)

நவகுண்ட தீர்த்தமென் றொன்றுகுன் றகமேவ
நல்கின னம்பிதம்பி
நண்ணியதி னடியேனை ரிகபர சிலாக்கியமு
நன்கடைவர் நாடின்மற்றோர்
பவகுண்ட மனுகிடார் பச்சைமான் மருகனும்
பரிவொடிங் கிதினடியே
பரவுமிக் கிரியைவிட் டொருவிடா தனுதினம்
பயிலுவா னிழிபரமதச்
சிவகண்ட கக்கள்வ னயினும் பானுமுன்
சேரந்த காரபடலச்
சிதைவினிற் றன்மதந் தீர்குவான் சேர்குவான்
சித்தாந்த சைவத்தினைத்
தவகண்டி தச்சண்டி யைத்தடுத் தாட்கொள்வை
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நம்பி தம்பி நவகுண்ட தீர்த்தமென்றொன்று குன்றகம் மேவ நல்கினன் - அப்பொழுது, சுப்பிரமணியக்கடவுளுக்குத் தம்பியாகிய வீரவாகுதேவர் நவகுண்ட தீர்த்தமென்று ஒரு தீர்த்தத்தடாகத்தை அம்மலையினிடத்துப் பொருந்தத் தம்முடைய தண்டத்தினலடித்து ஒன்பதுகுண்டமாக

உற்பத்திசெய்தனர்,—நண்ணி அதில் ஆடினோர் இகபர சிலாக்கியமும் நன்கு அடைவர் - அத்தீர்த்தத்திற் சென்று விதிப்படி ஸ்நானஞ்செய்தவர்கள் இம்மை மறுமை யின்பங்களாகிய விசேஷானு போகங்களையும் மோக்ஷத்தையும் நிச்சயமாக அடைவார்கள்,—நாடின் மற்றோர் பவகுண்டம் அணுகிடார் - ஆராயுமிடத்து மற்றொரு சனனக்குழியிலகப்பட்டுப் பிறக்கவும்மாட்டார்கள்,—பச்சைமால் மருகனும் பரிவொடு இங்கு இதில் ஆடியே - பசியநிறத்தையுடைய திருமான்மருகராகிய சுப்பிரமணியக்கடவுளும் ஆன்மாக்கண்மீது கொண்ட கருணையினாலே இத்தீர்த்தத்திலே முதலில் ஸ்நானஞ்செய்து,—பரவும் இக்கிரியைவிட்டு ஒருவிடாதனுதினம் பயிலுவான் - துதிக்கத் தகுந்த இக்கதிர்காமசைலத்தை விட்டுப் புறத்தே நீங்காது அங்கே பிரதிதினமும் வீற்றிருந்தருளுவாராயினார்,—இழிபரமதச் சிவகண்டகக் கள்வனாயினும் - தாழ்ந்த அந்நிய சமயத்தை யனுசரித்துச் சிவமதத்தைக் கண்டிக்கின்ற கபட சித்தத்தையுடையவனாயினும்,—பானுமுன் சேர் அந்தகார படலச் சிதைவினில் தன்மதம் தீர்குவான் சேர்குவான் சித்தாந்த சைவத்தினை - இத்தீர்த்தஸ்நானஞ்செய்தவன், ஆதித்தசந்நிதியி லெதிர்ப்பட்ட இருட்படலத்தின் கேட்டைப்போலத் தனது அந்நியமதத்தை விட்டுச் சித்தாந்த சைவசமயத்திற் பிரவேசிப்பான்,—தவகண்டிதச் சண்டியைத் தடுத்து ஆட்கொள்வை - சரியை கிரியைகளாகிய தவங்களினாற் கண்டிக்கப்பட்ட சண்டித்தனத்தையுடைய தமியேனைத் தடுத்தாட்கொண்டருளக்கடவீர்,—சாந்தநாயகி சமேத எ - று. சிலாக்கியமு மென்னு மும்மை எதிரது தழீஇயிற்று. (ருக).

இளையவன் பின்கதிரை மலைநின்று மொருவியோ
ரிறையிற் செயந்தியெய்தி
யோரார் பரங்கிரியி னமரர்மா தினைமணந்
தியல்கந்த வெற்புற்றிருந்

துளமகிழ் வுடன்வள்ளி மலையினிற் குறமாதை
யுயிருறத் தழுவியவளோ
டோங்குதணி காசலத் துற்றுரீஇக் குஞ்சரியை
யூடறிர்த் தொன்றாக்கியுட்
புளகிதக் களபமா முலையவ ருடன்வேத
புரியிற்பு குந்தெந்தைதாள்
போற்றிவீ ஞகான புரமதி லிறங்கினேன்
பொலிகண்டி யிற்புக்கனன் [கொல்
றளையவிழ்த் தளியறக் குளமுகிழ்த் தருள்வாய்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இளையவன் பின் கதிரை மலைநின்றும் ஒருவி ஓரிறையிற் செயந்தி யெய்தி - என்று மிளையவராகிய சுப்பிரமணியக்கடவுள் அதன்பின்னர்க் கதிர்காமசைலத்தினின்றும் நீங்கி ஓரிறைப்பொழுதுக்குள்ளே திருச்செந்தூரை யடைந்து,—ஏரார் பரங்கிரியின் அமரர் மாதினை மணந்து - பின்பு திருப்பரங்குன்றத்திற் சென்று அங்கே தெய்வயானையம்மையாரை விதிப்படி திருமணம்புரிந்து,— இயல்கந்த வெற்புற்றிருந்து - அதன்பின்னர் தமக்குறைவிடமாகப் பொருந்திய கந்தகிரியைத் தெய்வயானையம்மையோடடைந்து அங்கே சிலதினம் வீற்றிருந்து,—உளமகிழ்வுடன் வள்ளிமலையினிற் குறமாதை உயிருறத்தழுவி - பின்பு வள்ளிமலையிற் சென்று அங்கெழுந்தருளும் வேட்டுவக்கன்னிகையாகிய வள்ளிநாயகியம்மையைக் காந்தருவவிவாகநெறியினாலு யிருமுடம்பும்போல ஒற்றுமையுறத் தழுவித் திருமணஞ்செய்து,—அவளோடு ஓங்கு தணிகாசலத்துற்று - அவ்வம்மையாரோடு உயர்ச்சிபொருந்திய தணிகாசலத்தையடைந்து,—ஒரீஇக் குஞ்சரியை ஊடல் தீர்த்து உள்

ஒன்று ஊக்கி - அவ்விடத்தைவிட்டு நீங்கிக் கந்தகிரியிற் றனித்திருந்த தேவகுஞ்சரியம்மையாருக்குப் பிரிவான் வந்த ஊடலை நீக்கி இவ்விருசத்திகளோடும் பழையகதிர்காம சைலத்துக்குச் செல்லவேண்டுமென்கின்ற இவ்வொருகாரியத்தைத் திருவுளத் தடைத்து,—புளகிதக் களபமாமுலேயவருடன் வேதபுரியிற் புகுந்து - அவவிடத்தைவிட்டுப் புறப்பட்டுப் புளகிதம் பொருந்திய களப கஸ்தூரிகளையணிந்த முலைகளையுடைய அவ்விருசத்திகளோடும் வேதாரணியத்தை அடைந்து, — எந்தைதாள் போற்றி - அங்கெழுந்தருளியிருக்கும் எம்பரமபிதாவாகிய வேதாரணியேசுவரருடைய உபயதிருவடிகளையும் தரிசித்து வணங்கித் துதித்து,—வீணுகான புரமதில் இறங்கிஞேன் பொலிகண்டியில் புக்கனன் - யாழ்ப்பாணத்தின் வடகடற்கரையிலே (விளையாட்டாக ஏறிவந்த மரக்கலத்திினின்றும் அம்மைமாரோடும்) இறங்கியருளினவர் அக்கடற்கரையிலுள்ள பொலிகண்டி யென்னும் ஊரிற் பிரவேசித்தருளிஞர்,—தளை அவிழ்த்து அளியனுக்கு உளம் முகிழ்த்து அருள்வாய் கொல் - தமியேனை அநாதியே பந்தித்த பாசக்கட்டையவிழ்த் தெளியேனுக்கும் திருவுள்ளத்தில் அருண் முகிழ்த் தனுக்கிரகஞ்செய்தருளுவீரோ,—சாந்தநாயகிசமேத. எ - று. (கூஉ)

## கந்தவனம், கந்தாத்திரி, சமனசலம், கண்டகி வடகாந்தார தலங்கள்.

புக்கினிய சமிவனங் கோயில்கொண் டருள்சாமி
புலவர்பூ சனைபுரி தரப்
பூரணு னுக்கிரக மழைபொழிந் தமர்தலாற்
புகல்கந்த வனமாயதாற்
றிக்கெங்கு நிமிர்புகழ்த் தேவார தலமான
திரிகோண சைலமருவித்
திகழுமத் திரியொன்றின் வைகிஞ னக்கிரி

சிறந்தகந் தாத்திரியதாம்
முக்கண்டி யூருளான் பின்னுமவ் வயினீங்கி
முந்துசம ஞசலத்தின்
முடுகிஞ னிடுகிடைத் தெரிவையர் கடம்புடன்
முழுதருள் புரிந்துமுதலிற்
றக்ககண் டகிகொள்வட காந்தார மெய்திஞன்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ-ள். புக்கினிய சமிவனம் கோயில் கொண்டருள் சாமி - பொலிகண்டியிற் பிரவேசித்து அவ்விடத்துள்ள வன்னி வனத்தின்கண்ணே கோயில்கொண்டெழுந்தருளிய சுப்பிர மணியக்கடவுளானவர்,—புலவர் பூசனை புரிதரப் பூரணனுக் கிரகமழை பொழிந்து அமர்தலால் - விட்டுணு முதலிய தேவர்கள் அம்மரக்கல தோஷம் நீங்கும்படி மகாபிஷேகம் முதலியன செய்து பூசிக்க, அவர்கட்குப் பூரணனுக்கிரகமாகிய விடாமழையைப் பொழிந்து வீற்றிருத்தலினல்,—புகல் கந்தவனம் ஆயதால் - அவ்வன்னிவனம் அன்றுதொடக்கம் புகழ்ந்து சொல்லத்தகுங் கந்தவனம் என்கின்ற காரணக்குறியை யுடையதாயிற்று,—திக்கு எங்கும் நிமிர் புகழ்த் தேவாரதலமான திரிகோணசைலம் மருவி திகழும் அத்திரி ஒன்றின் வைகிஞன் - அதன்பின்னர் அவ்விடத்தை விட்டகன்று, அட்டதிக்கும் பரவும் உன்னத கீர்த்தியையுடைய தேவாரம் பெற்ற மகா சிவ க்ஷேத்திரமாகிய திரிகோணசலத்தையடைந்து அங்கே விளங்காநின்ற ஒரு மலையின்கண்ணே சுப்பிரமணியக்கடவுள் வீற்றிருந்தருளிஞர்,—அக்கிரி சிறந்த கந்தாத்திரியதாம் - அதனல், அம்மலையானது அன்று தொடக்கம் அழகிய கந்தாத்திரியென்னும் காரணக்குறியையுடையதாயிற்று,—(இது இப்போது கந்த

சுவாமி மலையென வழங்குகின்றது.) முக்கண்டி ஊருளான் - பொலிகண்டி, கோயிலாக்கண்டி, மகாகண்டி என்னும் கண்டி யீற்றார் மூன்றின்கண்ணும் வீற்றிருக்கின்ற சுப்பிரமணியக் கடவுளானவர்,—பின்னும் அவ்வயின் நீங்கி முந்து சமனசலத் தின் இடுகு இடைத் தெரிவையர்கள் தம்முடன் முடுகினான் - பின்னரும் கந்தாத்திரியினின்றும் நீங்கி ஒசிகின்ற இடையினை யுடைய அவ்விரு சத்திகளோடும் முதன்மை பொருந்திய சமன சலத்தை அடைந்தருளி,—முழுது அருள்புரிந்து - அங்கே மேற்சொல்லிய தேவர்கள் பூசிக்க, பூரணானுக்கிரகஞ்செய்து,— முதலில் தக்க கண்டகிகொள் வடகாந்தாரம் எய்தினான் - அதன்பின்னர் வடகாந்தாரம் என்னும் வருமொழிக்கு முத லிலே பொருந்திய கண்டகி என்பதைக்கொண்ட கண்டகி வட காந்தாரமாகிய முள்ளாலங்காட்டை அடைந்தருளினார்,—சாந்த நாயகிசமேத. எ - று.

கண்டகி வடகாந்தாரம் என்புழி, கண்டகி - முள். வடம்- ஆலமரம். காந்தாரம் - காடு. எனவே, அவ்வடமொழி தமிழில் முள்ளாலங்காடென மொழிபெயர்க்கப் படுவதாயிற்று. சமி - வன்னி விருக்ஷம். அத்திரி - மலை. (நடு)

சம்மோதகிரி, ஷை கதிர்காமசைலம்.

எய்தினோன் வழிபா டியற்றிடத் தீர்ந்தெழீஇ
யிணையில்சம் மோதகிரியி
னேகினான் றிருவுள முகந்தனன் பூசைகொண்
டிம்மெனக் கதிரைமலையாந்
தெய்வீக தலமெய்தி யேபழைய சினகரஞ்
சேர்ந்தினி திருந்தருளினான்
சிவணிடுந் தெரிவையர்க ளிருவருந் தன்னய
றிகழ்ந்திடத் தேவர்முதலாம்

பொய்தீரு மன்பினோ ரனைவருங் கந்தவேள்
  பொன்னடிக் கபிடேகமும்
பொருவறு மலங்கார முங்கிவே தனமும்
  புரிந்துபூ சித்தேத்தினார்
சைவசம யத்தியா னின்னுஞ் சனிக்கினருள்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். எய்தினோன் - முள்ளாலங்காட்டை யடைந்தருளிய சுப்பிரமணியக்கடவுள்,—வழிபாடு இயற்றிடத் தீர்ந்து எழீஇ இணையில் சம்மோதகிரியின் ஏகினன் - விட்டுணு முதலிய தேவர்கள் தமக்கு வழிபாட்டைசெய்ய, அதனைவிட்டெழுந்து நிகரற்ற சம்மோதகிரியை அடைந்தருளினார்,—பூசைகொண்டு திருவுளம் உகந்தனன் - அத்தேவர்கள் அங்கே விசேஷபூசை செய்யத் திருவுள்ளத்திலேற்றுக்கொண்டு உகந்தருளினார்; (அதனன், அம்மலை அன்றுதொடக்கம் உகந்தமலை யென்னும் பெயரதாயிற்று),—இம்மெனக் கதிரைமலையாம் தெய்வீகதலம் எய்தி - பின்பு அவ்விடத்தினின்றும் நீங்கி அதிசீக்கிரம் கதிரைமலையாகிய தெய்வத்தன்மை பொருந்திய தமது பண்டைப்பாசறை எனப்படும் வாசஸ்தானத்தை அடைந்து,—பழைய சினகரம் சேர்ந்து தெரிவையர்கள் இருவரும் தன் அயல் திகழ்ந்திட இனிது இருந்தருளினன் - அங்குள்ள பழைய திருக்கோயிலையடைந்து உடன்வந்த தெய்வயானையம்மை வள்ளிநாயகியம்மை என்னுஞ் சத்திகளிருவரும் முறையே இடம் வலம் என்னும் இருமருங்கினும் எழுந்தருளி விளங்கச் சிங்காசனத்தின்மீது இனிதாக வீற்றிருந்தருளினார்,—பொய்தீரும் அன்பினோர் அனைவரும் - அப்போது மெய்யன்பினையுடைய ஆகாய வாசிகளனைவரும்,—கந்தவேள் பொன்னடிக்கு அபிடேகமும் - சுப்பிரமணியக்கடவுளுடைய பொன்

போலுந் திருவடிகளுக்கு அபிடேகமும்,—பொருவு அறும் அலங்காரமும் - நிகரற்ற அலங்காரமும்,—நிவேதனமும் புரிந்து பூசித்து ஏத்தினர் - நிவேதனமுஞ்செய்து அர்ச்சித்து வணங்கித் தோத்திரஞ்செய்தார்கள்,—யான் இன்னும் சனிக்கின் சைவசமயத்தின் அருள்-தமியேன் இன்னுஞ் சனன மெடுப்பது தேவரீரது திருவுள்ளக்கருத்தாயின், சைவசமயத்திலே சனன மெடுக்கும்படி திருவருள்செய்தருளக்கடவீர், — சாந்தநாயகி சமேத. எ - று. (நடச)

கதிர்காம மலைநாத னெந்தை தனையேத்து
கடவுளர்கண் முனிவர்சித்தர்
கந்தருவர் கின்னரர்கள் கருடர்கிம் புருடரொடு
ககனர்வரு முரகர்முதலாம்
பதினெண் கணத்தடி யவர்க்கெலாந் திருவருள்
பரிந்துபா லித்துநாளும்
பரிவினிற் கதிரைமலை தவிராது வைகினன்
பரமசுக முலகுபயில
முதிர்விநா யகர்தமலை வீரவா கமருமலை
மொழிதேவ ரேனுமலை
முதுவள்ளி மலையஞ்ச காமமலை செந்தமிழின்
முனிமலைக ளயலின்முடுகுஞ்
சதிரினுன் றிருவடி யடைந்திடத் தருவதோ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். கதிர்காமமலைநாதன் ஆம் எந்தை - கதிர்காம சைலத் தலைவராகிய எம்பரமபிதாவாயுள்ள சுப்பிரமணியக் கடவுளானவர்,—தனை ஏத்து கடவுளர் - தம்மை வணங்கித்

துதித்து வழிபடுந் தேவர்களும்,—முனிவர் - முனிவர்களும்,—சித்தர் - சித்தர்களும்,—கந்தருவர் - கந்தருவர்களும்,—கின்னரர் - கின்னரர்களும்,—கருடர் - கருடர்களும்,—கிம்புருடர் - கிம்புருடர்களும்,—ககனர் - ஆகாயவாசிகளும்,—வரும் உரகர் - வருகின்ற உரகர்களும்,—முதலாம் பதினெண்கணத்து அடியவர்க்கு எலாம் திருவருள் பரிந்து பாலித்து - முதலாகிய பதினெண் கணத்தடியார்களுக்கெல்லாம் தந்திருவருளை அன்பு கூர்ந்து பாலித்தருளி,—பரிவினில் பரமசுகம் உலகு பயிலக் கதிரைமலை தவிராது நாளும் வைகினன் - மேலான சுகங்களை உலகத்தினர் அனுபவிக்குமாறு அவ்வுலகினர் மேற்கொண்ட அன்பினிமித்தங் கதிரைமலையின்கண்ணே அநவரதமும் நீங்காது எழுந்தருளியிருப்பாராயினர்,—அது நிற்க;முதிர் விநாயகர் தம்மலை - அருண்முதிர்ந்த பிள்ளையார்மலையும்,—வீரவாகு அமரும்மலை - வீரவாகுமலையும்,—மொழிதேவ சேனைமலை - விதந்து கூறப்படுந் தெய்வயானையம்மைமலையும்,—முதுவள்ளிமலை - பழைய வள்ளிநாயகியம்மைமலையும்,—அஞ்சு காமமலை - பிரமா முதலிய தேவர்கள் இக்கலிகாலத்திற் கஞ்சிக் கலியுகவரதரிடத் தடைக்கலம் புகுந்து அன்னப்பக்ஷி வடிவாயிருக்கும் அஞ்சு காமமலையும்,—செந்தமிழின் முனிமலைகள்-செந்தமிழ்முனிவராகிய அகத்தியர்மலையும் ஆகிய இவ்வாறு மலைகளும்,—அயலின் முடுகும் - கதிரைமலைக்குப் பக்கமலைகளாகச் சமீபத்திருக்கும்,—சதிரில் உன் திருவடி அடைந்திட தகுவதோ - ஒன்றுக்கும் பற்றாத புழுத்தநாயினுங் கடையேனாகிய தமியேன் இலகுவாகத் தேவரீருடைய அருமைத் திருவடிகளை அடைந்திட முடியுங்கொல்லோ,—சாந்தநாயகிசமேத. எ - று. சம்மோதம் - சந்தோஷம். சதிர்-இலகு; திசைச்சொல். அஞ்சுகம் - அன்னம்.

## கதிர்காமதலம்.

அறிவிற் சிறந்துளோர்க் கல்லதொண் கதிரைமலை
யாலயமங் கணுகொணாதவர்க்

கதரிசன மாகலா னறுமுக னருட்கொடங்
ககிலகம் மியனைநோக்கி
நெறியிற் றிகழ்ந்திடு நெடுங்கோயி லயலொன்று
நிருமித் திடப்பணிப்ப
நீளிமா லயமென்ன வோர்குகா லயமழகு
நிகழப்புரிந்து நினைவிற்
குறியிற் றுலங்கிமுக் கோணவடி வாகியொளிர்
கோதறு பிராகாரமுங்
குகசந்நி திக்குநேர் வள்ளிநா யகியம்மை
கோயிலுங் கொளநிறுவினான்
றயியிற் பிறந்தநர சிங்கபங் கஞ்செய்த
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இதுகாறுங் கதிரைமலையின் விசேடங்களைக்கூறி, அக் கதிரைமலையின் அடிவாரத்திலே மாணிக்கக் கங்கைக்கரையிலே பூமியிலிருக்குங் கதிர்காமதலத்தின் விசேடங்களை ஈண்டுக்கூறும்படி ஆசிரியர் எடுத்துக்கொண்டனர்.

இ - ள். அறிவிற் சிறந்துளோர்க்கு அல்லது ஒண்கதிரைமலை ஆலயம் அஃதல்லாதவர்க்கு அதரிசனம் ஆகலான் - ஞானிகளுக்குமாத்திரம் கட்புலனாவதல்லது, ஒளிபொருந்திய கதிர்காமசைலத்து உச்சியிலுள்ள சுப்பிரமணியர் ஆலயம் அஃதல்லாத அஞ்ஞானிகளுக்குக் கட்புலனாகாமையினால்,—அறுமுகன் அருள்கொடு அங்கு அகிலகம்மியனைநோக்கி - அங்கெழுந்தருளியிருக்குஞ் சண்முகப் பெருமானானவர் சீவகாருண்ணியத்தைத் திருவுள்ளத்தடைந்து, தேவதபதியாகிய விசுவகன்மாவைப் பார்த்து,—நெறியில் திகழ்ந்திடும் நெடுங்கோயில் அயல் ஒன்று

நிருமித்திட பணிப்ப - சிற்பவிதியின்படி அமைந்து பிரகாசிக்கும் உயர்வாகிய தமதாலயமொன்றைக் கதிரைமலையின் பக்கத்துள்ள பூமியிலே மனத்தான் நிருமித்துச் செய்யுமாறு கட்டளையிட்டருள,—நீள் இமாலயம் என்ன ஓர் குகாலயம் அழகு நிகழ நினைவில் புரிந்து - உயர்வாகிய இமயமலையின்கண்ணுள்ள தமதாலயத்தைப்போல ஒரு குகாலயத்தினைப் பேரழகுபொருந்த மனத்தான் நினைந்து நிருமித்து,—குறியின்துலங்கி முக்கோண வடிவாகி ஒளிர் கோதறு பிராகாரமும் - குமாரதந்திரத்திற் கூறப்பட்டு விளங்கி முக்கோண வடிவாகிப் பிரகாசிக்கின்ற குற்றமற்ற வீதியும்,— குகசந்நிதிக்கு நேர் வள்ளிநாயகியம்மை கோயிலும் கொள நிறுவினன் - சுப்பிரமணியசந்நிதானத்திற்கு நேராகக் கிழக்குத்திக்கிலே வள்ளிநாயகியம்மை எழுந்தருளியிருக்குங் கோயிலைபுஞ் சித்திரங்களமையக்கட்டி, அதனை நிலைபெறச் செய்தனன்,— தறியிற் பிறந்த நரசிங்கபங்கஞ்செய்த - இரணியனைக் கொல்லும்பொருட்டு, அவன் அத்தாணிமண்டபக் கற்றாணினின்றும் அதனைப் பிளந்து தோன்றிய நரசிங்கத்தின் செருக்கை அழித்தடக்கிய,—சாந்தநாயகிசமேத. எ - று.

புடையிற் சமாதியோ கப்பொருவின் மண்டபம்
புகர்முகக் களிறுலயம்
புங்கவி மகாலயஞ் சண்டேச ராலயம்
புகழ்வீர வாகுமுதனன்
னடையிற் சிறந்திட்ட நவவீர ராலயமு
நனிநல்கி யமதிக்கினி
ளுடக்கி ராகார மும்மேற் றிசைச்சைவ
நற்றபோ தனர்கண்மடமும்
வடதிக்கி னிற்சித்ர கல்யாண மண்டபமும்
வருவித் தருச்சனைசெயு
மறையவர்க் குறையுள்பரி சாரகர்க் கில்லங்கண்
மரபிற் புரிந்துதவினன்

சடையிற் பிறைக்கண்ணி யாய்சட் சு குண்ணியாய்
　சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். புடையிற் சமாதியோகப் பொருவில் மண்டபம் - அக்கோயிலுக்குப் பக்கத்திலே நிகரற்ற சமாதியோக மண்டபமும்,—புகர்முகக் களிறு ஆலயம் - புற்கென்னு நிறம்பொருந்திய யானைமுக விநாயகக்கடவுளாலயமும்,—புங்கவி மகாலயம் - தெய்வயானையம்மை மகாலயமும்,—சண்டீசர் ஆலயம் - சண்டேசுரர் ஆலயமும்,—புகழ்வீரவாகு முதல் நல்நடையில் சிறந்திட்ட நவவீரர் ஆலயமும் நனி நல்கி - தம்மைப் புகழ்ந்து வழிபடுகின்ற வீரவாகு முதலிய நல்லொழுக்கத்திற் சிறப்புற்ற நவ வீரராலயங்களும் மிகவும் மனத்தாளினைந்து செய்து,—யமதிக்கினில் நாடு அக்கிராகாரமும் - தெற்குத்திக்கிலே பிராமணர்களால் விரும்பப்படுகின்ற அக்கிராகாரமும்,—மேற்றிசைச் சைவநல் தபோதனர்கள் மடமும் - மேற்குத்திக்கிலே நல்ல சைவ சந்நியாசிகள் திருமடமும்,—வடதிக்கினில் சித்ரகல்யாண மண்டபமும் வருவித்து - வடக்குத்திக்கின்கண்ணே சித்திர கல்யாணமண்டபமும் உற்பத்திசெய்து, — அருச்சனைசெயும் மறையவர்க்கு உறையுள் - சுப்பிரமணியக்கடவுளுக்கு நித்திய பூசைசெய்யும் சிவப்பிராமணருக்குத் திருமாளிகையும்,—பரிசாரகர்க்கு இல்லங்கள் - திருமடைப்பள்ளிப் பிராமணர்களுக்கு வீடுகளும்,—மரபிற் புரிந்து உதவினன் - முறையானே செய்து கொடுத்தனன்,—சடையிற் பிறைக்கண்ணியாய் - திருச்சடையின்கண்ணே பிறைமதிக்கண்ணியை யுடையவரே,—சுசட்குண்ணியாய் - சுத்த சாட்குண்ணியரே,—சாந்தநாயகிசமேத. எ - று.　　(௩௭)

கோயிலிவ் வாறுறக் கோலியள கையினிற்
　குலாவக் குகன்சண் ணுறீஇக்

குதிகொளவ வீரரொடு பரிவார தேவர்பிறர்
குழுமிக்கை கொட்டிநட்டி
வாயில்வந் தனசொலி வழுத்திட வுடன்வந்து
வல்லைநல் லருள்வழங்கி
வள்ளறன தாலயத் தெய்தியரி யணைமீது
வைகினன் வனிதையரொடும்
ஆயிரமு முகனருட் டிறனு ரளந்தறிவ
ரவரெவ ரவனடி மலர்க்
கர்ச்சனை புரிந்தொழுந் தன்பினிற் றதிநவில
வகல்கிலா தமர்ந்திடென்றன்
றுயிலினி யாளென்னை நோயினனி யாளன்னை
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர நிலவாசனே.

அ. இ - ள். கோயில் இவ்வாறு உறக் கோலி அளகையினில் குலாவ - மத்தியிலே சுப்பிரமணியக்கடவுள் ஆலயமும் அதன் சுற்றுப்பக்கங்களிலே பரிவாரதேவர் ஆலயங்களும் பிறவும் இங் ஙனம் பொருந்துமாறு விசுவகன்மாவினாலே செய்யப்பெற்று, கதிர்காமதலம் குபேரனது அளகாபுரியைப்போலப் பிரகாசியா நிற்ப,—குகன் கண்ணுறீஇ - சுப்பிரமணியக்கடவுள் அதனைக் கண்ணுற்று,—குதிகொள் நவவீரரொடு பரிவாரதேவர் பிறர் குழுமிக்கை கொட்டி நட்டி வாயில்வந்தனசொலி வழுத்திட - ஆனந்தத்தாற் குதிகொள்ளுகின்ற நவவீரர்களும் இந்திரன் முதலிய பரிவார தேவர்களும் இருடிபுங்கவர் முதலிய பிறரும் ஒருங்கு திரண்டு கைகொட்டிக் கூத்தாடித் தம்மீது தத்தம் வாயில் வந்தன வந்தனவாகிய தோத்திரங்களைச் சொல்லித் துதிக்க,—உடன வந்து வல்லை நல் அருள் வழங்கி - அக்கதிர் காமசைலத்தினின்றும் எழுந்தருளிச் சீக்கிரம் அவர்களுடன்

அடிவாரத்து வந்து நல்ல திருவருளைப் பிரசாதித்து,—வள்ளல் தனது ஆலயத்து எய்தி அரியணைமீது வனிதையரொடும் வைகினன் - பெருவள்ளலாகிய கதிரைமலைநாதர் தமது ஆலயத்தின்கட் பிரவேசித்து அங்குள்ள சிங்காசனத்தின்மீது தமது சத்திகளோடும் வீற்றிருந்தருளினர், — அவரெலாம் அவன் அடிமலர்க்கு அர்ச்சனை புரிந்து எழுந்து அன்பினில் துதிசுவில - முன்னர்க்கூறிய அவ்விட்டுணு பிரமா முதலிய தேவர்களெல்லாம் அபிஷேகாதிகளோடு தமக்கு அருச்சனைகளைச்செய்து விழுந்து வணங்கி எழுந்துநின்று அன்பினலே தோத்திரங்களைக் கூறுநிற்க,—அகல்கிலாது அமர்தும் என்றுன் - அவ்வழிபாட்டிற்கு வரப்பேருக உங்கள்பொருட்டும் இக்கதிர்காமதலத்தை நாம் ஒருபோதும் விட்டு நீங்காது எப்போதும் இங்கே இருப்பேம் என்று உறுதியாகிய வாக்குத்தத்தஞ் செய்தருளினர்,—ஆயில் அறுமுகன் அருள் திறம் ஆர் அளந்து அறிவர் - ஆராயுமிடத்துக் கதிர்காமதல சண்முகசுந்தரக் கடவுளினது திருவருட்பெருக்கைச் சிற்றறிவினையுடைய பசுவர்க்கத்துட்பட்ட மனிதர்களுள் யாவர்தாம் வரையறுத்தறிந்து உள்ளவாறு கூறவல்லுநர், (ஒருவருமிலரென்பதாம்),—தாயில் இனியாள் - பெற்ற நற்றாயினும் பார்க்க அநந்தகோடிமடங்கு நல்லவரும்,—என்னை நோயின் நனி ஆள் அன்னை - எழை யடியேனுகிய தமியேனைச் சனன மரண நோய்களினின்றுந் தவிர்த்து மிகவு மாட்கொண்டருளும் பரமமாதாவுமாகிய,—சாந்தநாயகிசமேத. எ - று. (நஅ)

அன்னதன் பின்னமரர்கள் கதிர்காம வேற்பிரா
னடிமலர்க் கன்புமீக்கூர்ந்
தகிலவழி பாடும் புரிந்திட்ட சித்திகளு
மமர்புத்தி முத்தியதுவுந்
துன்னுபவ ராயின ரெழுமையினு மவனடித்
துணையே யெமக்குத்துணை

தூயதா மாணிக்க கங்கையென் றொருபெருந்
 தோயமிங் குளது தோய்வார்
உன்னத சுசீலரா மொப்புயர்வி றீர்த்தமிஃ
 தும்பர்க்கு முணர்வரியதா
லுலகுமு னுஞற்றியிடு பலபெரும் புண்ணியமு
 மொன்றியொழு குவதொக்குமுன்
சன்னிதி யிருத்தியெ னருத்தியை நிவிர்த்திபுரி
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அன்னதன் பின் நமர்கள் கதிர்காம வேற்பிரான் அடிமலர்க்கு அன்பு மீக்கூர்ந்து - அதன்பின்னர் அஞ்ஞான சம்பந்திகளாய் நம்மவர்களாயுள்ள மனிதர்கள் கதிர்காமதல வேற்பெருமானது திருவடித்தாமரை மலர்களுக்குச் செய்யும் அன்பு முதிரப்பெற்று,—அகில வழிபாடும் புரிந்து இட்ட சித்தி களும் அமர்புத்தி முத்தியதுவும் துன்னுபவர் ஆயினர் - மனம் வாக்குக்காயங்களென்னுந் திரிகரணங்களானுஞ் சகலவழிபா டுஞ்செய்து தாம் விரும்பிய இட்டசித்திகளையும் இகபரமிரண் டினும் விரும்பிய சுகபோகாநுபவங்களையும் பின்னர் மோக்ஷத் தையுந் தப்பாது பெறுவாராயினர்,—எழுமையினும் அவன் அடித்துணையே எமக்குத் துணை - எழுவகைப் பிறப்பின்கண் ணும் அக்கதிர்காமதலநாதரது உபயதிருவடிகளுமே எமக்கு உயிர்த்துணையாம்,—இதுநிற்க; தூயதாம் மாணிக்க கங்கை என்று ஒருபெரும் தோயம் இங்கு உளது - நிர்மலமாகிய மாணி க்க கங்காநதி யென்று ஒருமகாதீர்த்தம் இங்குள்ளது,—தோய் வார் உன்னத சுசீலராம் ஒப்பு உயர்வு இல் தீர்த்தம் இஃது - தன்னிடத்திலே வந்து ஸ்நானஞ் செய்தவர்கள் உயர்ந்த ஞான வொழுக்கத்தை உடையராதற் கேதுவாகிய தீர்த்தம் இஃ

தாம்,—உம்பர்க்கும் உணர்வு அரியதாம் - இதன் மகத்துவம் மனிதர்களுக்கேயன்றி அறிவிற்சிறந்த தேவர்கட்கும் அறிந்து கோடற்கு அரியதாம்,—உலகுமுன் உஞற்றியிடு பலபெரும் புண்ணியமும் ஒன்றி ஒழுகுவது ஒக்கும் - இம்மாணிக்க கங்கா தீர்த்தமானது இம்மண்ணுலகத்தினர் ஆதிதொடுத்துத் தாம் செய்து கொண்டுவந்த புண்ணியங்கள் அனைத்தும் ஒருங்கு திரண்டு நீருருவங் கொண்டு பிரவாகித் தொழுதலை யொக்கும்,—உன் சன்னிதி இருத்தி என் அருத்தியை நிவிர்த்திபுரி - தேவரீருடைய மகாசந்நிதானத்திலே தமியேனை அணுக்கத் தொண்டனாகவிருத்தி ஏழையடியேனுடைய மோக்ஷவிருப்பத்தைப் பூர்த்திசெய்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று. (௩௯)

முந்தொர்கா லந்தனிற் சோழமண் டலவாசி
முதியவாஞ் சியபகருளான்
முற்குலத் தபகீர்த்தி பாவமூர்த் தியுமாகி
முருகனுல கிடைமுடிகிறான்
வந்திந்த வளநகர் வதிந்திறந் தின்ஹுந்து
வாபரயுகத்தொர் வேடன்
வண்காலி நகரின்வந் தேதிருடு வானங்கொர்
வனிதையாத் திரையின்வருவாள்
சுந்தரங் கண்டவட் பின்றொடர்ந் தேகேடு
சூழ்கணத் துயிர்துறப்பச்
சோர்வில்குக தூதரவ னுயிர்கந்த லோகமிசை
தூண்டச் சுகந்துய்த்துளான்
றந்திரமொ ரெழுநான்கு தந்தசற் குருமகிப
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். முந்து ஓர்காலந்தனில் சோழமண்டலவாசி முதிய வாஞ்சிய நகர் உளான் - முன்னொருகாலத்திலே சோழமண்டலத்தின்கண்ணுள்ள பழைய திருவாஞ்சியம் என்னும் சிவ க்ஷேத்திரத்திலே இருப்பவன் ஒருவன்,—முற்குலத்து அபகீர்த்தி பாவமூர்த்தியும் ஆகி வந்து இந்த வளநகர் வதிந்து இறந்து முருகன் உலகிடை முடுகினான் - ஆதி வருணத்துள்ள அபகீர்த்தி என்னும் பெயரையுடைய அவன் பாவமேசெய்யும் மனம்வாக்குக் காயங்களை யுடையவனாகி இந்தத் திருவருள் வளம்பொருந்திய கதிர்காமதலநகரத்தின் கண் வந்து சில காலம் வாசஞ்செய்து இறந்து, அத்தலவாச பலத்தினாலே கந்தலோகத்தை அடைந்தனன்,—இன்னுந் துவாபரயுகத்து ஓர் வேடன் - பின்னும் துவாபரயுகத்திலே ஒரு வேட்டுவனானவன்,—வண்காலிநகரின்வந்தே திருடுவான் - வளவிய காலிநகரத்தின்கண்ணே வந்திருந்து கொண்டு திருட்டினையே தனக்கு வரும்படித் தொழிலாகக் கொண்டு செய்பவன்,—அங்கு ஓர் வனிதை யாத்திரையின் வருவாள் சுந்தரங் கண்டு - அக்காலிநகரத்தின்கண்ணே கதிர்காமயாத்திரையின்பொருட்டு வருபவளாகிய ஒரு பெண்ணினது பேரழகைக்கண்டு,—அவட்பின் தொடர்ந்து கேடுசூழ் கணத்து உயிர் துறப்ப - யாத்திரை செல்லுமவளை விடாது பின்றொடர்ந்து செல்லும் வேடனானவன் தாமிருவருங் கதிர்காம தலத்தை யடைந்தவுடன் அவளது தனிமையைக்கண்டு, அவள் கற்பைக் கெடுக்குமாறு சமீபித்துத் தீண்டப்புகும் அக்கணப்பொழுதிலே திருவருளினாலே ஆகாயத்தினின்றும் ஓர் பேரிடி தலையிலே வீழப்பெற்று அவனுயிர் துறந்திறக்க,—சோர்வில் குகதூதர் அவன் உயிர் கந்தலோக மிசை தூண்டச் சுகம் துய்த்துளான் - சோர்வற்ற சுப்பிரமணியக்கடவுளது தேவதூதர் அவ்வேட்டுவனது உயிரை நிரயத்திற் புகுதவிடாது கந்தலோகத்தின்கட் கொடு சென்று செலுத்தா நிற்ப அங்குள்ள திவ்விய போகங்களை அனுபவிப்பவனாயினான்,—தந்திரம் ஓர் எழுநான்கு தந்த சற்குரு மகிப - காமிகம்

முதல் வாதுளாந்தமாகிய சைவாகமங்கள் இருபத்தெட்டையும் ஆன்மாக்கள்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய ஞானசற்குரு தலைவரே,—சாந்தநாயகிசமேத. எ - று. (௬0)

மற்றோர்கா லத்திவ் விலங்கைமுழு தரசாண்ட
மன்னற்கும் மந்திரிக்கு
மரபினிற் பாபதீ பன்கோப தீபனு
மைந்தரிரு மன்மதர்பிறந்
தற்றமே புரிகுவார் பஞ்சபா தகராகி
யரசனி னகற்றிடப்பட்
டறுமுகன் கதிர்காம தலனடைந் தேகங்கை
யாடினே ரகமடங்கப்
பெற்றெம் பிரானடிப் புணைபிடித் தேறியே
பிரிகிலா தவனைமுன்செய்
பிழைகட் கிரங்கிமுடி விற்குகன் றிருவடிப்
பேறுபெற் றார்மிடிமடி
தற்றுத் தகைந்திடச் செய்பரி சறிந்திலேன்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மற்றோர் காலத்து இவ்விலங்கை முழுது அரசாண்ட மன்னற்கும் மந்திரிக்கும் - வேறொரு காலத்தின் கண்ணே இவ்விலங்கை முழுவதையும் அரசாட்சிசெய்த ஓர் அரசனுக்கும் அவன் மந்திரிக்கும்,—மரபினில் பாபதீபன், கோப தீபனும் மன்மதர் மைந்தர் இருவர் பிறந்து - முறையானே பாப தீபன் கோபதீபனென்னும் பெயர்களையுடைய கட்டழகினான் மன்மதனையொத்த துட்ட புத்திரர் இருவர் பிறந்து,—அற்றமே புரிகுவார் - தம்மனவாக்குக் காயங்களினாலே குற்றமாகிய

தொழில்களையே முயற்சிக்குங் கருத்துடையவராகி,—பஞ்ச பாதகராகி அரசனின் அகற்றிடப்பட்டு - பஞ்சமகாபாதகங்களை யுஞ் செய்பவராகி அதுகாரணமாக அவ்வரசனால் அந்நாட்டை விட்டுத் துரத்தப்பட்டு,—அறுமுகன் கதிர்காமதலன் அடைந்து - சண்முகக்கடவுளுடைய இக் கதிர்காமதலத்தை அடைந்து,—கங்கை ஆடினோர் அகம் அடங்கப்பெற்று - அங்குள்ள மாணிக்க கங்காநதியில் ஸ்நானஞ்செய்து அதனால் மனமடங்கப்பெற்று,—எம்பிரான் அடிப்புணை பிடித்தேறி - எம்முடைய சுப்பிரமணியப்பெருமானது திருவடிகளாகிய தெப்பத்தின்மே லேறித் தாம் செய்த பாவசமுத்திரத்தினின்றும் கரையேறி,—அவனைப் பிரிகிலாது முன்செய் பிழைகட்கு இரங்கி - அக்கடவுளைச் சிறிதும் பிரியாது நெடுங்காலம் வழிபட்டுத் தாம் முன்னே செய்த பாவங்களைக் குறித்துப் பச்சாத்தாபமடைந்து,—முடிவிற் குகன் திருவடிப் பேறுபெற்றார் - மரணந்தத்தில் அச்சுப்பிரமணியக்கடவுளது திருவடிப்பேற்றைப் பெற்றனர்,—மிடி மடி தற்றுத் தகைந்திடச் செய்பரிசு அறிந்திலேன் - வறுமையானது கொடுக்கை யிழுத்துக் கட்டிக்கொண்டு தமியேனை நல்லொழுக்கவழியிற் செல்லாது குறுக்கே வந்து நின்று தடுக்கச் செயற்பாலதின்னதென்றறியாது தடுமாறுபவனாயினேன்,—சாந்தநாயகிசமேத. எ - று. (௬௧)

கலியுகா ரம்பத்தி னிற்பிரம னேமுதற்
 கடவுளர் கலிக்கஞ்சினீள்
கபிலர்ச பதிசெய்திரு வருளினா லஞ்சுகா
 மாரவெங் கடுகிக்கலி
வலிநலி தரா தறு முகன்கருணை யாலங்ஙன்
 வைகினர் கலிவலியவண்
வாரா தொழிந்திட்ட தான்மதுரை யிற்செல்வ
 வணிகனொரு வன்வாழ்ந்துளான்

மலிமலர்க் குழலிமாட் டழகேச னேசந்தி
மான்காக வல்லியொடெழின்
மல்குமேக கயவல்லி மாணிக்க வல்லியா
மக்களினி தவதரித்தார்
சலிலச முடற்றுமுன் றிருவடிக் கபயம்யான்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். கலியுகாரம்பத்தினில் - மற்றும் இக்கலியுகத் தொடக்கத்தின்கண்ணே,—பிரமனே முதற்கடவுளர் கலிக்கு அஞ்சி - பிரமா முதலிய தேவர்கள் "பொய் கொலையெனும் பணிகள் பூண்டு வினைபூசி - மையல் பொருளாசையெனும் மாலை முடிசூடிக் - கைகளை நிலத்தினிடை யூன்றி யிருகான் மேல் - செய்தலை கீழுற நடந்து கலிசென்றான்." என்று ஆன் றோர் கூறுங் கலியுகபுருஷனுக் கச்சங்கொண்டு,—நீள் கயிலாச பதி செய்திருவருளினல் அஞ்சுகா மாசலம் கடுகி - கைலாய கிரிக்குச் சென்று அக்கைலாசபதி செய்தருளிய உத்தரவின்படி (மேலே நாம் விதந்து கூறிய சுற்றுமலை யாறனுள் ஒன்றாகிய) அஞ்சுகாமாசலத்தையடைந்து,—கலிவலி நலிதராது அறுமு கன் கருணையால் அங்ஙன்வைகினர் - கதிர்காம வேற்பெருமா னது திருவருளினலே அக்கலிகால வலியானது தம்மைப் பாவஞ்செய்வித்து வருத்தாதொழிய அவ்விடத்து அன்னப் பட்சிவடிவாகி இருப்பவராயினர்,—கலிவலி அவண் வாரா தொழிந்திட்டது - அக்கலிகால வலிமையானது அவ்வஞ்சுகா மாசலத்திலே வந்து சஞ்சரிக்க முடியாமையினன் அவ்விட த்தைமாத்திரம் விட்டகன்றொழிந்தது,—அதுநிற்க; மதுரையிற் செல்வ வணிகன் ஒருவன் வாழ்ந்துளான் - மதுராபுரியின் கண்ணே ஐசுவரிய சம்பன்னனாகிய ஒருசெட்டி வாழ்ந்துகொண்

டிருப்பவன்,—மலிமலர்க் குழலிமாட்டு - அவனுக்கு, மிகவும் புஷ்பங்களைத்தரித்த கூந்தலையுடைய தன்மனைவியின்மாட்டு,— அழகேசன் - அழகேசனும்,—சந்திமான் - சந்திமானும்,—காக வல்லி - காகவல்லியும்,—எழில் மல்கு கேகயவல்லி - அழகு மிகுந்த கேகயவல்லியும்,—மாணிக்கவல்லியாம் மக்கள் இனிது அவதரித்தார் - மாணிக்கவல்லியும் ஆகிய ஐந்து மக்கள் நன்கி தாக உற்பவித்தனர்,—சலிலசம் உடற்றும் உன் திருவடிக்கு யான் அபயம் - நீரிலே தோன்றிய செந்தாமரை மலரைவென்று நிரத்துந் தேவரீருடைய உபய திருவடிகளுக்கும் ஏழை யடிய னாகிய தமியேன் அடைக்கலம் அடைக்கலம்,—சாந்தநாயகி சமேத. எ - று. (சஉ)

மனைமக்க ளோடவன் மருவிவாழ் நாட்டிருடர்
மலிபொருட் கொள்ளைகொளவு
மான்மிக் குழந்துதுயர் மீனாட்சி சுந்தரர்த
மலரடிகள் குறுகிமறுகித்
துனைவிற் சுதன்சுடர்க் காமநகர் செல்கெனத்
தோன்றுமசரீரிசெவியுட்
டுன்னுமுன் வல்விரைந் தேகியவ் வறுவரொடு
சொலுமத் தலந்துன்னினான்
அனைநிகர்த் திடுமருட் கடலாகு மறுமுகவ
னடிமா தோற்சவாந்தத்
தரியவிர தத்தின்மீ தனைதறிசித் துன்னி
யதுபெற் றகன்றுமீண்டான்
றனையனுக் குத்தந்தை சரணல்ல தரணில்லை
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அவன் மனை மக்களோடு மருவி வாழ்நாள் - அவ்வணிகன் மனைவிமக்களோடு கூடி வாழ்ந்திருக்குங்காலத்தில்,—திருடர் மலிபொருள் கொள்ளை கொளலும் - தீவர்த்திக்கள்வர் அவன் பெரும் பொருள்களையெல்லாம் கொள்ளையடித்தொழித்தலும்,—மால் மிக்கு துயர் உழந்து மீனாட்சிசுந்தரர் தம் மலர் அடிகள் குறுகி - அதனான் மயக்கமிகுந்து சிலகாலம் வறுமைத் துன்பங்களை அனுபவித்து அங்கெழுந்தருளி யிருக்கின்ற மீனாக்ஷிசுந்தரேசரது சரணாரவிந்தங்களை யடைந்து,—மறுகி - தன்குறையைக் கண்ணுமனமுங் கலங்கி விண்ணப்பஞ் செய்யா நிற்ப,—சுதன் சுடர்க்காமநகர் துணைவில் செல்க எனத் தோன்றும் அசரீரி செவியுள் துன்னுமுன் - நமது இளஞ்சேயாகிய சுப்பிரமணியனது கதிர்காமதலத்திற்கு விரைந்து செல்லக்கடவாய் என்று ஆகாயத்திற் றோன்றும் அசரீரிவாக்கானது தன் செவிக்குப் புலப்பட்டு ஒழிவதன்முன்னமே,—அவ்வுறுவரொடு வல்விரைந்து ஏகி சொலும் அத்தலம் துன்னினான் - அம்மனைவிமக்களாகிய அறுவரோடும் அதிசீக்கிரஞ் சென்று சொல்லப்பட்ட கதிர்காமதலத்தை யடைந்து,—அனை நிகர்த்திடும் அருள் கடல் ஆகும் அறுமுகவன் ஆடிமாதோற்சவாந்தத்து அரிய இரதத்தின்மீது அணைதல் தரிசித்து - எமக்கு எம் மாதாவை ஒத்த சீவகாருண்ணிய சமுத்திரமாகிய கதிர்காமதலநாதர், அங்கே நிகழும் ஆடிமாச மகோற்சவாந்தத்திலே அருமையாகிய தேரிலே இவர்ந்து வீதியிலே எழுந்தருளிவருவதைத் தரிசித்து,—உன்னியது பெற்று அகன்று மீண்டான் - தான் எண்ணிச்சென்ற தன் திரவியம் முழுவதையும் அவர் திருவருளால் எளிதிற் பெற்றுக்கொண்டு அவரது அநுமதியோடு அவ்விடத்தை விட்டகன்று தன்னூருக்குத் திரும்பினான்,—தனையனுக்குத் தந்தை சரண் அல்லது அரண் இல்லை - சிவபுண்ணியமாகிய உறுதுணையினின்றும் பிரிந்து தனித்த பாபபுத்திரனாகிய தமியேனுக்குப் பரமபிதாவாகிய தேவரீருடைய திருவடி

யல்லது உயிர்த்துணையாகிய பாதுகாப்புப் பிறிதொன்று மில்லை,—சாந்தநாயகிசமேத. எ - று.

குறுகி, மறுகி, வல்விரைந்தேகி என முடிக்க. சுடர்க்காம நகர் - கதிர்காமதலம். (சந)

வையகத் தினில்யூக புரமுளா ளொருகணிகை
வாயமிர் தருத்தியல்குல்
வாணிகஞ் செய்துகைப் பொருள்பறித் தெய்தின
வறிதோட்டி வளமதீட்டிச் [ரை
செய்தவெம் பாவக் கடற்கொர்கரை யில்லையவள்
சென்றுறுத் தலனுமில்லை
தேயமெங் கெங்குந் திரிந்துளாண் முடிவிற்
செழுங்கதிரை நகரையண்மித்
துய்யமா ணிக்ககங் கையினுடி யறுமுகன்
றுணையடிப் புணைபிடித்தார்
தூமூர லிகலோக நின்றுசுக லோககரை
துன்றினு ளுயிர்துறந்தித்
தையலுக் கருள்பனிரு கையனுக் கையனீ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். வையகத்தினில் யூகபுரம் உளாள் ஒரு கணிகை - இந்நிலவுலகத்திலே யூகபுரத்தின் கண்ணுள்ளவளாகிய ஒரு பொதுமகள்,—எய்தினரை வாயமிர்து அருத்தி அல்குல் வாணிகம்செய்து - தன்பால் வந்தவர்களுக்கு வாயின் அமிர்த ரசத்தை ஊட்டி அல்குல் வியாபாரஞ்செய்து,—கைப் பொருள் பறித்து - அவர் கைப்பொருள் முழுவதையும் அபகரித்து,—

வறிது ஓட்டி - அவரை வெறுங்கையாக ஓட்டி,—வளமது ஈட்டி - இங்ஙனம் பெருஞ்செல்வத்தை ஈட்டி,—அவள் செய்த வெம்பாவக் கடற்கு ஓர் கரை இல்லை - அவள்செய்த பாவசமுத்திரத்திற்கு ஒருகரையுமில்லை,—சென்று உறுத் தலனும் இல்லை- பின்பு தன்குலதருமம் பாபதருமம் என்னு முணர்ச்சி தோன்றப் பெற்று அதை நிவிர்த்திசெய்யும்பொருட்டு யாத்திரையாகச் சென்று சேராத தலங்களும் இல்லை,—தேயம் எங்கெங்கும் திரிந்துளாள் - இங்ஙனம் எவ்வெத்தேயத்து எவ்வெத்தலங் களினுந் திரிந்த அப்பொதுமகள்,—முடிவில் செழும் கதிரை நகரை அண்மி - அவ்வியாத்திரை முடிவிலே அருள் வளஞ் செறிந்த கதிர்காமதலத்தையடைந்து,—தூய்ய மாணிக்க கங்கையின் ஆடி - நிர்மலமாகிய மாணிக்ககங்கையிலே ஸ்நானஞ் செய்து,—அறுமுகன் துணை அடிப்புணை பிடித்து ஊர் தாழூரல் - அக்கதிர்காமநாதரது உபய திருவடியாகிய தெப்பத்தைப் பற்றி அப்பாவசமுத்திரத்தைக் கடந்து கரையேறிய வெண்மையாகிய பற்களையுடைய அப்பொதுமகள்,—இகலோகநின்று உயிர்துறந்து குகலோககரை துன்றினள் - இப்பூலோகத்தினின்றும் உடம்பைத்துறந்து கந்தலோகமாகிய முத்திக்கரையையடைந்தனள்,—இத்தையலுக்கு அருள் பனிருகையனுக்கு ஐயன் நீ - இப்பொதுமகளுக்கு இங்ஙனந் திருவருள் செய்த பன்னிரு திருக்கரங்களையுடைய சுப்பிரமணியக்கடவுட்குப் பிதா தேவரீரேயன்றே; (அங்ஙனமாகவும் தமியேனுக்கு என்னை கொல்லோ அருள்செய்கின்றிலீர்), — சாந்தநாயகி சமேத. எ - று. (௯௯)

ஓங்காரவ மகளிருளொ ருத்திபுத் தளமற்
றொருத்திபில புரமுற்றுளா
ளோதுமிவ் விருவருங் கதிர்காம தலனுற்
றுமாசுதற் குளமொருக்கி
நீங்கா திருந்தத் தலத்தறு முகன்பாத

நிழலடைந் தார்புகழ்நிறீஇ
நிருமலன் கதிர்காம தலமகிமை யாவர்கொ
ணிகழ்த்துபு நிரப்பவல்லார்
ஆங்கார மிக்கசூர் தாங்காது சமருழந்
தாற்றொணு வறுதியிலவற்
கருள்புரிந் தானென்னி லருண்மூர்த்தி குகனலா
தயலொன்று புகலமையுமோ
சாங்காலை நின்சதா சிவதியா னந்தருதி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஓங்கு ஆர்வ மகளிருள் ஒருத்தி புத்தளம் - கதிர்காமதலவேற் பெருமானிடத்து மிக்க விருப்பத்தையுடைய பெண்களிருவருள் ஒருத்தி புத்தளமென்னும் ஊரின்கண்ணுள்ளவள்,—மற்று ஒருத்தி பிலபுரம் உற்றுளாள் - மற்றொருத்தி பிலபுரத்தின்கண்ணுள்ளவள்,—ஓதும் இவ்விருவரும் கதிர்காம தலன் உற்று - நூல்களை ஓதி யுணர்ந்த அவ்விருமகளிரும் கதிர்காமதலத்தை அடைந்து,—உமா சுதற்கு உளம் ஒருக்கி நீங்காது இருந்து - உமாதேவிபுத்திரராகிய சுப்பிரமணியக்கடவுளை வழிபடும்பொருட்டுத் தம்மனத்தைப் பிரபஞ்சத்திற் செல்லவிடாது தடுத்துத் திருவடிகளிலே செலுத்தி ஒற்றுமைப்படுத்தி அந்தக் கதிர்காமதலத்தைவிட்டு நீங்காமல் வசித்து,—புகழ் நிறீஇ அத்தலத்து அறுமுகன் பாதநிழல் அடைந்தார் - புகழுடம்பை இவ்வுலகின்கண்ணிறுத்திப் பூதவுடம்பை விட்டுப் பிரிந்து அங்கெழுந்தருளியிருக்குஞ் சண்முகக்கடவுளது பாதாரவிந்தநீழலை அடைந்தனர்,—நிருமலன் கதிர்காமதலமகிமை யாவர்கொல் நிகழ்த்துபு நிரப்பவல்லார் - நிருமலராகிய சுப்பிரமணியக்கடவுளது இக்கதிர்காமதலமகிமைகளை முழுவதுஞ்

சொல்லி யாவர்தாம் முடிக்கவல்லவர்,—ஆங்கார மிக்கசூர் தூங்காது சமருழந்து ஆற்றெணு அறுதியில் - அகங்காரம் மிகுந்த சூரபன்மன் சோர்வின்றி யுத்தஞ்செய்து அதனை நிர்வகிக்க முடியாத முடிவில்,—அவற்கு அருள்புரிந்தான் என்னில் - அச்சூரபன்மாவுக்கும் பூரணனுக்கிரகஞ் செய்தாரே யானல்,—அருள் மூர்த்தி குகன் அலாது அயலொன்று புகலமையுமோ - திருவருள்மயமான மூர்த்தி அம்முருகமூர்த்தியேயல்லாமல் மற்றொருவரை அருண்மூர்த்தியென்று கூறுதல் சுருதியுத்தி யனுபவங்கட்குப் பொருந்துமோ,—சாங்காலை நின்சதாசிவதியானந் தருதி - தமியேனிறக்குங்காலத்து முத்திதர முடியாதாயினும் தேவரீருடைய சதாசிவமூர்த்த தியானத்தைத் தந்தருளுவீர்,—சாந்தநாயகிசமேத. எ - று. (சகு)

பிரணவ சொரூபமாய்க் குகனினி திருந்தருள்
பெருந்தலங் கதிர்காமமே
பேசுசற் புத்திர னெனும்பெயர்ச் செட்டிவெகு
பிரியயாத் திரைபுரியுநாள்
மரணபய முதவுமத கயமொன்று வந்தவனை
வழிகைம் மடுத்திடுதலு
மற்றவன் கதிர்காம வேலவென் றோலமிட
வனவேட ராய்வல்விரைந்
தரணம்யாத் திரையினர்க் காரென்ப தூரறிய
வதனைவேல் கொடுதடிந்திட்
டவனைவிடு வித்தருளி னன்குன்று தோருட
லதனுளொன் றிஃதையவுன்
சரணமர ணங்கரண புரணந் தவிர்த்தருடி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பிரணவ சொரூபமாய்க் குகன் இனி திருந்தருள் பெருந்தலங் கதிர்காமமே - வேதமுதலிலுள்ள பிரணவாட்சரத்தின் வடிவமாய்ச் சுப்பிரமணியக்கடவுள் நன்கிதாக எழுந்தருளியிருக்கின்ற மகாதலம் கதிர்காமதலமேயாம்,—பேசு சற்புத்திரனெனும் பெயர்ச்செட்டி - நல்லோராற் புகழ்ந்து பேசப்படுகின்ற சற்புத்திரனென்னும் பெயரையுடைய ஒரு செட்டியானவன்,—வெகு பிரிய யாத்திரை புரியுநாள் - வெகு பிரியத்துடன் கதிர்காம யாத்திரை செய்துகொண்டு வழியிற் செல்லும் நாள்களில் ஒருநாள்,—மரணபயமுதவு மதகயம் ஒன்று வந்து அவனை வழிகைம்மடுத்திடுதலும் - மரணபயத்தைக் கொடுக்கவல்ல மதயானை யொன்று குறுக்கே வழியில் வந்து தடுத்து அவன் சரீரமுழுவதும் அடங்கும்படி தன் துதிக்கையினாற் பற்றித் தூக்கி யெடுத்தலும்,—அவன் கதிர்காமவேல என்று ஓலமிட - அச்சற்புத்திரன் கதிர்காமவேலனே யென்று ஓலமிட்டழைக்க,—வனவேடராய் வல்விரைந்து யாத்திரையினர்க்கு அரணம் யாரென்பது ஊரறிய - அச்சுப்பிரமணியக்கடவுள் காட்டுவேட வடிவங்கொண்டு அதிசீக்கிரமாக வந்து கதிர்காம யாத்திராவாசிகட்கு அக்காலத்துப் பாதுகாப்பவர் தாமொருவரே யல்லது வேறு யாவருளர்? ஒருவருமிலர் என்பதனை உலகத்தவரறியுமாறு,—அதனை வேல்கொடு தடிந்திட்டு அவனை விடுவித்தருளினன் - அவ்வியானையைத் தமது வேற்படையினாலே கொன்றொழித்து அச்செட்டியை அவ்வியானையினது கைப்பிடியினின்றும் விடுவித்துய்யக் கொண்டருளினர்,—குன்றுதோருடலதனுள் இஃதொன்று - ஈண்டுக்கூறிய கதிர்காமதலமும் இதற்கு மூலமாகிய கதிரைமலையும் இரண்டு தேவஸ்தானமாயிருப்பினும் அவ்விருதேவஸ்தானத்திற்குந் தானியாயிருப்பவர் சுப்பிரமணியக்கடவுளொருவரே யாதலினால் அச்சம்பந்தம்பற்றி இவ்விரண்டு தலமு மொருதலமேயாம்; அங்ஙனமாயின், சுப்பிரமணியக்கடவுளுடைய திருப்படை வீடாறனுள் இது ஒன்றல்லதே யெனில், அங்ஙனமன்று; அவருடைய

திருப்படைவீடாறனுள் ஒன்று குன்றுதோறாடலே யாதலின் இக்கதிரைமலையும் அக்குன்றுதோறாடலு ளொன்றாகி அத்திரு ப்படைவீடாறனு ளொன்றாயடங்குமென்க,—ஐய உன் சரணம் அரணம் - சுவாமீ தேவரீருடைய திருவடிகளே தமியேனுக்குப் பாதுகாப்பாயுள்ள புகலிடம்,—கரண புரணந் தவிர்த்தருடி - ஆதலினாலே அடியேனுடைய மனம் முதலிய அந்தக் கரணங் கள் நான்கும் பிரபஞ்சத்திலே இயங்கிப் பிரவேசித்தலைத் தடுத் துத் தேவரீருடைய திருவடிகளிலே செல்லுமாறு செலுத்தி அடியேனுக்குப் பூரணானுக்கிரகஞ்செய்தருளும்,—சாந்தநாயகி சமேத. எ - று. (சக)

அயிராவ சுப்பெயர்க் கந்தருவ னொருவன்முன்
னமரர்குரு வின்மொழி கடந்
தாணையாய்ச் சாபமேற் றவனொரீஇக் கதிரைநக
ரனுகியன் னையரிருவருக்
குயிராயி னடிக் கன்பொடேர் தியுமாகி
யும்பனுறு வொருவியருளாற்
றுயர்பழைய வடிவுபெற் றுற்சவத் தாறுகாலை
யோங்குசே யோம்படையுடன்
பெயராதொர் கான்யானை வரவுமதி லிவரவும்
பின்னதி னுலாப்போதவும்
பெற்றான் வரம்பெற்ற வாவிழா வதனிற்
பிரான்யானை யிற்போதரும்
தயிரான நெய்யினை மருவாய்கொ லோசாமி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அயிராவசுப்பெயர்க் கந்தருவனொருவன் - அயிரா வசுவென்னும் பெயரையுடைய ஓர் கந்தருவன்,—முன் அமரர் குருவின் மொழிகடந்து ஆணையாய்ச் சாபமேற்று - முன்னொரு

காலத்திலே தேவகுருவாகிய பிருகஸ்பதியினது வார்த்தையை அதிக்கிரமித்து, அவர், மதயானையாகும்படி சபிக்க உடனே அவ்வியானையின் வடிவத்தைப் பெற்று,—அவண் ஒரீஇக் கதிரைநகர் அணுகி - அக்கந்தருவலோகத்தை விட்டு, இக்கதிர் காமதலத்தை அடைந்து,—அன்னையர் இருவருக்கு உயிராயி ஞன் அடிக்கன்பொடு ஊர்தியுமாகி - எம்பரம மாதாக்களாகிய தெய்வயானையம்மை வள்ளிநாயகியம்மை யென்னு மிருசத்தி கட்கும் பிராணநாயகராகிய சுப்பிரமணியக்கடவுளினுடைய திருவடிகளுக்குப் பேரன்புபூண்டு, யானைவாகனமுமாகி நெடுங் காலமிருந்து,—அருளுற்று உயர் பழைய வடிவு பெற்று உற் சவத்துறுகாலை - அவருடைய திருவருளைப் பின்பு பரிபூரண மாகப் பெற்று, அவ்வியானை வடிவத்தை நீங்கி, மேம்பட்ட பழைய கந்தருவ வடிவத்தைப் பெற்று, அக்கடவுள் வீதியிலே மகோற்சவங் கொண்டெழுந்தருளி வரும்போது,—ஓங்கு சேய் ஓம் படையுடன் பெயராது ஓர் கான் யானை வரவும் - உயர்ந்த அச்சிவகுமாரரது சம்மதத்துடன் அம்மகோற்சவகாலதிற் றவறு மல் ஒரு காட்டியானை சந்நிதானத்தில் வரவும்,—அதில் இவர வும் - அவ்வியானையிலவரேறியருளவும்,—பின் அதில் உலாப் போதவும் பெற்முன் - அதன்கண்ணேறியருளியபடியே திரு வுலாவரவும் அக்கடவுண்மாட்டு வரத்தைப்பெற்றனன்,—வரம் பெற்றவாவிழாவதனில் பிரான் யானையிற் போதரும் - பெற்ற அந்தப் பிரகாரமே திருவிழாக்காலத்திலே காட்டினின்றும் வரும் யானையின்மீது ஏறியருளிச் சுப்பிரமணியப்பெருமான் திருவுலாப் போதருவாராயினர்.—சாமி தயிரான நெய்யின் எனை மருவாய்கொலோ - சுவாமி பாலின்கண் மறைந்து தோன்றும் நெய்போலாகாது தயிரின்கண் வெளிப்பட்டுத் தோன்றும் நெய்யைப்போலத் தமியேனறிவின்கண்ணே வெளிப்பட்டுத் தோன்றியருள மாட்டீரா! சாந்தநாயகிசமேத. எ - று.

பெற்றவாறு எனற்பாலது, பெற்றவாவென ஈறு குறை ந்து நின்றதோர் செய்யுண்முடிபு. (௪எ)

உக்கிர மகாசோழ னரசிங் கப்பெய
 ருறுஞ்சோழ னதியான
வுத்தம ருலப்பிலார்க் குறுராச தானியா
 யுற்றதூஉம் பருணிதர் தமுண்
முக்கிய மகாகவிஞ னருணகிரி மேதாவி
 மொழிதிருப் புகழ்பெற்றதூஉ
முத்திநக ராகாய பதிபாடி வீடிவை
 முதற்பெயர் முகந்தொளிர்வதூஉ
மிக்கசிவ ஞானம் விளக்கிமேம் படுவதூஉம்
 வெம்பவம் விலக்கிடுவதூஉ
மேலுமிவை போலும்வினை யாடல்க ளநேகமொடு
 வேள்வீற் றிருப்பதுமிதாற்
சக்கிர கிரிக்குளிதின் மிக்கருக தலமில்லை
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். உக்கிர மகாசோழன் - உக்கிரமகாசோழர்;—நாரசிங்கப் பெயருறுஞ் சோழன் - நரசிங்கசோழர்,—ஆதியான உத்தமர் உலப்பிலார்க்கு உறு ராசதானியாயுற்றதூஉம் - முதலாகிய உத்தமோத்தம க்ஷத்திரிய மகாபுருஷர்களுக்குச் சிறந்த இராசதானியாகப் பொருந்தப்பெற்றதும்,—பருணிதர் தமுள் முக்கிய மகாகவிஞன் அருணகிரி மேதாவி மொழி திருப்புகழ் பெற்றதூஉம் - மகாகவிகளுக்குள்ளே அதி முக்கிய மகாகவியாகிய அருணகிரிநாதரென்னும் பேரறிஞர் திருவாய்மலர்ந்தருளிய திருப்புகழ்பெற்ற தலமும்,—முத்திநகர் - முத்தி க்ஷேத்திரமும்,—ஆகாயபதி பாடி வீடு - ஆகாயபதியும் பாடி வீடும்,—இவை முதற்பெயர் முகந்தொளிர்வதூஉம் - இவை முதலிய

திருநாமங்களைப் பெற்றுப் பிரகாசிப்பதும்,—மிக்க சிவஞானம் விளக்கி மேம்படுவதூஉம் - பாசஞான பசுஞானங்களின் மேம்பட்ட சிவஞானத்தைப் பிரகாசிப்பித்து மகத்துவம் பொருந்தியிருப்பதும்,—வெம்பவம் விலக்கிடுவதூஉம் - மெய்யடியாரது கொடிய சனனத்தைத் தவிர்த்துவிடுவதும்,—மேலும் இவைபோலும் விளையாடல்கள் அநேகமொடு வேள் வீற்றிருப்பதும் இதால் - இவற்றின்மேலும் இன்னோரன்ன அருட்டிருவிளையாடல்களநேகங்களைச் செய்தருளுவதோடு சுப்பிரமணியக்கடவுள் நிலையாக வீற்றிருக்கப் பெறுவதும் இக்கதிர்காம தலமாகிய திருப்படைவீ டொன்றேயாம்,—சக்கிரகிரிக்குள் இதின் மிக்க குகதலம் இல்லை - சக்கரவாளகிரியினுலே சூழப் பெற்றிருக்கின்ற இப்பூமியிலே இக்கதிர்காம தலத்திற்கு மேம்பட்ட சுப்பிரமணியதலம் பிறிதொன்றில்லை,—சாந்தநாயகி சமேத. எ - று. (௬அ)

அங்ஙனஞ் சென்றவ னருட்கொளுங் காதலோ
ராசார மன்புசீல
மருள்குக புராணபட னஞ்சிரவ ணம்பூசை
யைம்பொறி யடக்கலாதி
யிங்ஙன மியம்பியிடும் யாவுநன் குடையரா
யோகாக்ர சித்தராகி
யிபமுகன் கிரியடைந் தேதீர்த்த மாடியவ
னிணையடி யிறைஞ்சியிப்பா
லுங்ஙனங் கதிர்காம தலநண்ணி மணிகங்கை
யூடுதோய்ந் தொகரவூர்தி
யுபயதிரு வடிகளை யுளங்கொண்டு வழிபா
டுஞற்றிநீ டூழிவாழி
சங்கர சிதம்பர திகம்பர பரம்பரநல்
சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அங்ஙனஞ் சென்று அவன் அருட்கொளும் காதலோர் - அக்கதிர்காம தலத்திற்கு யாத்திரா மார்க்கமாகச் சென்று அக்கதிரை வேற்பெருமானுடைய பூரண திருவருளைப் பெறும் அரும்பெருங் காதலையுடையோர்,—ஆசாரம் - சதாசாரமும்,—அன்பு - சுப்பிரமணியபத்தியும்,—சீலம் - நல்லொழுக்கமும்,—அருள்குக புராணபடனம் - அவர் அருளைத்தரும் கந்தபுராண படனமும்,—சிரவணம் - அப்புராணசிரவணமும்,—பூசை - அக்கந்தபுராணத் திருமுறையைப் பூசிக்கும் பரார்த்த பூசையும், தமதான்மார்த்த சிவலிங்கபூசையும், மகேசுரபூசையும்,—ஐம்பொறி அடக்கலாதி இங்ஙனமியம்பியிடும் யாவும் நன்குடையராய் - பஞ்சேந்திரிய அடக்கமும் முதலாக இவ்விடத்துக்கூறிய விசேஷதருமங்க ளனைத்தையும் முழுவது முடையராகி,—ஏகாக்ர சித்தராய் - மற்றெவற்றையுந் தியானியாமற் சுப்பிரமணியக்கடவுளினுடைய திருவடிகளை மாத்திரமே தியானிக்கும் ஏகாக்கிரசித்தமுடையவராகி,—இபமுகன் கிரியடைந்து தீர்த்தமாடி அவனிணையடி இறைஞ்சி - முதலிலே பிள்ளையார் மலையையடைந்து அங்கே தீர்த்தஸ்நானஞ்செய்து அவருடைய உபய திருவடிகளைத் தரிசித்து வணங்கித் துதித்து,—இப்பால் உங்ஙனம் கதிர்காம தலம் நண்ணி - இவ்விநாயக வழிபாட்டின் பின்னர்ச் சமீபத்துள்ள கதிர்காமதலத்தை யடைந்து,—மணி கங்கையூடு தோய்ந்து - மாணிக்க கங்காநதியிலே தீர்த்தஸ்நானஞ்செய்து,—ஏகராஞர்தி உபய திருவடிகளை உளங்கொண்டு வழிபாடு உஞற்றி நீடூழிவாழி - மயில்வாகனத்தையுடைய கதிரைவேற் பெருமானது உபய திருவடிகளையும் தம் மனத்திலே சதாதியானஞ்செய்து ஒழிந்த திருத்தொண்டுகளையும் செய்து முத்திபெற்று நீடூழிகாலம் வாழக்கடவர்,—சங்கர - சுகஞ்செய்பவரே,—சிதம்பர - ஞானகாசத்தையுடையவரே,—

திகம்பர - திக்கை வஸ்திரமாகவுடையவரே,—பரம்பர - சுத்த மாயாதீதரே,—நல் - நன்மைபொருந்திய,—சாந்தநாயகிசமேத. எ - று. (சுக)



மூன்றாவது

# விஞ்ஞானபுரப் பிரகரணம்.



## உபயநாமாதிகள்.

இங்கித னுதக்கில்வி ஞ்ஞான புரமொன்
றிலங்குமி தியாழ்ப்பாணமே
யீசர்பதி னெண்மொழியு ளீண்டுவளர் செந்தமி
ழியாண்டுள திறும்பூதிவட்
டுங்கமுறு செந்தமிழ்ப் புலவர்பல ரிசைதிசை
துலங்கிடத் தோன்றுகின்றார்
தூறுகொச் சைத்தமிழ் குறைத்தமிழ் கொடுந்தமிழ்
டுவரத் துறந்தநீரார் [க
தங்குமற் றெங்குந் தனித்தமிழு முண்டெனத்
தால்சற் றசைக்கவலமோ
தக்கதவ முற்பவத் திற்செய்த சற்சனர்க
டாஞ்சார்வ தித்தண்ணடை
சங்கமுதன் மூன்றினுக் குஞ்செந் தமிழ்த்தலைவ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இங்கு இதன் உதக்கில் வீணுகானபுரம் ஒன்று இலங்கும் - இங்கே கூறிய இலங்கைக்கு வடபாகத்திலே வீணு கான புரமென ஒரு செந்தமிழ்நாடானது பிரகாசித்துக்கொண் டிருக்கின்றது,—இதுவே யாழ்ப்பாணம் - இதுதான் யாழ்ப் பாணமாவது,—ஈசர் பதினெண்மொழியுள் ஈண்டு வளர் செந் தமிழ் யாண்டு உளது-சிவபெருமான் இயற்றியருளிய பதினெண் பாடைகளுக்குள்ளே இவ்வியாழ்ப்பாணத்தின்கண் மேலும் மேலும் விருத்தியடைந்துகொண்டுவருஞ் செந்தமிழ்ப் பாஷை யானது இவ்விடத்திற்போல வேறு எந்தத் தேயத்துள்ளது,— இறும்பூது - இவ்வியாழ்ப்பாணத்துச் செந்தமிழ் கேட்பவர்களு. க்கு மிகவும் ஆச்சரியத்தை விளைவிப்பதாம்,—இவண் துங்கம் உறு செந்தமிழ்ப்புலவர் பலர் இசை திசை துலங்கிடத் தோன் றுகின்றார் - இவ்வியாழ்ப்பாணத்தின்கண்ணே உத்துங்கம் பொருந்திய செந்தமிழ்ப்புலவர் அநேகர் தங்களுடைய செந் தமிழ்க்கல்வியாணய கீர்த்திப் பிரதாபமானது அட்டதிக்குகளி னுஞ் சென்று பிரகாசிக்கக் காலந்தோறுங் காலந்தோறும் விரு த்தி யடைந்துகொண்டு வருகின்றனர்,—ஆறு கொச்சைத் தமிழ் - கேட்பவர் பிறர் நிந்திக்கத்தக்க கொச்சைத்தமிழும்,— குறைத்தமிழ் - உருவுநிரம்ப உச்சரிக்கப்படாத குறைத்தமி ழும்,—கொடுந்தமிழ்கள் துவரத்துறந்த நீரார் - கொடுந்தமிழ் களுமாகிய இக்குற்றத் தமிழ்களை முழுவதும் பற்றறக் களைந்த கற்றிய நீர்மையினையுடையார் இங்குள்ளவர்,—தங்கு மற்றெங் கும் தனித்தமிழும் உண்டெனத் தால் சற்று அசைக்க வலமோ- பரதகண்டத்திற் பொருந்திய இதனை யொழிந்த மற்றைத் தேயங்கள் எவ்வெவ்விடங்களினும் இதர பாடைகளோடு கல ந்த கலப்புத்தமிழேயன்றி அப்பிறபாடைச்சொற் கலப்பில்லாத சுத்தச் செந்தமிழும் உள்ளதென்று நம்முடைய நாவைச் சற்றே புடைபெயர்த்துக் கூறுதற்கு நாம் வலிமையுடையேமோ? தக்க தவம் முற்பவத்தில் செய்த சற்சனர்கள் தாம் சார்வது இத்தண் ணடை - தகுதியாகிய பெருந்தவத்தைப் பூர்வசன்மங்களிலே

செய்த சன்மார்க்கத்தையுடைய பெரியோர்களே வந்து அவ தரிக்கப் பெற்றுக்கொள்வது இவ்வியாழ்ப்பாணமாகிய நாடா னது,—சங்கமுதல் மூன்றினுக்கும் செந்தமிழ்த்தலைவ - மதுரா புரியின் கண்ணிருந்த முதற்சங்க முதலிய மூன்று சங்கங் கட்குஞ் செந்தமிழ்த் தலைமைப்புலவரே,—சாந்தநாயகிசமேத. எ - று. (௯0)

## வீணாகானபுரப் பெயர்க்காரணம்

தேவதேவ வினையுளங் கனிவித் திராவணன்
செங்கைதங் கும்வீணையைத்
திருடுவான் சமையந் தெரிந்துதிரி யுஞ்சுசங்
கீதகந் தருவனந்தப்
பாவகா ரியைராம னேரம்பி னுயிர்
படுத்தழி யடுத்தவ்வீணை
பற்றிப் பறித்துநரு லாசதைத் துற்றினிது
பாடலும் பரமனெதிர்வந்
தீவதொன் றுண்டுவீ ணாகான மினிதிங்
கிருந்தெமைப் பாடினையிதற்
கிந்நாடு நின்னு டிதன்பெயரும் வீணையை
யியக்குபெய ரென்றிகந்தான்
சாவதிலி தந்தபெய ரேபெயர தாயிற்று
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தேவதேவினை உளம் கனிவித்து இராவணன் செங்கை தங்கும் வீணையை - மகா தேவராகிய சிவபெருமானு டைய திருவுள்ளம் நெக்குநெக்குருகும்படி பாடிக்கொண்டு இராவணனது சிவந்த இருபது கைகளுள் ஒரு கையிலே அதனை

எப்பொழுதும் நீங்காதிருக்கும் அதிமதுர நவீன கோஷம் என்னும் வீணையை,—திருடுவான் சமயந் தெரிந்து திரியும் சுசங்கீத கந்தருவன் - அதனது விசேடம்பற்றி அக்கையினின்றும் திருடும்படி அவனுக்குப் பக்கத்திலே அவனையறியாமல் ஆகாயத்திற் பறந்துகொண்டு சமயம்பார்த்து அகோராத்திரந் திரியும் நல்ல சங்கீதத்தையுடையவன் ஆதலாலே சுசங்கீதன் என்னும் பெயரையுடைய கந்தருவன்,—அந்தப் பாவகாரியை ராமன் ஓர் அம்பினுல் உயிர்படுத்துழி - பாவச்செய்கையை யுடையவனுகிய அந்த இராவணனை இரகுராமன் யுத்தகளத்திலே பிரமாஸ்திரப் பிரயோகஞ் செய்து கொன்றுவிட்ட தருணத்தில்,—அடுத்து அவ்வீணை பற்றிப் பறித்து நகுலாசலத்து உற்று இனிது பாடலும் - இக்கந்தருவன் அவ்வீணையானது இராவணசரீரத்தோடு கூடப் பூமியிலே விழுமாயின் அதனது சங்கீத மாதுரியச்சுவை அப்பூமியினுற் சுவரப்பட்டுக் கெட்டுவிடும் என்பதை முன்னறிந்துள்ளவனுதலின், இறந்த இராவணனுடம்பு பூமியில் விழுவதன் முன்னரே அதி சீக்கிரஞ் சமீபித்து அக்கையைப் பிடித்து அவ்வீணையைப் பறித்தெடுத்துக்கொண்டு நகுலாசலத்தை யடைந்து அங்கிருந்துகொண்டு சிவபெருமானுடைய திருப்புகழ்களை அமைத்தியற்றிய சங்கீதப்பாடல்களை அவ்வீணையின் கண்ணமைத்து அவன் வாசித்தவுடனே,—பரமன் எதிர்வந்து - எங்கும் வியாபித்திருத்தலினுலே எங்குஞ் செவியையுடையவராயிருக்கின்ற சிவபெருமான் அதனைத் திருச்செவிசாத்தித் திருவுள்ளம் மகிழ்ந்து அக்கந்தருவனுக்கு எதிரே பிரசன்னராகி,—வீணுகானம் இனிது இங்கு இருந்து எமைப் பாடினை இதற்கு ஈவது ஒன்று உண்டு - இங்கே இருந்துகொண்டு இராவணன் வாசித்த வீணுகானத்தை இனிதாக எம்மை உத்தேசித்து நீ வாசித்தாய் இதற்கு நாம் உனக்குப் பிரதியுபகாரமாகத் தரும் வரம் ஒன்று உண்டு, அவ்வுபகாரமாவது,—இந்நாடு நின்நாடு - மணற்றிடரென்னும் இந்நாடு இன்று தொடக்கம் இனி உன் நாடேயாம்,—இதன் பெயரும் வீணையை இயக்கு பெயர் என்று

இகந்தான் - இனிமேல் இந்நாட்டின் பெயரும் வீணகானபுரம் எனப்பெயர் பெறுக என்று வரங்கொடுத்து அவ்விடத்தை விட்டகன்று அந்தர்த்தானமாயினர்,—சாவதிலி தந்தபெயரே பெயரது ஆயிற்று - அம்மணற்றிடருக்கு அன்று தொடக்கம் அநாதி நித்தியராகிய சிவபெருமான் ஈந்தருளிய காரணப்பெயரே பெயராய் வழங்கிற்று,—சாந்தநாயகிசமேத. எ - று. (௬௧)

## யாழ்ப்பாணப் பெயர்க்காரணம்.

அந்தகச் சைவவே ளாண்முதலி யாழ்ப்பாண
 னரசனர சிங்கனவைபுக்
கதிமதுர கவிபாடி யாழ்நரம் பிணைமீட்டி
 யகமகிழ விக்கவரசுந்
தந்திம் மணற்றிட றனைச்சன்மா னிக்கவித
 னைக்கவி தனித்தாண்டதாற்
றக்கயாழ்ப் பாணமாம் பெயர்சம் பவித்ததைம்
 பதில்சகத் திரவருடமாம்
இந்தக் கடுங்கலி யுகத்ததிது முன்னைய
 திரண்டா முகத்தநொரிறை
யிந்தியா வினினின் றிவண்குடிக டருவித்
 திருத்துவர லாறிசைப்பாம்
சந்தத் தமிழ்த்தொடைத் தனிநால் வருக்கருள்செய்
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அந்தகச் சைவவேளாண் முதலி யாழ்ப்பாணன் நரசிங்க அரசன் அவை புக்கு - திருத்தொண்டைநாட்டுச் சைவ வேளாண் முதலியும் யாழை மாதுரியச்சுவை பயப்ப வாசித்தற்

ரெழிலிலே அதிசாதுரியனுமாகிய அந்தகக்கவி வீரராகவ னென்னு மொருமகாவித்துவான் கண்டியிலிருந் தரசியற்றிய நரசிங்கமகாராசாவின் சபையையடைந்து,—அதிமதுர கவிபாடி யாழ்நரம்பிளை மீட்டி அகம் மகிழுவிக்க - மிகவும் மாதுரியச் சுவை - பொருந்திய சங்கீத கவிகளை அவ்வரசன் மீதியற்றி அவைகளையமைத்து யாழின் நரம்புகளை "வாரியும் வடித்தும் உந்தியும் வரிசையாலுறழ்ந்தும்" வாசித்து அவ்வரசனை மன மகிழுவிக்க,—அவ்வரசும் தந்த இம்மணற்றிடல்தனைச் சன் மானிக்க - அக்கண்டி யரசனும் இம்மணற்றிட லென்னும் பூர் வீகநாமத்தையுடைய வீணாகானபுரத்தை அவனுக்குக் கொடு த்து உபகரிக்க,—இதனைக் கவி தனித்து ஆண்டதால் தக்க யாழ்ப்பாணம் ஆம் பெயர் சம்பவித்தது - இந்நாட்டை அவ் வந்தகக்கவி வீரராகவன் தனியரசுசெய்த காரணத்தால் தகுதி யாகிய யாழ்ப்பாணம் என்னும் காரணப்பெயர் பெற்றது.—ஐம் பதில் சகத்திரவருடமாம் - இப்பெயர் பெற்று இப்போது தொளாயிரத்தைம்பது வருடமாம்,—இது இந்தக் கடுங்கலி யுகத்தது - இவ்வியாழ்ப்பாணம் என்னும் பெயரைப் பெற்றது கொடிய இக்கலியுகத்தின் கண்ணதாம்,—முன்னையது இரண் டாம் உகத்தது - முன்னே கூறிய வீணாகான புரம் என்னும் பெயர்பெற்றது சதுர்யுகங்களுள் இரண்டாவதாகிய திரேத யுகத்தின் கண்ணதாம்,—இது நிற்க; ஓர் இறை இந்தியாவினி னின்று இவண் குடிகள் தருவித்து இருத்து வரலாறு இசைப் பாம் - சிங்கையாரியச் சக்கிரவர்த்தி என்கின்ற யாழ்ப்பாணத் தரசர் ஒருவர் இந்தியாவினில் நின்றும் நான்கு வருணத்துப் பிரஜைகளையும் இவ்வியாழ்ப்பாணத்தின்கண்ணே வருவித்து ஊர்கடோறும் குடியிருத்திய பிற்கால சரித்திரத்தையும் இனிச் சொல்வாம்,—சந்தத் தமிழ்த்தொடைத் தனி நால்வருக்கு அரு ள்செய் - தெய்வீகமாதுரிய சம்பந்தம் பொருந்திய திராவிட வேதமாகிய தேவாரதிருவாசகங்களைத் திருவாய்மலர்ந்தருளிய

சமயகுரவர் நால்வர்க்கும் ஒப்பற்ற திருவருள் செய்தருளிய,— சாந்தநாயகிசமேத. எ - று.

திருக்கழுக்குன்றத் தலபுராணத்தைத் தமிழின்மொழி பெயர்த்துச் செய்தவரும் சைவவேளாண் முதலியாகிய இம் மகாகவியேயாமென அறிக. (௫௨)

## யாழ்ப்பாணப் பிரசாரோகண வரலாறு.

புன்பற் றிலாமதுரை யந்தணன் புலவர்புகழ்
  புவனேக வாகெனும்பேர்ப்
புனிதந லமைச்சனைத் தன்னெடுந் நல்லைபிற்
  புதிதிருத் திப்பூட்கைமன்
பொன்பற்றி யூருளான் சோழமண் டலவாசி
  பொருவில்கார் காத்தவேளாண்
புவிபுகழ் பெருங்குடிப் பாண்டிமழ வன்றனைப்
  புகலிவன் றம்பியொடுபொய்
அன்பற்ற சண்பகப் பெயர்மழவ மைத்துனனை
  யனையனிரு தம்பிமாரோ
டறிவொழுக் கங்கல்வி செறிதிருநெல் வேலியினி
  லாதரவொ டமர்வித்தனன்
றன்பற்ற தேபற் றயற்பற்றி லென்பயன்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பூட்கை மன் - சிங்கையாரியச் சக்கிரவர்த்தியான வர்,—புன் பற்றிலா மதுரை அந்தணன் - சிற்றின்ப முதலிய எளிய விடயங்களிற் பற்றில்லாத மதுராபுரியின் கண்ணுள்ள பிராமணோத்தமரும்,—புலவர் புகழ் புனித நல் அமைச்சன் புவ

னேகவாகெனும்பேர் - புலவர்களாலே துதிக்கப்படும் சித்தசுத்தியை யுடைய மதுரையிற் பாண்டியராசனுக்கு முதன் மந்திரியுமாகிய புவனேகவாகுவென்னும் பெயருடையவரை, — தன்னொடு இந்நல்லையிற் புதிது இருத்தி - தன்னுடன் மதுரையினின்றும் அழைத்துக்கொண்டு சென்று நல்லூரிலே புதிதாகத் தானிருக்கும் பக்கத்திற் குடியிருத்தி,—சோழமண்டலப் பொன்பற்றியூர் வாசி - சோழமண்டலத்திலே பொன்பற்றி யூரிலே முன் பிறந்து வசித்தவனும்,—பொருவில் கார்காத்த வேளாண் புவிபுகழ் பெருங்குடிப் பாண்டி மழவன்றனை - நாலாம் வருணத்தவருள்ளே தமக்கு நிகரில்லாத கார்காத்த வேளாளரது உலகம் புகழும் பெருங்குடியிற் பிறந்த பாண்டிமழவன் என்பவனை,—புகல் இவன் தம்பியொடு பொய் அன்பற்ற சண்பகப் பெயர் மழவமைத்துனனை - புகழ்ந்து சொல்லப்படுகின்ற இவன் தம்பியோடும் மெய்ம்மையான அன்பையுடைய இவன் மைத்துனனாகிய சண்பகமழவனை,—அனையன் இரு தம்பிமாரோடு அறிவு ஒழுக்கம் கல்வி செறி திருநெல்வேலியினில் ஆதரவொடு அமர்வித்தனன் - அவன் தம்பிமாரிருவரோடும் கல்வி யறிவொழுக்கங்களிலே சிறந்த திருநெல்வேலியிலே குடியிருத்தினான்,—தன் பற்றதே பற்று அயறபற்றில் என் பயன் - ஒருவற்கு ஆன்மலாபப் பற்றே பற்றுவது சரீரலாபப் பற்றினாலெய்தும் பயன் யாது? ஒன்றுமில்லை,—சாந்தநாயகிசமேத. எ - று.

துங்கமுறு காவிரிப் பூம்பட்டி னத்துளான்
 றுளுவவே ளாளர்திலகன்
றுட்டநிக் கிரகனர சிங்கமுதல் வன்றனைச்
 சுவணநில மயிலிட்டியிற்
றங்குவித் துக்காய னகருளான் கனகரா
 யப்பெயர்ச் சற்செட்டியைத்
தகுவாலி நகரான் சதுர்த்தகுல தலைமகன்
 சண்பகநன் மாப்பாணனை

அங்கவனொ டொத்தசந் திரசேக ரப்பெயர
னுகுமொரு மாப்பாணனை
யல்லல்கல் லுந்தகைத் தெல்லிப் பழைப்பதியி
லன்பொடினி தமர்வித்தனன்
றங்கமணி மன்றுளாய் களதௌத குன்றுளாய்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தங்கமுறு காவிரிப் பூம்பட்டினத்துளான் - உயர்ச்சிபொருந்திய காவிரிப்பூம் பட்டினத்துள்ளவனும்,—துளுவ வேளாளர் திலகன் - துளுவ வேளாளர்களுக்குள்ளே திலகம்போலச சிறந்தவனும்,—துட்டநிக்கிரகன் நரசிங்க முதல்வன்றனைச் சுவணநில மயிலிட்டியில் தங்குவித்து - துட்டரைச் சிட்சிப்பவனுமாகிய நரசிங்கதேவனைப் பொன்போன்ற செம்மண்ணிலம் பொருந்திய மயிலிட்டியிற் குடியிருத்தி,—காயல் நகருளான் கனகராயப்பெயர்ச் சற்செட்டியை - காயற்பட்டினத்துள்ளவனுகிய கனகராயனென்னும் பெயரையுடைய நல்ல செட்டியையும்,—தகுவாலி நகரான் சதுர்த்தகுல தலைமகன் சண்பகநன் மாப்பாணனை - திருவாலிநகரிலுள்ளவனும் நான்காம் வருணத் தலைவனுமாகிய நல்ல சண்பகமாப்பாணனையும்,—அங்கவனொடு ஒத்த சந்திரசேகரப்பெயரனுகு மொரு மாப்பாணனை - அவனோடு சமத்துவமுடைய சந்திரசேகர மாப்பாணனையும்,—அல்லல் கல்லும் தகைத் தெல்லிப் பழைப் பதியில் அன்பொடினி தமர்வித்தனன் - துன்பங்களை வேரோடு களையுந் தன்மையையுடைய தெல்லிப் பழையாகிய ஊரில் அன்போடு இனிதாகக் குடியேற்றுவித்தனன்,—தங்கமணி மன்றுளாய் - இரத்தினகசிதமாகிய கனகசபையின்கண் ணெழுந்தருளி யிருப்பவரே,—களதௌத குன்றுளாய் - வெள்ளிமய

மாகிய கைலாசமலையி லெழுந்தருளி யிருப்பவரே,—சாந்த நாயகிசமேத. எ - று.

தல்லிப் பள்ளி யென்னும் பெயர், பிற்காலத்திலே தெல்லிப் பழை என மரீஇயிற்று. மாருதப் பிரவல்லி நகுல தீர்த்த ஸ்நானத்தினாலே தன் குதிரைமுகம் நீங்கி யௌவனம் வாய்ந்து விளங்கிய காலத்தில், தங்கிய இடம் இதுவாதலின் இதற்குத் தல்லிப் பள்ளி யென்னும் பெயருளதாயிற்று. தல்லி - இளமையுடையவள். பள்ளி - சிற்றூர். (௬௪)

நடுநாட் டினிற்கோவ னகருளான் புகரிலா
 னாவர சருங்குலத்தா
னலமிகும் பேரா யிரப்பெயர்ச் செம்மறனை
 நவிலினுவி னனுகுவித்துக்
கொடுகொட்டி யாடுவாற் கீடில்பே ரன்பினன்
 குசலமிகு தொண்டைநாட்டுக்
குலவுகச் சுருளா னீலகண் டப்பெயர்க்
 குரிசிலைக் கொடிமேழிகொண்
டிடுபட்ட முடையிவன் றம்பிமார் நால்வரோ
 டேர்ம்பச் சிலைப்பள்ளியி
லினிதுகுடி யேற்றினன் புனிதமிகு மௌனகுறி
 விகன்மிருத் தியுமலைத்தாற்
றடுபட்ட தநுசத்தி தவிடுபட் டிடவருடி
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நடு நாட்டினிற் கோவல் நகருளான் - நடுநாட்டிலே திருக்கோவலூரிலுள்ளவனும்,—புகரிலான் - ஒரு குற்றமுமில்லாதவனும்,—நாவரசருங்குலத்தான் - திருநாவுக்கரசு

சுவாமிகள் திருவவதாரஞ் செய்த வேளாண் குலத்தவனு மாகிய,—நலமிகும் பேராயிரப் பெயர்ச் செம்மல் தனை நவில் இணுவில் நணுகுவித்து - நற்குணம் மிகுந்த பேராயிரவனென் னும் நாமதேயத்தையுடைய தலைமகனைப் புகழ்ந்து பேசத்தகும் இணுவிலிலே குடியிருத்தி,—கொடுகொட்டி யாடுவாற்கு ஈடில் பேரன்பினன் - கொடுகொட்டியென்னுங் கூத்தை யாடுகின்ற சிவபெருமானுக்கு நிகரற்ற பேரன்பை யுடையவனும்,—குசல மிகு தொண்டைநாட்டுக் குலவு கச்சூருளான் - கல்வியறிவான் மேம்பட்ட திருத்தொண்டைநாட்டில் விளங்குகின்ற திருக்கச் சூரிலே யுள்ளவனுமாகிய,—நீலகண்டப் பெயர்க் குரிசிலை - நீல கண்டனென்பவனை,—கொடிமேழி கொண்டு இடுபட்ட முடை இவன் தம்பிமார் நால்வரோடு ஈர்ம் பச்சிலைப் பள்ளியில் இனிது குடியேற்றினன் - மேழிக் கொடிகொண்டு பிறரா லிடப்பட்ட பட்டாபிதானமுடைய இவன் தம்பிமார் நால்வருடனே தட்ப மாகிய பச்சிலைப்பள்ளி யென்னும் ஊரிலே நன்கிதாகக் குடி யேற்றினன்,—புனிதம் மிகும் எனது அறிவு இகல் மிருத் தியு மலத்தால் தடுபட்டது - சுபாவத்திற் பரிசுத்தம் மிகுந்த ஆன்மாவாகிய என் வியாபக அறிவு வலிய ஆணவமலத்தினலே தடுக்கப்பட்டது,—அது சத்தி தவிடுபட்டிட அருடி - அத னது சத்தி தவிட்டைப்போலத் தூள் பட்டழியும்வண்ணம் அனுக்கிரகஞ் செய்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

மிருத்தியு - ஆணவமலம்; மரணத்தைச்செய்வது என்னும் பொருட்டு. (ருகு)

நீர்நாட்டி னிற்சிகரி நகரியான் கங்கைகுல
நிருபனிக ரறுகல்விமா
னிட்களங் கன்கனக மழவனைத் தம்பிமார்
நிகரிலீ ரிருவரோடும்
பார்நாட்டு பல்புகழ்ப் பதிபுலோ லியினிற்

பரிந்தினி திருத்தியேகூ
பகநாட் டுறுங்கூப காரேந் திரன்குலம்
பயில்புண்ய பூபாலனும்
பேர்நாட்டு குரிசிலிவ ரிருவரைப் பல்புரப்
பேறெலாந் தருதொல்புரப்
பெயரீட்டு பதியினிற் பின்பினி திருத்தினன்
பேனுபிர ணவபொலம்பூந்
தார்நாட்டு முடியையான் றலைசூட்டு மடியைமான்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நீர் நாட்டினிற் சிகரி நகரியான் - அதன்பின்பு சிங்கையாரியச் சக்கிரவர்த்தி புனனுடாகிய சோழநாட்டிலே யுள்ள திருநாரையூரிலுள்ளவனும்,—கங்கைகுல நிருபன் - கங்காகுலத்து வேளாண்மாக்களுக்குள்ளே தலைமகனும்,—நிகரறு கல்விமான் - நிகரற்ற கல்விமானும்,—நிட்களங்கன் - ஒரு குற்றமுமில்லாதவனுமாகிய,—கனகமழவனைத் தம்பிமார் நிகரில் ஈரிருவரோடும் - கனகமழவன் என்பவனை அவனையொத்த அவன் தம்பிமார் நால்வரோடும்,—பார்நாட்டு பல்புகழ்ப் புலோலிப் பதியினில் பரிந்து இனிதிருத்தி - பூமியெங்கும் நிலைநிறுத்திய பலதிறத்துப் புகழ்களெல்லாவற்றையு முடைய புலோலிப் பதியிலே அன்பு கூர்ந்து இனிதாகக் குடியிருத்தி,—பின்பு - அதன் பின்னர்,—கூபக நாட்டுறுங் கூபகாரேந்திரன் குலம் பயில் புண்ய பூபாலனும் பேர் நாட்டு குரிசில் இவர் இருவரை - கூபகநாட்டின்கண்ணுள்ள கூபகாரேந்திரனென்பவனையும் அவனது வேளாண்குடியிற் பிறந்த புண்ணிய பூபால னென்னும் தன்பெயரை உலகெங்கும் நிறுவிய தலைமகனுமாகிய இவர்களிருவரையும்,—பல்புரப் பேறெலாந் தரு தொல்புரப் பெய

நீட்டு பதியினில் இனிதிருத்தினன் - பலவூர்களின் கண்ணுள்ள பொருட்பேறுகளையெல்லாம் தரவல்ல தொல்புரமென்னும் பெயரையுடைய ஊரின்கண்ணே குடியேற்றினன்,—பேணு பிரணவ பொலம் பூந்தார் நாட்டு முடியை - எல்லாராலும் நன்கு மதிக்கப்படுகின்ற பிரணவாகிருதியாகிய பொற்கொன்றை மலர் மாலையைத் திருவடையாள மாலையாக எஞ்ஞான்றுந் தரித் தருளுகின்ற திருமுடியை யுடையவரே,—யான் தலைசூட்டும் அடியை - யானென்புன்றலையிற் சூட்டி வணங்குகின்ற உபய திருவடிகளை உடையவரே,—மான் - மான்போலும் மருண்ட நோக்கத்தையுடைய,—சாந்தநாயகிசமேத. எ - று. (ருகூ)

சோணாட்டி னிற்றுகளில் புல்லூ ருளானுழவர்
 தோன்றலாந் தேவராசத்
தோமிலா னைக்கோயி லாக்கண்டி யூரினிற்
 றுன்னுவித் துத்தூதுசொல்
பாணாட்டு வண்டினம் படிகுவளை மார்பன்
 பயோததி யதோகதியுறப்
படர்பெரும் புகழான் கவிச்சக்ர வர்த்திமுன்
 பாடுமே ரெழுபதுக்கோர்
மாணாட்டு மாடக மகாபிடே கஞ்செய்த
 மரபுளான் றொண்டைநாட்டு
மண்ணாடு கொண்டமா முதலியெனு மன்னவனை
 மரபினிரு பாலைதந்தான்
ருணாட்டு மன்பெனக் கினிநனி யளித்தருள்செய்
 சாந்தநாயகி சமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சோணாட்டினில் துகளில் புல்லூர் உளான் உழவர் தோன்றலாம் தேவராசத் தோமிலானைக் கோயிலாக்கண்டி ஊரினில் துன்னுவித்து - சோழநாட்டின்கண்ணே பழுதற்ற

புல்லூர் வேளாண் டலைமகனாகிய குற்றமற்ற தேவராசேந்திர னைக் கோயிலாக்கண்டி யென்னும் ஊரிலே குடிபுகுவித்து,— தூது சொல் பாணாட்டு வண்டினம் படிகுவளை மார்பன் - தன்னை இச்சித்த மகளிரால் தூது செல்லும்படி அனுப்பப்பட்ட சங் கீதப்பண்ணை இடையறாது பாடுகின்ற வண்டுக் கூட்டங்கள் அத்தூது சொல்லுதலை மறந்து படிதற்கேதுவாகிய மிகுமணங் கமழுங் கருங்குவளை மலர்மாலை புரளும் மார்பையுடையவ னும்,—பயோததி அதோகதி உறப் படர்பெரும் புகழான் - பரந்த பாற்கடலும் அல்லோலகல்லோலப்பட்டு அதோகதி யடைய உலகெங்கும் பரந்த வெண்ணிறம் பொருந்திய பல திறப் பெருங்கீர்த்தியை யுடையவனும்,—கவிச்சக்ரவர்த்தி முன் பாடும் ஏரெழுபதுக்கு ஓர் மாண் நாட்டும் ஆடக மகாபி டேகம் செய்த மரபுளான் - கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பர் முன் னொருகாலத்திலே வேளாளரது ஏழுபடையைச் சிறப்பித்துப் பாடிய ஏரெழுபது என்னும் பிரபந்தத்திற்குப் பெரிதும் மன மகிழ்ந்து ஒப்பற்ற கொடைமாட்சியைச் சிறப்பிக்கும் சொர்ணாபி ஷேகத்தை அக்கம்ப மகாகவிக்குச் செய்த திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பமுதலியாருடைய வமிசத்திற் பிறந்தவனு மாகிய,—தொண்டைநாட்டு மண்ணாடு கொண்ட மா முதலி யென்னும் மன்னவனை - தொண்டைநாட்டிலுள்ள மண்ணாடு கொண்ட மா முதலி யென்னுங் குல தலைமகனை,—மரபின் இருபாலை தந்தான் - வரிசையோடும் வருவித்து இருபாலை யென்னும் ஊரிலே குடியிருத்தினான்,—தாள் நாட்டும் அன்பு எனக்கு இனி நனி அளித்து அருள்செய் - தேவரீருடைய திரு வடிகளிலே தமியேனை நிலைபெறச் செய்யும் உண்மையன்பினை இனியாயினும் மிகவும் அடியேனுக்குத் தந்தருளும்,—சார்தநா யகிசமேத. எ - று. (௯எ)

புனலூட்டு தொண்டையுறு சேயூருளான்களமர்
புரவலன் றனிநாயகப்

புருடோத்த மன்மர பிரண்டுமோ துய்யன்
புகுந்தமர புந்துய்யனே
வனநீட்டு பொன்னமிர்த வல்லிகொ ணெடுந்தீவில்
வைகுவித் துக்காஞ்சிமா
வளநக ருளான்சதுர்த் தாதிபன் கொடைமடம்
வாய்ந்தபெரு வள்ளல்வளர்விற்
பனமீட்டு வல்லவப் பல்லவனை வேறிரு
பராக்கிரம பார்த்திபரொடும்
படர்வெளிப் பற்றினைப் பற்றிட நிறீஇயினன்
படவரவ வல்குலவர்பைந்
தனமாட்டு மாசைகோ டியினென்று தாநினடி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். புனல் ஊட்டு தொண்டையுறு சேயூருளான் - சேயாறானது தன்மாட்டுள்ள நீரினாலே அங்குள்ளவர்களுக்குப் பல போகங்களையும் நுகர்விக்கின்ற திருத்தொண்டைநாட்டில் விளங்காநின்ற சேயூரின்கண்ணே உள்ளவனும், — களமர் புரவலன் - வேளாண் மக்களைப் பாதுகாப்பவனும், — தனிநாயகப் புருடோத்தமன் - தனிநாயகமுதலி யென்னும் இயற்பெயரையுடைய புருஷோத்தமனும், — மரபிரண்டுமோ துய்யன் புகுந்த மரபுந் துய்யனே - தந்தை மரபுந் தாய்மரபுமாகிய இரண்டு மரபு மாத்திரமோ பரிசுத்தமுடையவன்? அவையன்றித் தான் கல்யாணஞ் செய்துகொள்ளப் பிரவேசித்த தன்பத்தினியின் மரபும் பரிசுத்தமாகப் பெற்றுக்கொண் டதனோடு இருமரபுந் துய்யதனி நாயகமுதலி யென்னும் விசேடண நாமதேயத்தையுமுடையவனே; — வனநீட்டு பொன்னமிர்தவல்லி கொள் நெடுந்தீவில் வைகுவித்து - வனங்கள் தம்மிடத்து வளர்விக்கின்ற

அமிர்தசஞ் சீவிக்கொடிபோன்ற பொற்சீந்திற் கொடிகளை மிக வுங் கொண்ட நெடுந்தீவின்கண்ணே குடிபுகுவித்து,—காஞ் சிமா வளநகர் உளான் - அருள்வளம் மிகுந்ததிருத்தொண்டை நாட்டுக் காஞ்சீபுரத்துள்ளவனும்,—சதுர்த்தாதிபன் - நான் காம் வருணத்து வேளாண் மாக்கட்கதிபனும்,—கொடை மடம் வாய்ந்த பெருவள்ளல் - கொடை மடம்பட்ட பெரு வள்ளலும்,—வளர் விற்பனம் ஈட்டு வல்லவப் பல்லவனே - ஒருகாலைக் கொருகால் விருத்தியடைகின்ற கல்விச் சாமர்த்தி யத்தையே திரவியமாகக் கொண்டு சம்பாதித்த சதுரப்பாட்டை யுடையவனுமாகிய பல்லவன் என்பவனே,—வேறிரு பராக்கிரம பார்த்திபரொடும் படர்வெளிப்பற்றின் ஒப்பற்றிட நிறீஇயி னான் - மற்றிரு பராக்கிரம சாலிகளாகிய தலைமக்களோடும் பர ந்த பொன்னுவெளி பூநகரி பல்லவராயன்கட்டு என்னும் உட்கி ராமங்கள் தன்னிடத்து விரவிப் பரவப்பெற்ற வெளிப்பற்றிலே தமக்குப் பிறர் நிகரற்றொழியக் குடியிருத்தினான்,—படஅரவ அல்குலவர் பைந்தனம்மாட்டும் ஆசை கோடியின் ஒன்று நின் அடிதா - சர்ப்பபடம் போலும் நிதம்பத்தையுடைய மகளிரது பொன்னிறம் பொருந்திய தனதடங்களின்கண்ணே மாட்டு கின்ற கோடிமடங் காசைகளினின்றும் ஒருமடங்காசையினை யேனும் தேவரீருடைய திருவடிகளின்கண்ணே எனக்கு உதிப் பித்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று. (நிஅ)

இன்னவா றிறுவா யிலார்தமைக் காலங்க
டொறுமிங் கழைத்திறைவனும்
யாங்கணுங் குடிநன் கிருத்துபு திருத்தியே
யினிதுமீ டேழிவாழ்ந்தான்
அன்னவா றூல்வித்தி னபிவிர்த்தி யாயிற்ற
தன்றியுமொ ரடலைவரை
யரசியற் றுணைவரா யாள்சுற்று நாற்பற்று
மமர்வித் துளானதான்று

சொன்னவா றின்னுமவர் வாழையடி வாழையாய்த்
துன்னிமன் னித்துலங்கிச்
சூழ்தேய மெங்குந் தொடர்ந்துபந் நியாசமாஞ்
சுடர்கொளுவி யிருடிமிப்பார்
சன்மசா பல்லியந் தருதியன வரதமுஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இன்னவாறு இறுவாயிலார் தமைக்காலங்கடொ றும் இங்கு அழைத்து - இந்தப் பிரகாரமும் விரிவஞ்சிக் கூறு தொழிந்த வேறுவித அநேகம் பிரகாரமுமாக முடிவில்லாத குடிசனங்களைக் காலந்தோறுங் காலந்தோறும் இந்தியாவினின் றும் வருவித்து,—இறைவனும் யாங்கணும் குடி நன்கு இருத் துப - சிங்கையாரியச் சக்கிரவர்த்தியும் இவன் பிற்சந்ததியில் வந்த அரசர்களும் யாழ்ப்பாண மெங்கிடத்தும் குடிகளை நன் றாகக் குடியிருக்கவைத்து,—திருத்தி - இந்நாட்டைப் பலதிறத் தானுஞ் சீர்திருத்தி,—இனிது நீடூழி வாழ்ந்தான் - தானுங் கைலாசநாதரது திருவருளினாலே நன்கிதாக நெடுங்காலம் வாழ்ந்திருந்தனன்,—அன்னவாறு ஆல்வித்தின் அபிவிர்த்தியா யிற்று - அவ்வரசன் எண்ணிய நல்லெண்ணத்தின் பிரகாரமே மிகவுஞ் சிறிய வித்தினின்றும் பெரிய ஆலவிருக்ஷம் அபிவிரு த்தியானாற்போல அக்குடிசனங்கள் அநேகமடங் கதிகமாகக் காலவடைவிற் பிரவிருத்தியாயின,—அதன்றியும் ஓர் அடல் ஐவரை அரசியற்றுணைவராய் ஆள் சுற்று நாற்பற்றும் அமர் வித்துளான் - அதுவல்லாமலும் ஒப்பற்ற பராக்கிரமசாலிகளா கிய போர்வீரர் ஐவரைத் தன்னரசியலுக்குப் போர்த்துணைவ ராய்த் தானரசாட்சி செய்கின்ற யாழ்ப்பாணத்தின் கீழ்பற்று, தென்பற்று, மேல்பற்று, வடபற்று என்னும் நான்குபற்றுக்களி

னும் நால்வரும். தன்னுட்டின் மத்தியில் ஒருவருமாக இவரைக் குடியிருக்க வைத்தனன்,—அதான்று - அதுவுமல்லாமல்,—சொன்னவாறு அவர் இன்னும் வாழையடிவாழையாய்த் துன்னி-மேலே சொல்லியபிரகாரம் பின்னும் பிரசைகள் பூர்வீக நிலை பிறழாமல் வாழையடிவாழையாக வருணாச்சிரம தருமங்களி னும் பிற துறைகளினுந் தவறுமற் பெருகி நெருங்கி,—மன்னி-யாழ்ப்பாண மெங்கும் நிலைபெற்று,—துலங்கி - பிறதேயங்களி னுங் கீர்த்திப் பிரதாப முதலியவற்றுற் பிரகாசித்து,—சூழ்தேய மெங்குந் தொடர்ந்து உபந்நியாசமாம் சுடர்கொளுவி - (இவ் விலங்கையினும்) இதனைச் சூழ்ந்திருக்கும் மற்றைத் தேயங்களி னுஞ் சென்று சைவோபந்நியாச முதலிய உபந்நியாசங்களாகிய அநேக தீபங்களை ஆங்காங் கேற்றி,—இருள் துமிப்பார் - அவ் வத்தேயத்தவர்களது விபரீத சமய முதலியவற்றுன் வரும் அஞ் ஞானந்தகாரங்களைச் சின்னபின்னஞ்செய்து ஓட்டுவாராயி னார்,—சன்மசாபல்லியம் அநவரதமுந் தருதி - தமியேனுக்கு மானுடசன்மத்தாலாகிய பெறுபேறுகளாயுள்ள புருஷார்த்தங் களாகிய, தர்மார்த்த காமமோக்ஷங்களென்னும் நான்கனுள் இறு திக் கண்ணதாகிய மோக்ஷத்தைப் பெறும் ஏதுக்களைப் பிரதி தினமுந் தந்து உபகரித்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

## யாழ்ப்பாணத்துப் புராதனாலயங்களும் தீர்த்தங்களும்.

சிதம்பர சபாநாதர் தெற்குநோக் கியவருட்
டிவ்யநேத் திரதானமாய்த்
திகழியாழ்ப் பாணத்தி லமர்வபொன் னாலயஞ்
சித்திதரு திருவடிநிலை
நிதப்படுங் கைலாய நாதரா லயமூழி
நீள்சட்டை நாதர்கோயி
னீடுவில் லூன்றியமு னாநதி நிலாவரையிந்
நிகழ்சதக முதல்வர்நிலயம்

குதம்பையம் பிகையொடும் வாரிவன நாதரமர்
கோயில்பிர ளயவைரவர்
குறுகுபழை மண்டலாய் வல்லிபுர நாதருறு
கோயிலிவை கூறிலின்னும்
சதம்படு தலங்கள்பிற நானூ றெனச்சொனூர்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைங்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சிதம்பர சபாநாதர் தெற்குநோக்கிய அருள் திவ்விய நேத்திர தானமாய் - ஸ்ரீ சிதம்பர சிற்பாநாயகரானவர் தெற்குத்திக்கைநோக்கிய அருளையுடைய பரிசுத்தமாகிய சோம சூரியாக்கினி யென்னுந் திரிநேத்திரங்களின் பார்வை நேரே போய் விழப்பெற்ற விசேஷத்தானமாய்,—திகழ் யாழ்ப்பாணத்தில் அமர்வ - விளங்காநின்ற யாழ்ப்பாணத்தின்கட் பொருந்திப் பிரகாசிப்பனவாகிய விசேஷ நிலயங்களாவன,—பொன்னுலயம் - இலக்குமி தன்பிராணநாயகராகிய விஷ்ணுவைப் பிரதிட்டைசெய்து பூசித்த பொன்னுலயமும்,—சித்திதரு திருவடிநிலை - சுழிபுரக் கடற்கரையிலுள்ளதாய் இஷ்ட சித்திகளைத் தருந் திருவடிநிலையும்,—நிதம்படும் கைலாயநாதர் ஆலயம் - நித்தியம் பொருந்திய கைலாய நாதர் ஆலயமும்,—ஊழி நீள் சட்டை நாதர் கோயில் - ஊழிகாலம் வரைக்கும் நீண்டிருக்கும் சட்டைநாதர் கோயிலும்,—நீடு வில்லூன்றி - உயர்வாகிய இரகுராமன் கோதண்டமாகிய தன்வில்லினல் ஊன்றப் பெற்றதனலாய காரணக்குறியாகிய வில்லூன்றியும்,—யமுனநதி - நல்லூரிலே யமனரி என்று தற்போது வழங்குந் தீர்த்தவிசேடமாகிய யமுனநதியும்,—நிலாவரை - நிலவரை என்பதன் விகாரமாகிய நிலாவரையென்னும் விசேட நீர் நிலையும்,—இந்நிகழ் சதக முதல்வர் நிலயம் - இங்ஙனம் பாடப்படுகின்ற இச்சதக முதற்பரம்

பொருளாகிய சந்திரமௌலீச ராலயமும்,—குதம்பை அம்பிகை யொடும் வாரிவன நாதர் அமர் கோயில் - குணுக்கென்னும் ஆபரணத்தைத் தரித்தருளிய உமாதேவியாரோடும் வாரிவன நாதர் எழுந்தருளியிருக்கின்ற சாவகச்சேரி வாரிவனநாதர் கோயிலும்,—பிரளய வைரவர் குறுகு பழை - பிரளய வைரவர் வீற்றிருக்கின்ற பழையும்,—மண்டலாய் - தசரத ராமனது விநா யகப் பிரதிட்டைத் தானமாகிய மண்டலாயும்,—வல்லிபுரநாதர் உறு கோயில் - பூமிதேவி தன் பிராணநாயகராகிய விஷ்ணு வைப் பிரதிட்டைசெய்து பூசித்த வல்லிபுரநாதர் வீற்றிருக் கின்ற பெருமாள்கோயிலும்,—இவை - ஆகிய இவைகளோடு,— கூறில் இன்னும் சதம்படு தலங்கள் பிற நானூறு எனச் சொனார் - இன்னுஞ் சிறிது விரித்துக் கூறப்புகின், நிலைபேறு பொருந்திய தேவஸ்தானங்கள் நானூற்றின் மேலுமுள்ளன வென்று பண்டை நூலாசிரியர் விரித்துக் கூறினார்கள்,—சாந்த நாயகிசமேத. எ - று. (கூ0)

## யாழ்ப்பாணத்துப் பிராமணர்கள்.

விளைவேலி நீர்வேலி யொடுநவிண் டிலின்மிகவு
மேவுவா ராதிசைவர்
வேதவே தாங்கம் பயின்றுளா ராகமநல்
விற்பன்னர் விமரிசையுளார்
கலைசூலி யடியவர்மு னிடுசாப நடையதிலர்
காரைநகர் கந்தரோடை
கதிகொடிரு நல்லைதிரி கண்ணனமர் வண்ணைமுது
கயிலைநிகர் நகுலைககனத்
தளைகா குகன்மாவை புத்தூர் புலோலிநக
ராதியா மூர்களினெலா
மமர்வரந் தணர்கல்வி யறிவொழுக் கம்பெரிது

மடைவர்வை திகர்சைவரைந்
தளையேனை யளவிறவ றுளையேனை யென்புரிதி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். விளைவேலி - விளைவேலியிலும்,—நீர்வேலி - நீர் வேலியிலும்,—நவிண்டில் - நவிண்டிலிலும்,—மிகவும் மேவுவார் ஆதிசைவர் - சர்வாதிகாரிகளாகிய ஆதிசைவர்கள் பெரும்பாலு மிருப்பார்கள்,—வேத வேதாங்கம் பயின்றுளார் - இவர்கள் நான்கு வேதங்களையும் அத்தியயனஞ் செய்தலோடு வேதாங் கங்களாறனையுங் கற்றறிந்தவர்,—ஆகமநல் விற்பன்னர் - சைவா கமங்களிலே சிறந்த விற்பத்தியை யுடையவர்,—விமரிசையு ளார் - கல்வியறி வொழுக்கஞ் செல்வ முதலியவற்றால் அள விறந்த செல்வாக்கையு முடையவர்,—கலை சூலி அடியவர் முன் இடு சாப நிலை நடையது இலர் - பாவிகளாகிய அசுரர்களைக் கொன்று அகற்றுகின்ற இச்சா ஞானக்கிரியாரூபமாகிய முத் தலைபொருந்திய சூலவேலையுடைய சிவபெருமானது அடியார் களாகிய உமாதேவியார் திருநந்திதேவர் அகத்தியர் ததீசி முனி வர் கௌதமரிஷி முதலிய பெரியோர்களால் ஆங்காங் கொவ் வோரேதுப் பற்றி இடப்பட்ட சாபங்களினாற் சம்பவித்த கெட்ட வொழுக்கத்தையுடைய ஏனைத்தேயத்துப் பிராமணர் கள் போலாகாது வேதசிவாகமங்கள் விதிக்கப்பட்ட நல்லொ ழுக்கத்தையுடையவரேயாம்,—காரைநகர் - ஏனைத் தீவுகட்கு ஒரு நகரம்போல்வதாகிய காரை தீவும்,—கந்தரோடை - கந்த ரோடையும்,—கதிகொள் திருநல்லை - யாழ்ப்பாணத்துள்ள ஊர் களுக்குள்ளே விசேடகதியைக் கொண்ட திருநல்லூரும்,—திரி கண்ணன் அமர் வண்ணை - மூன்றுகண்களையுடைய சிவபெரு மான் வீற்றிருக்கப் பெறுகின்ற வண்ணையும்,—முது கைலைநிகர் நகுலை - பழைய கைலாயத்தை நிகர்த்த தெய்வத்தன்மை வாய்

ந்த கிரிமலையும்,—ககனத்து அளா கா குகன் மாவை - ஆகா யத்தை அளாவிய சோலைகள் சூழ்ந்த சுப்பிரமணியஸ்தலமாகிய மாவிட்டபுரமும்,—புத்தூர் - புத்தூரும்,—புலோலிநகர் ஆதி யாம் ஊர்களின் எலாம் அந்தணர் அமர்வர் - புலோலிநகரம் முதலாகிய ஊர்களனேகங்களினும் பிராமணர்கள் வீற்றிருப்பார் கள்,—கல்வியறிவொழுக்கம் பெரிதும் அடைவர் - கல்வியறி வொழுக்கங்களை முழுதுமுடையவர்,—வைதிகசைவர் - இப் பிராமணர்கள் வேதத்தையும் ஆகமத்தையுந் தழுவி ஒழுகு கின்ற வைதிகசைவர்களாம்,—ஈந்தளேயேனை - ஆணவம் முத லிய பஞ்சபாசங்களாற் பந்திக்கப் பட்டவனும்,—அளவில் தவறு உளேயேனை - அதனுலளவிறந்த குற்றங்களையுடையேனு மாகிய தமியேனை,—என் புரிதி - இனிமேல் என்ன செய்யப் போகின்றீரோ? அதனை யறிகின்றிலேன்,—சாந்தநாயகி சமேத. எ - று. (சுக)

## யாழ்ப்பாணவாசிகளின் குலதெய்வமும், சிவதருமமும்.

பூலோக கயிலாய கிரிசிதம் பரமேவு
புனிதசற் குருநடேசன்
புத்தமுத மதுரவாய் மொழியம்மை சிவகாமி
பொற்பாத தரிசனமலான்
மேலோக மாளுதலு மிகையென்று கொண்டுளோர்
மிகுமியாழ்ப் பாணவாணர்
மேவயன வட்டஞ் சிதாகாச யாத்திரைசெய்
மெய்யர்நெஞ் சந்துய்யவர்
ஆலோக மன்றினுக் காக்கினே யத்தின்முனி
யகழ்வாவி கரையிருமருங்
கம்மையப் பர்கடமக் கானகட் டளையமைத்
தையிரு மடஞ்சமைத்தோர்

சாலோக சாமீப சாரூப சாயுச்ய
சாந்தநாயகி சமேத
சந்த்ரமௌ ளீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பூலோக கயிலாயகிரி சிதம்பரமேவு புனிதசற்குரு நடேசன் - பூலோககைலாய கிரியாகிய ஸ்ரீ சிதம்பர மகாசிவ க்ஷேத்திரத்தின்கண் ணெழுந்தருளியிருக்கின்ற நின்மலசற்குருவாகிய திருநடராசமூர்த்தியும்,—புத்தமுத மதுரவாய்மொழியம்மை சிவகாமி பொற்பாத தரிசனமலால் - புதிய தேவாமிர்தம் போலும் மதுரவாய் மொழியம்மையும் சிவகாமசுந்தரியம்மையு மென்னுஞ் சிவஞ்சத்திகளது பொன்போலுந் திருவடித் தரிசனமொன்றே யல்லாமல்,—மேலோகம் ஆளுதலும் மிகையென்று கொண்டுளோர் - சுவர்க்கம் முதலிய மேலுலகங்களை அடைந்து அவற்றை அரசாட்சி செய்தலும் குற்றமான செய்கையென்று மனத்திலுறுதிப்பாடு கொண்டுள்ளவர்,—மிகும் யாழ்ப்பாண வாணர் - மேம்பட்ட யாழ்ப்பாணவாசிகள்,—மேவு அயனவட்டம் சிதாகாச யாத்திரைசெய் மெய்யர் - வருடந்தோறும் வருகின்ற உத்தராயண தக்ஷிணாயனங்களாகிய அயனவட்டங்கடோறும் சிதம்பரதல யாத்திரைசெய்கின்ற உண்மையறிவினையுடையவர்,—நெஞ்சம் தூய்யர் - கபடம் பொறாமை முதலிய குற்றங்களற்ற சித்தசுத்தியையுடையவர்,—ஆலோக மன்றினுக்கு ஆக்கினேயத்தில் முனியகழ்வாவி கரையிருமருங்கு - சிதம்பரத்தின்கண்ணுள்ள கனகசபைக்கு அக்கினிதிக்கிலே ஞானப்பிரகாசமுனிவர் வெட்டுவித்த ஞானப்பிரகாசமென்னும் குளத்தின் வடகரை கீழ்கரையென்னு மிருகரைகளினும்,— அம்மையப்பர்கடமக்கு ஆன கட்டளை அமைத்து ஐயிருமடம் சமைத்தோர்-பரமபிதாமாதாக்களாகிய அச்சிவஞ்சத்திகட்குரிய சட்காலகட்டளைக்கென்று சமர்ப்பித்துப் பத்துத் திருமடங்களைக்கட்டி அவற்றிற்கு வேண்டுந் திரவியங்களையுமமைத்து

வைத்தவர்,—சாலோக சாமீப சாரூப சாயுச்ய - சிவசாலோக சாமீப சாரூப சாயுச்யங்களைத் தம்மடியவர்களுக்குக் கொடுத் தருளுகின்ற,—சாந்தநாயகிசமேத. எ - று.

சிற்சபையிலெழுந்தருளியிருக்குந் தேவிக்கு மதுரவாய் மொழியம்மையென்னுந் திருநாமத்தோடு சிவகாமசுந்தரியெனவும், சிவகங்கைக்கு மேல்பாகத்திற் கோயில்கொண்டெழுந் தருளியிருக்குந் தேவிக்குச் சிவகாமியம்மை எனவும் திருநாமங் களாமென வேற்றுமையை உய்த்துணர்ந்துகொள்க. (சுஉ)

## சிதம்பர தசமடம்.

மாமேவி யாழ்ப்பாண பரராச சேகர
 மகாராச மணிதிருமட
மறுவின்மா ஞபரண முதலியார் தருமடமோர்
 மதகரிக் கன்றின்மடம்
காமேவு சிவபுரிக் கடுமடம் வரணிகுரு
 கட்டுவித் திடுபுதுமடங்
காமர்புண் ணியநாச்சி தருமடஞ் சாயரட்
 சைத்திருக் கட்டளைமடம்
சாமேவ லில்புகழ்ச் சங்கானை வடமடந்
 தாவில்செவ் வாய்க்கிழமைபேர்
சார்மடம் பழமடமொ டையிரு மடங்களிவை
 சகலசம் பத்துமுடைய
தாமேவு வார்க்குபா தானமன் னமுமீவர்
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தல்வாசனே.

இ - ள். மாமேவு யாழ்ப்பாண பரராச சேகர மகாராச மணி திருமடம் - உன்னத மகிமை பொருந்திய யாழ்ப்பாணத்து நல்லூரிலிருந் தரசியற்றிய பரராசசேகர மகாராசா நடராச மூர்த்தியின் கட்டளையின் பொருட்டுக் கட்டியருளிய இராச கட்டளைமடமும்,—மறுவில் மாறுபரண முதலியார் தருமடம் - சிறிதும் மறுவற்ற உயர்குடிப் பிறப்பிலுதித்த மாறுபரணமகா முதலியார் அமைப்பித்தருளிய மாறுபரணமுதலியார் மடமும்,—ஓர் மதகரிக் கன்றின் மடம் - ஒப்பற்ற ஆனைக்குட்டிமடமும்,—காமேவு சிவபுரிக்கமெடம் - சோலைசூழ்ந்த சிவபுரியிற் சில சொத்துக்களையுடைய யாழ்ப்பாணக் காரைதீவுச்சிவபுரி மடமும்,—வரணிகுரு கட்டுவித்திடு புதுமடம் - வரணியிலுள்ள சைவதேசிர்களாற் கட்டுவிக்கப்பட்ட புதுமடமும்,—காமர் புண்ணியநாச்சி தருமடம் - சிவபுண்ணியத்தில் அதிசிரத்தையுடைய யாழ்ப்பாணத்து வண்ணைநகரிலுள்ள புண்ணியநாச்சி யென்னுந் தருமவாட்டியினாலே கட்டுவிக்கப்பட்ட புண்ணியநாச்சி மடமும்,—சாயரட்சைத்திருக் கட்டளை மடம் - யாழ்ப்பாணத்து மட்டுவிலிலுள்ள சண்முகநாதமுதலியார் முதலிய சில புண்ணியசீலர்களினாலே கட்டுவிக்கப்பட்ட சாயரட்சைத்திருக்கட்டளைமடமும்,—சாமேவல் இல் புகழ் சங்கானை வடமடம் - நித்தியமாகிய கீர்த்தியினையுடைய யாழ்ப்பாணத்துச் சங்கானையிலுள்ள தருமசீலர்களாலே கட்டுவிக்கப்பட்டு ஞானப்பிரகாச மென்னுந் திருக்குளத்திற்கு வடகரையிலுள்ள சங்கானை வடமடமும்,—தாவில் செவ்வாய்க் கிழமைபேர் சார்மடம் - கேடற்ற யாழ்ப்பாணத்து மட்டுவில் கோப்பாய் இருபாலைகளிலுள்ள புண்ணிய புருஷர்களினாலே கட்டுவிக்கப்பட்ட செவ்வாய்க் கிழமைமடமும்,—பழமடமொடு ஐயிருமடங்கள் இவை - யாழ்ப்பாணத்துத் திருநெல்வேலியிலுள்ள ஞானப்பிரகாசமுனிவராலே கட்டுவிக்கப்பட்ட பழமடமுமாகிய இவைகளே மேற்கூறிய பத்துத் திருக்கட்டளைமடங்களாம்,—சகலசம்பத்துமுடைய - இவைகள் தாவரசங்கமங்களாகிய சகல செல்வங்க

ளையுமுடையனவாம்,—தாம் மேவுவார்க்கு உபாதானம் அன்ன மும் ஈவர் - இம்மடாதிபதிகடாம் யாசகர்கட்குக் காலையில் உபா தானமும் மத்தியானகாலத்தில் அன்னதானமுங் கொடுத்துக் கொண்டு வருவாராயினர்,—சாந்தநாயகிசமேத. எ - று. (சுரு)

## ஞானப்பிரகாசமுனிவர் வரலாறு.

சீர்மேவி யாழ்ப்பாண திருநெல்வே லியிலியாஞ்
  செய்தவ மெனவுதித்தான்
சிந்தும் பழிக்குவெந் துயருழந் தஞ்சிநந்
  தேயமக லுஞ்சிந்தையான்
ஏர்மேவு யௌவனத் தெரிகுளிக் குங்கற்பி
  னேந்திழையை யுங்கதறவிட்
டெய்திச் சிதம்பரத் திறையிறைவி தாள்புக்கொ
  ரேழேழு நாளுபவசித்
தூர்மேவு கௌடத்தெ முமையம்மை யருளுந்த
  வுற்றூ ரியக்கடல்கடந்
தும்பர்குரு வின்மகா பண்டிதனு மாய்ச்சனன
  முற்றபய னுறவுமையருட்
சார்மேவு சைவத் தனித்துறவி யாயினன்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சீர்மேவு யாழ்ப்பாண திருநெல்வேலியில் யாம் செய்தவம் என உதித்து - செந்தமிழ்க்கல்விச் சிறப்புப்பொருந் திய யாழ்ப்பாணத்திலுள்ள திருநெல்வேலியிலே யாம் எல்லோ ரும் பூர்வசன்மங்களிற் செய்த தவங்களனைத்துந் திரண்டு ஒரு வடிவெடுத்தாற்போல அவதரித்து,—ஆன்சிந்தும் பழிக்கு வெந்

துயர் உழந்துஅஞ்சி நம் தேயம் அகலும் சிந்தையான் - அக்கா லத்துள்ள பறங்கியரசர் வருஷத்துக்கொருதரம் வீட்டுக்கொவ் வோர் பசுமாட்டைத் திறை வாங்கிக் கொன்றுதின்னுங் கொலைப்பாவத்தின் பொருட்டுத் தாங்கொடியமனத்துன்பங் களை அநுபவித்து அவ்வான் கொலைப்பழிக்குப் பயந்து நம்மு டைய இலங்கா தேயத்தை முழுவதும் விட்டகலுங் கருத்து டையவராகி,—எரி குளிக்கும் ஏர்மேவு யௌவனக் கற்பின் ஏந் திழையையும் கதறவிட்டு - அக்கினியிற் பிரவேசிக்கவல்ல மகா பதிவிரதாதருமத்தையும் வள்ளியம்மை என்னும் நாமதேயத் தையுமுடைய பேரழகுபொருந்திய பதினாறுண்டிற் பெண்ணா கிய தம்மனைவியையும், பிரிவாற்றாமையினாலே அவள் மனமும் சரீரமும் பதறி நடுநடுங்கிக் கதறுநிற்பப் பற்றறத் துறந்தொ ழித்துவிட்டு,—சிதம்பரம் எய்தி இறை இறைவிதாள் புக்கு ஓர் ஏழேழு நாள் உபவசித்து - உடனே சிதம்பரதலத்தை யடைந்து நடராஜமூர்த்தி சிவகாமியம்மையென்னுஞ் சிவஞ்சத்திகளது திருவடிச் சந்நிதானத்திற் றலைப்பட்டு நாற்பத்தொன்பதுநாள் உபவாசஞ்செய்து,—ஊர்மேவு கௌடத்து எம் உமையம்மை அருள் உந்த உற்று - அச்சிவகாமியம்மையினுடைய பூரணானுக் கிரகம் பெற்று அவ்வருட்சத்தியினுடைய திருவருளானது செலுத்தாநிற்ப ஊர்கள் பொருந்திய கௌடதேயத்தை அடைந்து,—ஆரியக்கடல்கடந்து - அங்கே சம்ஸ்கிருத பாஷை யாகிய சமுத்திரத்தைக் கற்றுத் தெளிந்து கரைகண்டு,—உம் பர்குருவின் மகாபண்டிதனுமாய் - தேவகுருவாகிய பிருகஸ்பதி யைப்போல மகாபண்டிதருமாகி (சித்தாந்த சிகாமணி முதலிய பத்துச் சம்ஸ்கிருத நூல்களையும் ரௌரவாகமத்திற்குத் தர்க்க சடிலமாகிய ஒரு வியாக்கியானத்தையுஞ் செய்துகொண்டு),— சனனமுற்ற பயன் உற உமை அருள் சார்வு மேவு சைவத் தனித்துறவியாயினன் - தாம் மானுடசன்மத்தை எடுத்ததனால் அடைதற்பாலதாய் உறுதிப்பொருளாயுள்ள பரமுத்தியையடை யும்படி அச்சிவகாமியம்மையாரது திருவருட் சார்பினாலே பெரி

யோர் அனைவரும் விரும்புங் காஷாயவஸ்திரதாரியாகிச் சித்தாந்தசைவத் தொப்பற்ற துறவறத்தை மேற்கொண்டு ஒழுகினூர்,—சாந்தநாயகிசமேத. எ - று. (கூச)

ஆயசிவ யோகிபின் றில்லைமா நகரடைந்
தம்மையப் பரையடிதொழு
தானந்த வெள்ளத் தமிழ்ந்தியக் கினிதிக்
கடைந்தயர் மடாலயத்துட்
போயரிய கிட்டையி லிருக்குநா ளிற்புதையல்
புவியிற் புலப்படுதலும் [டோர்
புனிதனிஃ தாட்கொல்லி யென்றஞ்சி யாப்பிகொ
புரையுட் புதைத்தகறலும்
தூயகோ முட்டியொரு வன்முன் புதைத்தது
துறந்துபோ னன்மறந்தே
துணைவிநே டோடிவந் தணையதங் கின்மையிற்
றுயருழந் தலறினன்சேர்
தாயகம தாகுமுன் சரணகம லந்தருதி
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஆய சிவயோகி பின் தில்லைமா நகர் அடைந்து - காசிப்பதியின்கண்ணே விசுவநாத சுவாமிசந்நிதானத்தில் காஷாயவஸ்திரம் பெற்றுத் துறவறம் பூண்டுகொண்ட அந்தச் சிவயோகியாகிய ஞானப்பிரகாசமுனிவர்,—அம்மை அப்பரை அடிதொழுது ஆனந்த வெள்ளத்து அழுந்தி - அதன்பின் தம்முடைய வேண்டுகோளை முடித்தருளுமாறு தம்மைக் கௌடதேயத்திற்கனுப்பிச் சம்ஸ்கிருதபாஷா விற்பத்தியை வேண்டியமட்டுங் கற்கும்படி உபகரித்தருளிய தமது ஞானசற்குருவாகிய

சிவகாமியம்மையாரைத் தரிசிக்குமாறு அதிவேகத்துடன் சிதம் பரதலத்தையடைந்து முதலிலே சிவகாமியம்மையாரது திரு வடிகளைத்தரிசித்து வழிபட்டபின் நடராஜமூர்த்தியின் திரு வடிகளையும் அங்ஙனம் வழிபட்டுச் சமாதிகூடிச் சிவானந்தவெள் ளத்திலமிழ்ந்தி,—அக்கினிதிக்கடைந்து அயர்மட ஆலயத்துள் போய் அரிய நிட்டையில் இருக்கும் நாளில் - அச்சந்நிதானத் திற்கு அக்கினிதிக்கிற்போய்த் தாமொரு சிறுமடத்தைக் கட்டு வித்து அம்மடத்தினுள் சிவயோகநிட்டை கூடியிருக்குங் காலத் திலே,—புதையல் புவியில் புலப்படுதலும் - புதிதாகக் குவிக்கப் பட்டதொரு மணற் குவியலுள் மற்றொருவனாற் புதைக்கப் பட்ட திரவியம் அவ்விடத்தினின்றுந் தமது கண்களுக்கு வெளிப்படுதலும்,—புனிதன் இஃது ஆட்கொல்லி என்று அஞ்சி ஆப்பிகொடு ஓர் புரையுள் புதைத்து அகறலும் - சித்தசுத்தியை யுடைய அம்முனிவர் இஃதாட்கொல்லியென்று கூறி அதற்கச் சங்கொண்டு ஒருபெரும்பழங்குழியின்கண்ணே அத்திரவியப் பைகளாறனையுமிட்டு அக்குழியைப்பக்கத்துக் குவித்திருந்த சாணக்குவியலினாலே மேலேமறைத்துவிட்டு அவ்விடத்தைவிட் டகன்றவுடனே,—தூய கோமுட்டி ஒருவன் முன் புதைத்தது துறந்துபோனான் மறந்து - யாத்திராமார்க்கமாக உத்தரத்தி னின்றும் வந்த பரிசுத்தத்தையுடைய கோமுட்டியொருவன் அத்திரவியப்பைகளை அம்மணற் குவியலுள் எழுதினத்துக்கு முன் இங்ஙனம் புதைத்துவிட்டுப் பக்கத்துள்ள ஓர்குடிசை யிலே மனைவிமாரோடு சமையல்பண்ணிப் போசனஞ் செய்து கொண்டு நடராஜ தரிசனத்தின் பொருட்டு எழுநாள் இருந்த வன் இராமேச்சரத்திலே இத்திரவியங்களைக் கொண்டு தருமஞ் செய்யுங் கருத்துடையவனும் இப்புதையற் றிரவியத்தை மாத் திரம் மறந்துவிட்டு எட்டாம் நாட் புறப்பட்டுப் போய்ச் சமீபத் துள்ள சீகாழியிலிறங்கிச் சுவாமிதரிசனஞ்செய்து அருச்சனை யின் பொருட்டுப்பணம் எடுக்குஞ் சமயத்தில் இப்புதையற் றிர வியநினைவு வருதலும்,—துனைவிறேடு ஓடிவந்து அனையது

அங்கு இன்மையின் துயர் உழந்து அலறினன் - தான்மாத்திரம் வேகத்தோடு ஓடிவந்து இங்கே பார்க்குஞ் சமயத்தில் அப்புதை யற் றிரவியம் அவ்விடத்தில்லாமையினாலே மிக்க துன்பங்களை அநுபவித்துக் கதறி அழுதான்,—சேர் தாயகமதாகுமுன் சரண கமலம் தருதி - அடையத்தகுந் தாய்வீடுபோன்ற தேவரீரு டைய சரணாரவிந்தங்களை அடியேனுக்குத் தந்தருளும்,—சாந்த நாயகிசமேத. எ - று.　　(சுகு)

அழுகுரல் செவிக்கொடங் கையன்வெய் தினினெய்
　　யாற்றியவ லமதறைகென　　[தி
வாதியந் தஞ்சொலனு மவனைவா வென்றழைத்
　　தாப்பியி தகற்றுகெனுமப்
பொழுதவ னகற்றியப் புதையல்கண் டகமகிழ்வு
　　பொங்கியம் முனிபொன்னடி
போற்றிமூ வுலகினின் போலுமுண் டோஞானி
　　புதையலினி நின்னதேயான்
விழுமியசெல் வத்தினேன் கைக்கொளிக் கிழியென
　　விரத்திகோ டன்மறுப்ப
விமலநின் பெயராலொர் குளமிங் கமைத்தியென
　　விட்டது விரைந்தேகினன்
றழுதழுத் தழுதுதொழு தாசர்தந் தாசநஞ்
　　சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அழுகுரல் செவிக்கொடு அங்கு ஐயன் வெய்தின் எய்தி - அக்கோமுட்டி அங்ஙனமழுகின்ற குரலைச் செவியினாற் கேட்டுச் சமீபத்துள்ள தம்மடத்துள் நிட்டைகூடியிருந்த ஞானப்பிரகாச முனிவர் அதிசீக்கிர மவனிடத்திற்சென்று,—

ஆற்றி அவலமது அறைகென - அவ்வழுகையை மாற்றி உன் துன்பத்தின் காரணத்தைச் சொல்லென்றுவினவ,—ஆதியந்தஞ் சொலலும் - அவன் தனது ஆதியந்த துன்பநிகழ்ச்சியைச் சொல் லுதலும்,—அவனை வாவென்றழைத்து - அவனை இங்ஙனம் வருகவென் றழைத்துக்கொண்டு அக்குழியிருக்கு மிடத்திற் சென்று,—ஆப்பி இது அகற்றுகெனும் அப்பொழுது அவன் அகற்றி - இச்சாணத்தைநீக்கிப் பார்ப்பாயாகவென்று கூறுமத் தருணத்தில் அவனும் அதனைநீக்கி,—அப்புதையல் கண்டு அக மகிழ்வு பொங்கி - அப்புதையற் றிரவியங் களைக்கண்டு மகிழ்ச்சி கொண்டு,—அம்முனி பொன்னடிபோற்றி - அம்முனிபுங்கவரது பொன்போலும் பாதங்களை வழிபட்டு,—மூவுலகில் நின்போலும் உண்டோ ஞானி - திரிலோகத்திலும் தேவரீரைப்போலும் உண் மைஞானிகளுமுண்டோவென்று துதித்து,—புதையல் இனி நின்னதே - இப்புதையற் றிரவியம் இனித்தேவரீரதேயாம்,— யான்விழுமிய செல்வத்தினேன் இக்கிழி கைக்கொள் என - அடியேனோ மிகுந்த செல்வத்தையுடையேன், ஆதலின், இத் திரவியங்களைத் தேவரீரே கைக்கொள்ளவேண்டுமென்று மிக வும் பிரார்த்திக்க,—விரத்தி கோடல் மறுப்ப - அதற்குத் துறவி நான் கரபாத்திர பிச்சையினாற் சீவிப்பவன் ஆதலானெனக்கிது ஒருசிறிதும் வேண்டற்பாலதொன்றன்றென்று தாமேற்றுக் கொள்வதைமுழுவதும் மறுத்துவிட,—விமல நின் பெயரால் ஓர்குளம் இங்கு அமைத்தியென அதுவிட்டு விரைந்தேகினன் - அக்கோமுட்டி, மகாபரிசுத்தரே! தேவரீரது திருநாமத்தினாலே ஒருதிருக்குளத்தை இங்கேவெட்டுவித் தமைக்கக் கடவீரென்று கூறி அத்திரவியங்களை அவர் முன்னிலையிற்றானே கைவிட்டு விரைந்து தெற்கு நோக்கி வல்விரைந்து போய்விட்டனன்,— தழுதழுத்து அழுது தொழு தாசர்தந் தாச - நாக்குத் தழு தழுத்து அழுது வணங்கி வழிபடுகின்ற மெய்யடியவர்க்கடிய வரே,—நம் - நமதன்னையாகிய,—சாந்தநாயகிசமேத. எ - று.

இத்திரவி யங்கொடிம் முனிவர்மு னியற்றியிடு
 ஞானப்பிர காசகுளமே
யாமுன் னிசைத்தகுள மினையதிங் கில்லையேல்
 யாதுசெய் வாரீண்டுளோர்
சுத்தசிவ காமியொரு வற்சரத் தொருதினஞ்
 சூழ்கரைத வத்தினமர்வாள்
சோதியுந் தேவியுந் தெப்போற் சவங்கொள்வர்
 சுற்றிலுந் திருமடமுறும்
நித்தநிய மத்தொழி னிரப்புமூர்த் தீக்கிதரு
 நீடுமந் தணரனைவரு
நிகரின்மா கேசுரரு மிவர்கள்பன் னியருமிந்
 நீர்நிலையி னின்றுமகலார்
சத்திசிவ காமிகோ யிலுமமைப் பித்ததிவர்
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். இத்திரவியங்கொடு இம்முனிவர் முன் இயற்றியிடு ஞானப்பிரகாச குளமே - அக்கோமுட்டியின் திரவியத்தைக்கொண்டு யாழ்ப்பாணத்துக் காரைதீவிலிருந்துவந்த குமாரவேற் றம்பிரானை இக்குளவிஷயத்தின் காரியதரிசியாக நியோகித்து இஞ்ஞானப்பிரகாசமுனிவர் சற்றேறக்குறைய முந்நூற்றைம்பது வருடங்களுக்குமுன் வெட்டுவித்த ஞானப்பிரகாசமென்னும் திருக்குளமே,—யாம்முன் இசைத்த குளம் - யாம் முன்னர்ச் சுட்டிக்கூறிய திருக்குளமானது,—இனையது இங்கு இல்லையேல் இங்குளோர்யாது செய்வர் - இக்குளம் இவ்விடத்தில்லையாயின் இச்சிதம்பரதலத்தின்கண்ணுள்ளவர் ஸ்நானபானாதிகட்குயாது தான் செய்வார்களோ தெரிகின்றிலேம்,—

சுத்தசிவகாமி யொருவற்சரத்து ஒருதினம் சூழ்கரை தவத்தின் அமர்வாள் - நிருமலையாகிய சிவகாம சுந்தரிதேவியார் வருடத் துக்கொருதின மிக்குளத்தைச் சூழ்ந்திருக்கின்ற வடகீழ்க்கரை யில் வந்து சுவாமியைத் திருமணஞ்செய்துகொள்ளும்படி தவஞ் செய்து கொண்டெழுந்தருளி யிருப்பர்,—சோதியுந் தேவியுந் தெப்போற்சவங் கொள்வர் - இவ்வொருவிசேஷமேயன்றி நிர் மலவொளிவடிவாகிய திருநடராசமூர்த்தியுஞ் சிவகாமசுந்தரி தேவியும் இத்திருக்குளத்தில் வருடத்துக் கொருதரந் தெப் போற்சவங் கொண்டருளுவர்,—சுற்றிலும் திருமடமுறும் - இதன் நான்கு சுற்றுக்கரைகளினுங் கட்டளைத்திருமடங்கள் சூழ்ந்திருக்கப்பெறும்,—நித்த நியமத் தொழில் நிரப்பும் ஊர்த் தீக்கிதரும் - நித்திய நியமமான கிரியைகளைப் பிரதிதினமும் முக்காலத்தினும் முடிக்கவேண்டிய இச்சிதம்பரதல விசேஷ புருஷர்களாகிய தீட்சிதர்களும்,—நீடும் அந்தணர் அனைவரும் - உயர்வாகிய ஏனைய பிராமணர்கள் சமஸ்தரும்,—நிகரின் மாகே சுரரும் - நிகரற்ற சைவர்களாகிய மாகேசுரர்களும்,—இவர்கள் பன்னியரும் - இம்முத்திறத்தினரது பத்தினிமார்களும் பிற ரும்,—இந்நீர் நிலையில் நின்றும் அகலார் - இந்தஞானப்பிரகாச குளத்தினின்றுந் திரிகாலங்களினும் விட்டுநீங்கார்,—சத்தி சிவ காமி கோயிலும் அமைப்பித்தது இவர் - அருட்சத்தியாகிய சிவ காமியம்மையார் திருக்கோயிலையும் புதுக்குவித்தருளியதும் இந்தஞானப்பிரகாசமுனிவரேயாம்,—சாந்தநாயகிசமேத. எ-று.

## ஸ்ரீ சிதம்பராலய மகாமணிகள் முதலியன.

தில்லைமா நகரிடைச் செம்பொற் சபைக்குமுன்
 றிப்பிய மகாமணிகளும்
திரிதச விலக்கபொன் விலைமதிப் புடையபூத்
 திதிகளுந் தந்தாரியார்
நல்லநம் மவரலான் முத்திதரு தேர்வீதி
 நான்கின்மா மேலைவீதி

நாவலர்தஞ் சைவப்ர காசவித் யாசாலை
　　நனிதுலங் குந்நான்மறைச்
செல்வர்நீக் கிதர்சிறு ருஞ்சைவ ருங்கற்பர்
　　செந்தமிழு மாரியமுமே
தினமுமிவ ராட்டுவிக்கும் பாற்கா வடித்திறந்
　　திருமூல நாதரறிவார்
தல்லிங்க ரில்லிதவ வல்லிகழை வில்லியொளிர்
　　சாந்தநா யகிரமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தில்லைமா நகரிடைச் செம்பொற் சபைக்குமுன் திப்பிய மகாமணிகளும் - சிதம்பர மகா தலத்தின்கண்ணே மாற்றுயர்ந்த பொன்னாலாகிய கனகசபைக் கெதிரே தூக்கி விடப்பட்டிருக்கின்ற இனிய ஓசையையுடைய பெரிய அசையா மணிகளிரண்டும் தேவசபைக்கெதிரே தொங்கவிட்ட மிகப் பெரிய காலவரையறைமணி யொன்றுமாகிய இம்மூன்று மகா மணிகளையும்,—திரிதச இலக்கபொன் விலைமதிப்புடைய பூத் திதிகளும் நம்மவர் அலால் தந்தார் யார் - சிதம்பர நடராச மூர்த்தி கட்டளைக்கென்று சங்கற்பித்துக் கொடுத்த பதின் மூன்றிலக்கம் பொன் விலைமதிப்புடைய தாவரப்பொருளாகிய நிலங்களையும் சிவபுண்ணியமாகிய நன்மையையுடைய யாழ்ப் பாணநாட்டின்கண் ணுள்ளவர்களேயல்லது மற்றைச் சோழ சேர பாண்டிய தொண்டைநாட்டின்கண் ணுள்ளவருள் எந்த நாட்டினர்தாம் கொடுத்தார்களோ,—முத்திதரு தேர்வீதிநான் கின் மாமேலை வீதி நாவலர்தஞ் சைவப்ரகாச வித்தியாசாலை நனி துலங்கும் - மோட்சத்தைத்தரும் தேர்வீதிகளென்று சேக் கிழார் சுவாமிகள் தாம் பாடியருளிய திருத்தொண்டர் பெரிய புராணத்தின்கண்ணே விதந்தெடுத் தோதியருளிய அவ்விரத

திருவீதி நான்கனுள்ளே மிகவிசேஷமாகிய மேலைத்திருவீதியிலே யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலரவர்கள் தம் சொந்தத் திரவியங் கொண்டமைத்தருளிய சைவப்பிரகாச வித்தியாசாலையானது நடராசமூர்த்தியின் திருக்கோயிலுக்கு இரண்டாவதாக மிகவும் பிரகாசித்து எங்கும் விளங்கித் தோன்றுநிற்கும்,— நான்மறைச்செல்வர் தீக்கிதர் சிறாரும் சைவரும் செந்தமிழும் ஆரியமுங் கற்பர் - இவ்வித்தியாசாலையிலே நான்கு வேத அருட்செல்வர்களாகிய தில்லைத்தீக்ஷிதர் குமாரர்களும், வேறுமநேக தேயங்களினின்றும் வந்திருந்து சைவபுத்திரர்களும் தொல்காப்பியம் முதலிய செந்தமிழிலக்கண நூல்களையும், திருவள்ளுவர் முதலிய நீதி நூல்களையும், சிந்தாமணிமுதலிய பஞ்சவிலக்கிய நூல்களையும் பிறசெந்தமிழ்நூல்களையும், சம்ஸ்கிருத வியாகரண தர்க்க காவிய நாடக நூல்களையும் அதற்குத் தகுந்த உபாத்தியாயர்கண்மாட்டு ஐயந்திரிபறக் கற்பார்கள்,— தினமும் இவர் ஆட்டுவிக்கும் பாற்காவடித் திறந் திருமூலநாதர் அறிவார் - இவ்வித்தியாசாலைக்கு மூலபுருஷர்களாகிய இந்நாவலரவர்கள் சுயம்புலிங்கமூர்த்தியாகிய திருமூலநாத மகாசிவலிங்கத்துக்குப் பிரதிதினமும் அபிஷேகிப்பிக்கும் பாற்காவடிச் சிவபுண்ணிய மகிமையினையும் பிரதோஷந்தோறும் நடராசமூர்த்தியையுஞ் சிவகாமிதேவியையும் எழுந்தருளுவிக்கின்ற உற்சவ சிவபுண்ணிய மகிமையையும் உள்ளபடி அவ்விருதிருமூர்த்திகளுமே யறிவார்கள்,— தல்லி - என்றும் யௌவனமுடைய என் பரம மாதாவும்,— நிகரில்லி - சமானரகித ரகிதரும்,— தவவல்லி - தவவல்லிக்கொழுந்தும்,— கருப்புவில்லி - கரும்புவில்லையுடையவருமாகிய,— சாந்தநாயகிசமேத. எ - று. (சுஅ)

## மடதரும சந்நியாசிகள்.

தொழுதகுங் காவிவத் திரதார மடபதிக
டோகையர்த மல்குற்றடந்

தோய்ந்திடா ரவரொடுஞ் சொல்லுமா டார்முகந்
தூயகண் களினோக்கிடார்
பழுதுதரு மவரொடும் பழகிடார் தம்மடப்
பாங்குமவர் பதிபுகவிடார்
படருழுந் திடினும் பரிந்திடார் தமதுளப்
பாவனையி னும்பற்றிடார்
ஒழுகுவ தெலாமரன் றிருவருட் சான்றொழுகி
யோங்குதரு மம்பெருக்கி
யொப்புயர்வில் வேதாந்த சித்தாந்த நிலைநிறீஇ
யுரையுநூல் களுமுணற்றித்
தழுவுவ தெலாமுத்தி சாதனந் தழுவுவார்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ-ள். தொழுதகுங் காவிவத்திரதார மடபதிகள் தோகையர்தமல்குற்றடந் தோய்ந்திடார் - யாழ்ப்பாணத்துள்ள வணங்கத் தகுந்த காவிவஸ்திரதாரிகளாகிய சிதம்பர மடாதிபதிகள் பெண்களது அல்குற்றடத்திலே படியார்,—அவரொடுஞ்சொல்லும் ஆடார் - அவர்களோடு சம்பாஷிக்கவும் மாட்டார்,—முகந்தூய கண்களில் நோக்கிடார் - அவர்களின் முகத்தைப் பரிசுத்தமாகிய தங்கள் கண்களா னொருகாற் பார்க்கவும் மாட்டார்,—பழுதுதரு மவரொடும் பழகிடார் - பாவக்கேட்டைத் தரும் அவர்களோடு பழகவும் மாட்டார்,—தம் மடப்பாங்கும் அவர் பதிபுகவிடார் - தந்தருமமடங்களின் பக்கங்களினும் அப்பெண்கள்குடிபுகவிடவும் மாட்டார்,—படருழந்திடினும் பரிந்திடார் - அப்பெண்கள் துன்பங்களை யனுபவிப்பினும் அவர்கள்மே லிரக்கங்கொள்ளவும்மாட்டார்,—தமதுளப் பாவனையினும் பற்றிடார் - தம்முடைய மனப்பாவனையினும் அவரைப்

பாவிக்கவும் மாட்டார்,—ஒழுகுவதெலாம் அரன் திருவருட் சான்றாகி ஒங்குதருமம்பெருக்கி - தாமனுட்டிக்குமனுட்டா னங்களையெல்லாஞ் சிவபெருமானது திருவருளே சான்றாக அனுட்டித்து, உயர்ந்தமடதருமங்களையுந் தருமப் பொருள்களை யும் விருத்திசெய்து,—ஒப்பு உயர்வில் வேதாந்த சித்தாந்த நிலை நிறீஇ - ஒப்புமுயர்வும் இல்லாத சீரியவேதாந்தத்தையுஞ் சைவ சித்தாந்தத்தையும் நிலைநிறுத்தி,—உரையும் நூல்களும் உஞற்றி- உரைகளையும் நூல்களையும் செய்து,—தழுவுவதெலாம் முத்தி சாதனந் தழுவுவார் - தாஞ் சார்வனவெல்லாம் முத்திசாதனமா கிய சார்புகளிலேயே சார்ந்தொழுகுவர்,—சாந்தநாயகிசமேத. எ - று.

யாழ்ப்பாணத்துக் காஷாய வஸ்திரதாரிகளாகிய துற விகளாவார்:—முற்காலத்திருந்த தில்லைநாத தம்பிரான், ஞானப் பிரகாசமுனிவர், வட்டுக்கோட்டைச் சிவஞானதம்பிரான் முத லானவர்களும், தற்காலத்திருக்கும் அம்பலநாவல சுவாமிகள், செப்பறைச்சுவாமிகள், இலக்கணம் முத்துக்குமாரசுவாமிகள், தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள், சிதம்பரசுவாமிகளும் முதலாயி னார்களென்க. (சுக)

## தில்லைநாத தம்பிரான்.

வரணியி லுதித்தமுது மாதவச் சிவயோகி
மறைசையிறை யாலயஞ்செய்
வான்றில்லை நாதப் பெயர்த்தம் பிரான்யாழை
வைதமொழி யம்மைவனச
சரணிணை தலைக்கொண்டு தஞ்சைமா நகரரசு
தனையைநோய் தள்ளிமும்மை
சால்சகத் திரவேலி யுப்பளந் தந்தெந்தை
தாளிற் சமர்ப்பித்தவன்

அரணியபழ விற்சுத்த சைவகுரு திலகரம
  ராரூர்த் தியாகராசற்
கம்பொன்வட மேருநிகர் தேருமொன் றுக்கிணை
  னஃதின்று முளதவற்பின்
றரணியிற் சந்தான குரவர்நால் வர்க்கருள்செய்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைங்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். வரணியிலுதித்த முதுமாதவச் சிவயோகி - யாழ்ப் பாணத்துள்ள வரணிகரணவாயென்னு மிரண்டூர்களுள்ளும் வரணியிலே அவதரித்த பூர்வசன்மங்களிலே செய்த பெருமை பொருந்திய சிவபுண்ணியமாகிய தவத்தையுடைய சிவயோகி யாய்,—மறைசையிறை ஆலயஞ் செய்வான் தில்லைநாதப்பெயர்த் தம்பிரான் - வேதாரணியேசுவரருடைய பழைய செங்கற் றிருப் பணியாலயத்தை நீக்கிக் கருங்கற்றிருப்பணியாலயமாகச் செய் தருளிய மகிமையையுடைய தில்லைநாத தம்பிரான் என்னும் நாமதேயத்தையுமுடைய தம்பிரானவர்,—யாழை வைத மொழியம்மை வனசசரணிணை தலைக்கொண்டு - அங்கெழுந் தருளியிருக்கின்ற திருவருட்சத்தியாகிய யாழைப்பழித்தமொழி யம்மையினது உபயதிருவடிகளைச் சிரசின்மேல் வகித்துக் கொண்டு,—தஞ்சைமாநகரரசு தனயைநோய் தள்ளி - அத்திரு வடிகளின் அனுக்கிரகத்தினாலே தஞ்சாவூரரசனுடைய ஏகபுத் திரியினது (வைத்தியரொருவராலும் மாற்றப்படமாட்டாத) மகாரோகத்தை அவ்வம்மையினது பவரோக அருமருந்தாகிய விபூதிப்பிரசாதத்தைக்கொண்டு மாற்றி,—மும்மைசால் சகத்திர வேலி உப்பளந் தந்து எந்தை தாளிற் சமர்ப்பித்தவன் - அவ் வரசனாலே மூவாயிரம் வேலி நிலங்களையும் உப்பளத்தையும் பெற்று அவைகளை எம்பரமபிதாவாகிய அவ்வேதாரணியேசு

வாராது திருவடிகளுக்கென்று சமர்ப்பித்து அர்ப்பணஞ் செய்த வர்,—அஃதன்றியும்: அரணி அழலிற் சுத்த சைவகுரு திலகர் அமர் - கடைகோலினின்றும் பிறப்பிக்கப்பட்ட அக்கினியைப் போலப் பரிசுத்தமுடைய கலப்பற்ற சைவகுருதிலகர்கள் வசிக் கும்,—ஆரூர்த் தியாகராசற்கு அம்பொன் வடமேரு நிகர் தேரும் ஒன்றாக்கினேன் - திருவாரூரிலெழுந்தருளியிருக்கும் தியாகராசப் பெருமானுக்கு மாற்றுயர்ந்த பொன்மயமாகிய வடக்கின்கண்ணுள்ள மகாமேருபர்வதத்தையொத்த பெருந் தேரொன்றைச் செய்வித்துக் கொடுத்தவரும இத்தில்லைநாத தம்பிரானேயாம்,—அஃது இன்றுமுளது - அத்தேரின்றைக்கு மிருக்கின்றது,—தரணியிற் சந்தானகுரவர் நால்வர்க்கு அருள் செய் - திருநந்திதேவர்முதலிய எட்டுச் சந்தான குரவர்களுக் குள்ளே இப்பூமியிலே திருவவதாரஞ் செய்தருளிய மெய்கண்ட தேவர், அருணந்திசிவாசாரியர், மறைஞானசம்பந்த சிவாசாரி யர், உமாபதிசிவாசாரியரென்னும் சந்தானகுரவர் நால்வர்களுக் கும் பூரணானுக்கிரகஞ் செய்தருளிய,—சாந்தநாயகிசமேத. எ-று.

சந்தானகுரவ ரெண்மர்களுக்குள்ளே திருநந்திதேவர், சனற்குமார மகாமுனிவர், சத்தியஞான தரிசனிகள், பரஞ் சோதிமகாமுனிவர் என்னுமிந்நால்வரும் இப்பூமியிலே திருவவ தாரஞ் செய்யாமற் கயிலாயகிரியிலே யிருந்தபடி பரமுத்தியை யடைந்தாராதலினாலே இப்பூமியிலே திருவவதாரஞ் செய்தரு ளிய ஏனை நால்வரையுந் தரணியிற் சந்தான குரவரென விசே டித்துக் கூறினரென வறிக. அதற்பின் என்பதை வருஞ்செய் யுண்முதலோடு கூட்டிப் பொருளுரைத்துக்கொள்க. (எ0)

## வேதவன ஆதீன கர்த்தர்கள்.

அளமார் தருங்கடற் பொருவில்வே தாரணிய
வாதீன கர்த்தராவா
ரரியயாழ்ப் பாணத் துறும்வரணி கரணவா

யமர்சைவ திலகரன்றே
குளமார் தருங்கனற் கண்ணந்தி வண்ணனுறை
கோதில்கே தாரநின்றுங்
குணநிதி குளக்கோட்டு நிருபன்முன் கொடுவந்த
குரவரிவர் கூர்த்தவறிவின்
வளமார் தருஞ்சைவ சித்தாந்த நன்னிலை
வழாவருட் செல்வர்வேத
வனமுதலை யாழைப் பழித்தமொழி யம்மையொடு
வழிபட்டு வாழநீரார்
தளமார் கருங்குழலி னழகார் தருங்கலுவ
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். அதன்பின் அளம் ஆர்தருங் கடற் பொருவில் வேதாரணிய ஆதீன கர்த்தராவார் - தில்லைநாத தம்பிரான்காலமாகிய அதன்பின்னர் உப்பளம்பொருந்திய கடற்கரையின்கண்ணுள்ள நிகரற்ற வேதாரணியேசுவரரது கோயிலின் ஆதீன கர்த்தராவார் யாரெனில்,— அரிய யாழ்ப்பாணத்து உறும் வரணி கரணவாய் அமர் சைவதிலகர் அன்றே - பாவச்செயல் சிறிதுமில்லாத யாழ்ப்பாணத்திலுள்ள வரணி கரணவாயென்னுமூரிலிருக்கின்ற சைவகுருதிலகர் தாமல்லரோ,— குளமார் தருங் கனற் கண் அந்திவண்ணன் உறைகோதில் கேதாரநின்றும் - நெற்றியிற்பொருந்திய அக்கினிக்கண்ணையும் அந்திக்காலத்துச் செவ்வானத்தினிறத்தையுமுடைய சிவபெருமான் கயிலாயகிரிக்கு இரண்டாவது தானமாகக்கோயில்கொண்டு வீற்றிருக்கின்ற ஒரு குற்றமுமற்ற திருக்கேதாரத்தினின்றும்,— குணநிதி குளக்கோட்டு நிருபன்முன் கொடுவந்த குரவர் இவர் - நற்குணம் வதியப்பெற்ற (திருக்கோணமலைத் திருப்பணிசெய்த) குளக்கோட்டு

மகாராசா முன்னரே அழைத்துக் கொணர்ந்த சைவகுருதிலகர்கள் இவர்களேயாம்,—கூர்த்த அறிவின் வளமார்தருஞ் சைவசித்தாந்த நன்னிலே வழா அருட்செல்வர் - இன்னும் கூரிய அறிவினாலே பதிபசுபாசமென்னும் திரிபதார்த்தங்களின் வளம்பொருந்திய சைவசித்தாந்தத்தின் உண்மைநிலையைக் கற்றுத்தெளிந்து அதனொழுக்க நிலையினின்றும் தவறாத திருவருட்செல்வருமாம்,—வேதவன முதலே யாழைப் பழித்தமொழியம்மையோடு வழிபட்டு வாழும் நீரார் - வேதாரணியேசுவரரை அவர் திருவருட்சத்தியாகிய வீணைகான வித்தூஷணியம்மையோடு மனவாக்குக்காயங்களான் வழிபட்டுப் பத்திநெறி முத்திநெறியிலே வாழும் நீர்மையையுடையவர்களும் இவர்களேயாம்,—தளமார் கருங்குழலின் அழகார்தருங் கலுவ - பூவிதழ்பொருந்திய கரிய திருக்கூந்தலின் பேரழகு நிறைந்த கலுவக்குறிச்சியி லெழுந்தருளியிருக்கும்,—சாந்த நாயகிசமேத. எ - று. (எக)

## யாழ்ப்பாணத்துப் பண்டைவித்துவான்கள்.

தேடரிய பரராச சேகரன் செகராச
  சேகரன் செயகேசரி
செப்புசின் னத்தம்பி நாவலன் சேனாதி
  ராயமா முதலியார்சீர்
பாடரிய வரராச பண்டிதன் மயில்வாக
  னப்பெயர்ப் பாவலனியாம்
பரவுசர வணமுத்து வித்துவான் வேன்முதலி
  படிறில்சம் பந்தமைந்தன்
நாடரிய முத்துக் குமாரநா மன்சீர்த்தி
  நாட்டுசங் கரபண்டித
னவிலும்பிவ ரும்பிறரு மீண்டுசெந் தமிழ்நிறீஇ
  நல்லிசை நடாத்தத்தமர்

தாடருமு பாயநீ தந்துதவ வந்தனஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தேடரிய பரராச சேகரன் - எங்குந்தம்மைப்போ லப் பிறரொருவரைத் தேடிக் கோடற்கரிய யாழ்ப்பாணத்து நல்லூர்ப் பரராசசேகர மகாராசாவும்,—செகராச சேகரன் - இவர் தம்பியாகிய செகராசசேகர மகாராசாவும்,—செயகேசரி - இவ்விருவர்க்கும் மருகரும் இரகுவம்சமென்னுங் காவியத்தைத் தமிழில் மொழிபெயர்த் தியற்றினவருமாகிய கல்விவெற்றி கவி வெற்றிகளிற்சிறந்த அரசகேசரி மகாராசாவும்,—செப்பு சின் னத்தம்பிநாவலன் - மறைசையந்தாதி, கல்வளையமகவந்தாதி முதலிய பிரபந்தங்களைப்பாடிய நல்லூர்ச் சின்னத்தம்பிநாவல ரும்,—சேனாதிராயமாமுதலியார் - நல்லைவெண்பா முதலிய அநேகபிரபந்தங்களைப்பாடிய இருபாலை மகாகவியாகிய சேனாதி ராயமாமுதலியாரும்,—சீர் பாடரிய வரராசபண்டிதன் - சிவ ராத்திரிபுராணம் முதலிய அநேக நூல்களைப்பாடிய தமதுகீர்த்தி நம்போல்பவராற் பாடமுடியாத சுன்னாகத்து வரராசபண்டித ரும்,—மயில்வாகனப் பெயர்ப்பாவலன் - புலியூர்யமகவந்தாதி, பள்ளுமுதலிய பிரபந்தங்களைப்பாடிய மாதகன் மயில்வாகனப் புலவரும்,—யாம் பரவு சரவணமுத்துவித்துவான் - நாந் துதிக் கத்தகுந்த வேதாந்தசுயஞ்சோதி முதலிய பிரபந்தங்களைச் செய்த நல்லூர்ச் சரவணமுத்துப் புலவரும்,—வேள்முதலி - நல்லூர் செட்டித்தெரு வேலாயுதமுதலியாரவர்களும்,—படிறு இல் சம்பந்த மைந்தன் - மாணாக்கர்களுக்கு மெய்ப்பொருளை யொழித்துப் பொய்ப்பொருளை வஞ்சித்துக்கற்பிக்கும் வஞ்சகத் தினைத்துணையேனும் இல்லாத அவ்வேலாயுத முதலியாருடைய புத்திரராகிய சம்பந்தப்புதல்வரும்,—நாடரிய முத்துக்குமார நாமன் - யாழ்ப்பாணமாகிய நாட்டுக்கு மிகவுங் கிடைத்தற்

கருமையையுடைய கிறிஸ்துமத கண்டனமாகிய ஞானக்கும்மி முதலிய அநேக பிரபந்தங்களைச்செய்த சுன்னாகத்து முத்துக் குமாரரென்னும் பெயரையுடைய கவிராயரும்,—சீர்த்திநாட்டு சங்கரபண்டிதன்-இச்சுன்னாகத்திலவதரித்துச் சமஸ்கிருத வியுற் பத்திமானாகித் தம் மிகுபுகழை இந்தியாவிலும் நிலைநிறுத்திய நீர் வேலிச் சங்கரபண்டிதருமாகிய,—நவிலும் இவரும் பிறரும் ஈண்டு செந்தமிழ்நிறீஇ நல்லிசை நடாத்து உத்தமர் - இவர்க ளும் இவர்களைப்போன்ற புலோலிக்கணபதிப்பண்டிதர் முத லிய அநேகவித்துவான்களும் இவ்வியாழ்ப்பாணத்திலே செந் தமிழ்மொழியைப்பரப்பி நிலைநிறுத்தி நல்லகீர்த்தியை எங்கும் பரவச்செய்த உத்தமோத்தம புருஷர்களாம்,—தாள்தரும் உபா யம் நீ தந்து உதவ வந்தனம் - தேவரீருடைய திருவடிகளைத் தமியேனுக்குத் தந்தருளுதற் கேதுவாகிய உபாயமெதுவோ அதனையுந் தேவரீரே தமியேனுக்குத் தந்து உதவும்வண்ணம் அநேக நமஸ்காரம் அநேக நமஸ்காரம்,—சாந்தநாயகி சமேத. எ - று. (௭௨)

## யாழ்ப்பாணச்சைவப்பிரகாச வித்தியாசாலை முதலியன.

ஆதியிலொர் சைவப்ர காசவித் யாசாலை
யாறுமுக நாவலர்தர
வாதித்த னிற்பல கலாகிரணம் வீசியஃ
தந்தகா ரமதாந்திடும்
சோதிவெகு மீனிற் றுலங்கிவே றும்பல
சுதேசகல் லூரிகளொடுகுந்
தூமசக டஞ்சூர னிந்த்ரஞா லத்திற்
சுலாவியல மந்துதுறுமும்
பேதியா தவரையும் பேதஞ்செய் கவிமுகில்கள்
பிரசங்க மழைபிலிற்றும்

பிரபல சிவாலயம் பிறரால யங்கள்பிற
　பெரிதுமரி திற்பிறங்கும்
சாதியா தன்புநிலை தவிர்வேளை யெதிர்வாய்சொல்
　சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஆதியிலொர் சைவப்ரகாச வித்தியாசாலை ஆறு முகநாவலர்தர - முதலிலே ஒரு சைவப்பிரகாச வித்தியாசாலையை வண்ணார்பண்ணைச் செட்டித்தெருவிலே ஆறுமுகநாவலர் உற்பத்திசெய்தருள,—அஃது ஆதித்தனிற் பல கலா கிரணம் வீசி அந்தகாரமது உந்திடும் - அவ்வித்தியாசாலையானது சூரியனைப்போலப் பலகலைகளாகிய கிரணங்களை வீசி அங்குள்ளவர்களது அறியாமையாகிய அந்தகாரத்தை ஓட்டாநிற்கின்றது,—சோதி வெகு மீனிற்றுலங்கி வேறும்பல சுதேசகல்லூரிகள் தொகும் - அச்சூரியனிற்குறைந்த ஒளியையுடைய அநேக நட்சத்திரங்களைப்போல விளங்கி வேறும் பற்பல சுதேச வித்தியாசாலைகள் தொகுதி தொகுதியாயிராநிற்கும்,—தூமசகடஞ் சூரனிந்த்ரஞாலத்திற் சுலாவி அலமந்து துறும் - புகைவண்டியானது சூரபன்மாவினுடைய இந்திரமாஞாலத்தைப்போல அதிசீக்கிரம் எங்குஞ் சுற்றிச் சுழன்றுவந்து அடிக்கடி முழங்கி நெருங்காநிற்கும்,—பேதியாதவரையும் பேதஞ்செய் கவிமுகில்கள் பிரசங்கமழை பிலிற்றும் - அசற்சமயநெறி முதலியவற்றினின்றும் வேறுபடாத அறிவிலிகளையும் அவ்விஷய நிலையினின்றுந் திருப்பி வேறுபடும்படி செய்கின்ற வித்துவான்களாகிய முகில்கள் உபந்நியாசங்களாகிய விடாமழையை வருஷியாநிற்கும்,—பிரபல சிவாலயம் பிறராலயங்கள் பிறபெரிதும் அரிதிற்றுலங்கும் - விசேஷ சிவாலயங்களும் மற்றை விநாயகர் முதலிய கடவுளராலயங்களும் பிறவும் மிகவும் அருமையை யுடையனவாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கும்.—அன்புநிலை சாதியாது

தவிர்வேனை எதிர்வாய் கொல் - தேவரீருக்குச்செய்யும் பத்தி நிலையை உறுதியுறச் சாதியாமல் அதனைத் தவிர்ந்த தமியேனுக்கு தேவரீர் எதிர்ப்படுவீர்கொல்லோ,—சாந்தநாயகி சமேத. எ - று. (எரு)

## வீணுகானபுரவாசிகள் விசேடம்.

சிவஞான சாதனம தாஞ்சைவ தீக்கைதஞ்
  சேமநிதி யிற்கொண்டுளோர்
சிவபூசை செயுமுன் மருந்தேனு முட்கொளாச்
  சிலர்சிறு விலைசிறிதிலார்
அவஞான மிலர்சைவ சித்தாந்த ஞானமே
  யாருயிரி ளேனும்புமறிஞ
ரறுமுகத் தெந்தைகந் தப்புரா ணம்பிறவு
  மாண்டுக டொறும்படிப்போர்
நவமான விபரீத நடைகள்கிஞ் சித்தின்றி
  நகுகணைக் காலுமொருவர்
நாடொறு நன்மான மனையோ ரொருத்தியொடு
  நன்கில் லறந்நடவுவோர்
தவஞான தகவான பவமேனு மொன்றருடி
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். சிவஞான சாதனமதாஞ் சைவதீக்கை தஞ்சேம நிதியிற் கொண்டுளோர் - யாழ்ப்பாணவாசிகள் சிவஞானமாகிய சாத்தியத்திற்குச் சாதனமாயுள்ள சமயவிசேடநிர்வாணமென் னுஞ் சிவதீக்கைகளை ஆபத்துக்குதவும்படி புதைத்துக்காவல் செய்துவைத்த திரவியங்களைப்போலத் தம் மிளமைக்காலந் தொடுத்துக் கைக்கொண் டொழுகுபவர்கள்,—சிவபூசைசெயு

முன் மருந்தேனும் உட்கொளாச்சீலர் - தாஞ் சிவபூசை செய் தற்குமுன்னமே ஔஷதத்தையேனும் உட்கொண்டறியாத நல் லொழுக்கத்தை யுடையவர்கள்,—சிறுவிலை சிறிதிலார் - எக்கா லத்தும் பஞ்சமென்பதைச் சிறிது மறியாதவர்கள்,—அவஞான மிலர் - மாயாவாதம்முதலிய சமயங்களின் பயனற்ற ஞானங் களை யுடையவரல்லாதவர்கள்,—சைவசித்தாந்தமே ஆருயிரின் ஓம்பும் அறிஞர் - சைவசித்தாந்த சமயஞானத்தையே அருமை யான உயிரைப்போலக்கொண்டு பாதுகாக்கும் உண்மையறி வினையுடையவர்கள்,—அறுமுகத் தெந்தை கந்தப்புராணம் பிற வும் ஆண்டுகள்தொறும் படிப்போர் - எம்பரமபிதாவாகிய சண் முகக்கடவுளது கந்தபுராணம், திருத்தொண்டர் பெரியபுரா ணம், கோயிற்புராணம், திருவிளையாடற்புராணம், காசிகண்டம், திருவாதவூரடிகள்புராணம் முதலிய சிவபுராணங்களையும் இவை போல்வன பிறவற்றையும் வருடந்தோறும் சிவாலய விநாயக ராலய சுப்பிரமணியாலயம் முதலிய ஆலயங்களினுந் திருமடங் களினுந் தமது சுத்த கிருகங்களினும் படித்துக்கேட்கும் நியம விரதத்தையுடையவர்கள்,—நவமான விபரீத நடைகள் கிஞ்சித் தின்றி - தற்காலத்துத் தலைப்படும் புதிதான விபரீத ஒழுக்கங் கள் ஒரு சிறிதுமேயில்லாமல்,—நகு கணைக்காலும் ஒருவர் நாடொணு நன்மான மனையோர் ஒருத்தியொடு நன்கு இல்லறம் நடவுவோர் - விளங்குகின்ற கணைக்காறன்னையும் மற்றொருநாட வர் பார்க்கமுடியாத நல்ல மானத்தையுடைய விதிப்படி விவா கஞ்செய்த தத்தமபத்தினி ஒவ்வொருத்தியோடு கூடி மிருதி முதலிய நூலிற்கூறிய விதிப்படி நன்கிதாகக் கிருகஸ்தாச்சிர மத்தை யனுட்டித்தொழுகும் இயல்புடையவர்கள்,—தவஞான தகவான பவமேனும் ஒன்றருள்தி - தேவரீர் தமியேனுக்கு இம்மையில் முத்தியைத் தாராதொழியினும் மிகவுஞ் சிவஞானத் தைப்பெறுந் தகுதியையுடைய ஓர் சற்சனனத்தையாவது மறு மையிலே தந்தருளும்,—சாந்தநாயகி சமேத. எ - று.

சிறுவிலை - பஞ்சம்.        (எச)

## யாழ்ப்பாணத்து வைத்தியர் முதலாயினோர்.

வைத்திய ரகத்தியரொ டொத்தவர் திருக்கணிதர்
வரருசி யினும்வல்லவர்
வாக்கியசி லாக்கியர்செய் பாக்கிய மியார்க்குமிலை
வல்லர்குரு மார்மூன்றினும்
தைத்திரிய சம்பன்ன ரும்பின்ன வர்ப்பேணு
தாழ்விலார் சைவர்தமியர்
தாவில்கம் மியர்களை வருநுட்ப கைத்தொழிற்
சாதுரிய ராடம்பரப்
பைத்தியர்க ளல்லிரு பாலினரு மீண்டுள
பதார்த்தங்க ளதிகுணபலம்
படுகருங் கூவலும் பண்டுகுதி கொண்டுகிளர்
பாதாள கங்கைபகரிற்
சைத்தியமொ டட்டணஞ்ச மமியாழ்ப் பாணமுயர்
சாந்தநா யகிரமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். வைத்தியர் அகத்தியரொடு ஒத்தவர் - இவ்வியாழ்ப்பாண சுதேச வைத்தியர்கள் அவ்வைத்திய விஷயமொன்றின் மாத்திரம் அகத்தியமுனிவரோடொருவாறு சமத்துவமுடையவர்,—திருக்கணிதர் வரருசியினும் வல்லவர்-திருக்கணித சோதிடர்கள் தஞ்சாவூரரண்மனைச் சோதிட வித்துவானுகி முன்னிருந்த வரருசியினும்பார்க்க வல்லபமுடையவர்,—வாக்கிய சிலாக்கியர் செய்பாக்கியம் யார்க்குமிலை - வாக்கிய சோதிட சிலாக்கியர் செய்யும் பாக்கியம் மற்றெருருவருக்குமில்லை,—குருமார் மூன்றினும்வல்லர் - யாழ்ப்பாணத்துக் குருமார் மந்திரம்பாவனைகிரியை யென்னும் மூன்றினும் ஒருங்கு

வல்லவர்,—தைத்திரிய சம்பன்னரும் பின்னவர்ப்பேணு தாழ் விலார் - தைத்திரியம் முதலிய வேதங்களைத் தமக்குச் செல்வ மாகவுடைய ஆதிவருணத்தவர்களாகிய பிராமணர்களும் தம்மிற் பிந்திய வருணத்தவர்களாகிய க்ஷத்திரிய வைசிய சூத்திரர்க ளும் பிறசாதியாருமாயுள்ள தாழ்ந்த வருணத்தவரின்கீழிருந்து உத்தியோகஞ்செய்து சேவித்துச் சீவிக்கும் எளிமையுடையவ ரல்லர்,—சைவர் தமியர் - சைவர்கள் கலப்புச்சைவர்களல்லாத தனிச்சைவர்கள்,—தாவில் கம்மியர்கள் ஐவரும் நுட்பக் கைத் தொழிற் சாதுரியர் - கேடற்ற பஞ்சகம்மாளர்களும் நுட்பமா கிய தத்தஞ் சித்திரக் கைத்தொழிற் சாமர்த்திய முடையவர் கள்,—ஈண்டுள இருபாலினரும் ஆடம்பரப் பைத்தியர்களல் லர் - ஆண்பெண் என்னுமிருபாலாரும் தம்மை மிகவுமலங்கரித் துக்கொள்ளும் பயனற்ற இடம்பத்தைச் செய்யும் பைத்திய முடையவரல்லர்,—பதார்த்தங்கள் அதிகுணபலம் - இங்கே யுள்ள நென்முதலிய தானியவகைகளும் ஏனைக் காய்கனிமுத லிய பதார்த்தவகைகளும் தம்மை யுட்கொள்பவர்களுக்கு நற் குணபலஞ் சரீரபலங்களைக் கொடுப்பனவாம்,—படுகருங் கூவ லும் பண்டுகுதி கொண்டுகிளர் பாதாளகங்கை - இங்குள்ள நீர் நிலைகளும் கிணறுகளும் ஆதிகாலந்தொட்டுக் குதிகொண்டு மேலே கிளருகின்ற பாதாளகங்காதீர்த்தமேயாம்,—(இது தக்ஷி ணகைலாய மான்மியத்திற் கண்டது); பகரில் யாழ்ப்பாணம் சைத்தியமொடுட்டணம்சமம் - இன்னுமிங்குள்ள விசேடத்தைக் குறித்து நாஞ் சொல்லுமிடத்து யாழ்ப்பாணமானது சீதோட்ட ணங்களினாலே ஏனைத்தேயங்கள் போலாகாது தம்முட்சமத் துவமுடையதாம்,—சாந்தநாயகி சமேத. எ - று. (எரு)

தொண்டைமான் மகள்வயிற் றோன்றியகலாப்பிலி
 தொலைத்தலவ ணமுமிவணதேற்
சொல்லுந் தரத்தவன் றிங்குள்ள பல்பொருட்
 சுவைவீ றியஞ்சுகங்கள்

தொண்டைமா ஞறென்னு மடையுமடை கொளியு
  தோற்றத்த வென்பர்தொல்லோர் [மித்
சொல்செல்வர் சந்நிதியில் வாற்றின்மூ லத்தயற்
  றுன்னியரு ளேசொரிதரும்
பண்டைநாட் காசியம் பதிநின் றிவட்குறுகு
  பனவர்தமை மீண்டிடாமற்
பண்ணியது மீண்டைப் பதார்த்தமே மாதங்க
  பதமோத மாதியுமிலை
சண்டன்வெ குண்டுமிண் டும்போ தடைக்கலஞ்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தொண்டைமான் மகள்வயிற் ரேன்றியகலாப் பிணிதொலைத்த லவணமும் இவணதேல் - இந்தியாவிலுள்ள தொண்டைமானென்னு மரசனுடைய மகளினது வயிற்றிலே உற்பத்தியாகி விட்டுநீங்காத குன்மநோயை நிவிர்த்திசெய்த உப்பும் இவ்வியாழ்ப்பாணத்தின்கண்ணுள்ள உப்பாயின்,—இங்குள்ள பல்பொருட் சுவை வீரியம் சுகங்கள் சொல்லுந் தரத்தவன்று - இங்கேயுள்ள பதார்த்தங்களினது சுவையும் வீரியமுஞ் சுகமும் நம்மால் வரையறுத்துச் சொல்லப்படும் அளவினையுடைய வல்லவாம்,—தொண்டைமாறுறென்னும் அடையும் அடைகொளியும் இத்தோற்றத்த வென்பர் தொல்லோர் - தொண்டைமாறுறென்னுந் தொடர்மொழியிலே தொண்டைமானென்னும் விசேடணமும் ஆறென்னும் விசேடியமும் இக்காரணத்தா லுற்பத்தியாயினவென்று சொல்லுவர் முன்னுள்ள பெரியோர்கள்,—சொல் செல்வர் சந்நிதி இவ்வாற்றின் மூலத்து அயல் துன்னி அருளேசொரிதரும் - விதந்து சொல்லப்படும் சுப்பிரமணியக்கடவுளாகிய அருட்செல்வரது கோயிற் சந்நிதி

யானது இத்தொண்டைமாறுற்றின் தொடக்கத்தி னருகே யிருந்து தன்னை வழிபடும் அடியாருக்கு அனுக்கிரகமாகிய மழையை எப்போதுஞ் சொரிந்துகொண்டேயிருக்கும்.—(செல்வர் சந்நிதி யென்பது இக்காலத்துச் செல்வச்சந்நிதியென மரீஇயிற்று.) பண்டைநாள் காசியம்பதிநின்று இவட் குறுகுபனவர் தமை மீண்டிடாமல் பண்ணியதும் ஈண்டைப் பதார்த்தமே - பூர்வகாலத்திலே காசித்திருப்பதியினின்றும் கதிரைமலைக்கு யாத்திராமார்க்கமாகப் போய்த் திரும்பிவந்து இவ்வியாழ்ப்பாணத்திலே சுன்னுகமென்னும் ஊரையடைந்த அரங்கநாதர், பெரியமனத்துளார், சின்னமனத்துள்ளார் என்னும் அக்காசித் திருப்பதிப் பிராமணர்களை இவ்விடத்தினின்றுந் திரும்பிக் காசித்திருப் பதிக்குப் போகவிடாமற் றடுத்து இங்கே குடியிருத்தி வைத்தவைகளும் இங்குள்ள பதார்த்தங்களின் வீரிய சுகங்களேயாம்,—மாதங்க பதம் ஓதம் ஆதியுமில்லை - இதுவன்றியும் இங்குள்ள மனிதர்களுக்கு யானைக்கால் ஓதம் முதலிய விபரீத நோய்களுஞ் சிறிதுமில்லையாம்,—சண்டன் வெகுண்டு மிண்டும் போதடைக்கலம் - யமனானவன் என்மேற் கோபங்கொண்டுவந்து அதிக்கிரமித்து நெருங்கும் மரணதருணத்துச் சுவாமீ! தேவரீருக்குத் தமியேனடைக்கலம் அடைக்கலம்,—சாந்தநாயகி சமேத. எ - று.　　(எகூ)

## நல்லூர், திருநெல்வேலி.

பொற்புமிகு நல்லூ ரிருந்தியாழ்ப் பாணம்
　புரந்தபுர வலர்பலர்திருப்
புகழ்பெற்ற திருநல்லை யரசகே சரிமுன்
　புகன்றரகு வமிசநூலின்
அற்புதச் செந்தமிழ்த் தொடைநடையை யாவரே
　யறிகிலா ரருநவரச
மாங்காங் கமைந்திடமு னிங்கிருந் தேநூல்க

ளாக்கினோ ரலகிலாதோர்
சிற்பர சிவாகமர் சித்தியுரை முதலசில
செய்திருநெல் வேலிவாசன்
சிவஞானப் பிரகாச முனியும்யாழ்ப் பாணத்
திருத்துறவி களிலொருவனாற்
றற்பர நிகம்பர சுதந்தர நிரந்தரநல்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பொற்புமிகும் நல்லூர் இருந்து யாழ்ப்பாணம் புரந்த புரவலர் பலர் - கல்வியறிவொழுக்கங்களினுன் மேம்பட்ட நல்லூரை இராசதானியாகக் கொண்டிருந்து யாழ்ப்பாணமாகிய நாட்டை அரசாட்சிசெய்து பாதுகாத்துவந்த சோழபுத்திரராகிய சிங்கையாரியச் சக்கிரவர்த்தியும், அவருடைய சந்ததியின்கண்ணேயுள்ள சித்தாந்த சைவக்கொள்கையையுடைய தமிழரசர்களுமோ மிகப் பலராம்,—இந்நல்லை திருப்புகழ் பெற்றது - இந்நல்லூரானது அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழ்பெற்ற விசேடதலமாம்,—அரசகேசரி முன் புகன்ற ரகுவம்ச நூலின் அற்புதச் செந்தமிழ்த் தொடை நடையை யாவரே யறிகிலார் - இந்நல்லூரின்கண்ணிருந்த க்ஷத்திரியராகிய அரசகேசரி யென்னும் மகாவித்துவான் முன்னரே பாடிய ரகுவம்சமென்னுங் காவியநூலின் ஆச்சரியகரமாகிய செந்தமிழ்த்தொடைப் பிரயோகநடையைக் கல்விமான்களுள் யாவர்தாமறியாதவர்,—அருநவரசம் ஆங்காங்கமைந்திட முன் ஈங்கிருந்து நூல்களாக்கினோர் அலகிலாதார் - அருமையாகிய மெய்ப்பாடு முதலிய நவரசங்களும் அங்கங்கே அமையாநிற்பப் பூர்வகாலந்தொடுத் திவ்வியாழ்ப்பாணத்தி லிருந்துகொண்டு அநேகம் பிரபந்தங்களைப் பாடின வித்துவான்களோ அளவிறந்

தவர்களாம்,—சிற்பர சிவாகமச் சித்தியுரை முதல சில செய் திருநெல்வேலி வாசன் சிவஞானப்பிரகாசமுனியும் யாழ்ப்பா ணத் திருத்துறவிகளில் ஒருவனால் - ஞானநீதராகிய சிவபெரு மானருளிச்செய்த இருபத்தெட்டுச் சைவாகமங்களின் ஞான காண்டப் பொருட்சாரங்களை யெல்லாம் முழுவதுந் தழுவிய சிவஞானசித்தியாரென்னுஞ் சித்தாந்த சாத்திரத்துக்கு உரை முதலிய சிலவற்றைச் செய்தருளிய இங்குள்ள திருநெல்வேலி வாசராகிய மேற்கூறிய சிவஞானப்பிரகாச முனிவரும் யாழ்ப் பாணத்துள்ள அநேகந் திருத்துறவிகளில் ஒருவராகும்,— தற்பர - ஆன்மாவுக்கு மேம்பட்டவரே,—திகம்பர - திக்கை ஆடையாகவுடையவரே,—சுதந்தர - தம் வயமுடையவரே,— நிரந்தர - எங்கும் நிறைந்தவரே,—நல் சாந்தநாயகிசமேத. எ-று.

## நல்லூர்ச் சுப்பிரமணியராலயம்.

கொழிதமிழ்க் கொருவனும் பரராச சேகரன்
　குலமுத லமைச்சனாகிக்
குலவுபுவ னேகவா கிந்நல்லை தன்னிலொரு
　குகனா லயஞ்சமைத்தான் [ளோர்
விழிதமிற் கண்டுளோர் மொழிசெவிக் கொண்டு
　வீடிறுதி நான்குறுதியும்
விரவுமா திருமுருக னாறுதலமொ டிந்நல்லை
　விதியினேழ் தலமாமிவட்
கழிதகக் கருணைபுரி காரணத் தாற்கொலோ
　கலியுகநல் வரதனானன்
கண்ணுறத் தேருற்ச வங்கண்டு தொழுதுளோர்
　கண்டுளோர் பிறவிக்கரை
தழியவத் துவசுத்தி போலுமித் தரிசனஞ்
　சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். கொழிதமிழ்க்கொருவனும் பரராச சேகரன் - தமிழ்ப்பாஷையினின்றும் அகத்திய முனிவரால் வழூஉச் சொற் களைக்களைந்து கொழித்தெடுக்கப்பட்ட செந்தமிழுக்கு இவ னொருவன் மாத்திரமே சிறந்தவனென்று விதந்தெடுத்துப் பேசத்தக்க பரராசசேகர மகாராசாவினது,—குலமுத லமைச்ச னகிக்குலவு புவனேகவாகு - இராசமுற்சந்ததிக்கு முன்னொரு காலத்திலே முதன்மந்திரியாகி விளங்கிய மதுரைப் பிராமணரா யுள்ள புவனேகவாகு என்பவர்,—இந்நல்லை தன்னில் விழிதமிற் கண்டுளோர் மொழிசெவிக் கொண்டுளோர் வீடிறுதி நான்கு உறுதியும் விரவுமா ஒரு குகனாலயஞ் சமைத்தான் - தாம் குடி யிருக்கு மிந்நல்லூரிலே கண்களாற் றரிசித்தவரும் தரிசித்த பிறர் சொல்லக்கேட்டவர்களுமாகிய அனைவரும் வீட்டை இறு தியாகவுடைய அறம்பொருளின்ப மென்னும் நான்குறுதிப் பொருள்களையுந் தப்பாதடையுமாறு பரோபகாரங்கருதி ஒரு சுப்பிரமணியாலயத்தைக் கட்டுவித்தருளினர்,—இந்நல்லை திரு முருகனறுதலமொடு விதியின் எழ்தலமாம்-ஆதலினாலே இந்நல் லூரானது சுப்பிரமணியக் கடவுளினுடைய திருப்பரங்குன்று முதலிய திருப்படை வீடுகளாறனோடு விதிப்படி ஏழாவது திருப்படைவீடாக வழங்கப்படுதற்குரிய மகிமையை யுடை யது,—இவண் கழிதகக் கருணைபுரி காரணத்தாற்கொலோ கலியுக நல்வரதனானன் - இவ்விடத்தெழுந்தருளி யிருந்து கொண்டு, இறப்பவும் மிகுதி பொருந்தத் தம்மை வழிபடும் அடியார்களுக்குத் திருவருள் சுரத்தலினாற்போலும் கலியுக வரதர் என்னும் நல்ல திருநாமத்தை அச் சுப்பிரமணியக்கடவுள் பெற்றருளினர்,—கண்ணுறத் தேருற்சவங்கண்டு தொழுது ளோர் பிறவிக்கரை கண்டுளோர் - இங்கே இவ்விரதோற்சவத் தைக் கண்ணாரத் தரிசித்து வழிபட்டவர் யாவராயினும், அவர்

சனன சாகரக்கரையைக் கண்டவரே யாவர்,—இத்தரிசனம் தழிய அத்துவசுத்திபோலும் - இவ்விரதோற்சவ தரிசனம் சைவாகமங்களிற் கூறப்படும் மந்திராத்துவ முதலிய சடத்துவாக்களைச்சுத்தி செய்தலாகிய நிர்வாண தீக்ஷையைப்போல ஆன்மாக்களை நிர்மலஞ் செய்வதாம்,—சாந்தநாயகி சமேத. எ-று.

சடத்துவாக்களாவன; மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணத்துவா, புவனத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்பனவாம். (எஅ).

மற்றுமிந் நல்லைத் தலத்தின் விசேடங்கள்
வாயின் வழங்கமுடியுமோ
வருகால மாறினுந் திருவருள் விலாசமோ
வஞ்சர்நெஞ் சையுமுருக்கி
உற்றவரை முன்னும்பா முற்றிலோ மேயென
வுளநெருந் திடச்செய்துமே
னுன்னியாங் குன்னிய வரங்களெல் லாமுதவி
யுறுகிலா ரையுமுறுத்தும்
நற்றவத் தொண்டர்தம தழகுதோத் திரவழகு
நாடவரு வோர்தமழகு
நந்தன வனத்தழகு நால்வீதி யழகோங்கி
நளிர்பந்த ரழகிவைகளிற்
சற்றலத் திருவருள் விலாசமே காணலாஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மற்றுமிந் நல்லைத்தலத்தின் விசேடங்கள் வாயின் வழங்கமுடியுமோ - வேறும் இந்நல்லூர்ச் சுப்பிரமணியதலத்தின்

மகா விசேடங்களைச் சிற்றறிவையுடைய என்புல்லிய வாயி ஞலே முழுவதுஞ் சொல்லமுடியுமோ,—வருகாலமாறினுந் திரு வருள்விலாசமோ வஞ்சர் நெஞ்சையுமுருக்கி - தினந்தோறும் செய்யப்படும் பூசாகால மாறினும் அக்கடவுளது திருவருள் விலாசமானதோ தம்மைத் தரிசித்த வஞ்சகம் முதலிய குற்றங் களையுடையவரது மனங்களையும் நெக்குநெக்குருகச்செய்து,— உற்றவரை முன்னும் யாம் உற்றிலோமேயென உளம்நொந்தி டச் செய்து - இத்தலத்திற்குத் தரிசனத்தின்பொருட்டு முதலி லொருகால் வந்தவரை அந்தோ அந்தோ இதற்குமுன்னும் யாமிங்கே வந்து தரிசித்தோமில்லையே யென்றுமனம் வருந் தும்படி செய்வதாயினும்,—மேல் உன்னியாங் குன்னிய வரங்க ளெல்லாமுதவி உறுகிலாரையு முறுத்தும் - பின்னவர் நினைத்த நினைத்த பிரகாரம் வரப்பேறுகளெல்லாவற்றையும் உபகரித்து இங்கே முன்னொருகாலமும் வராதவரையும் இவ்வந்தவரது வாய்க்கேட்பித்து அதிசீக்கிர மிங்கே வரச்செய்யும்,—நற்றவத் தொண்டர் தமது அழகு - எப்போது மிங்கிருந்துகொண்டு தொண்டுசெய்யுந் திருத்தொண்டர்களது சிவவேடப்பொலிவழ கும்,—நாட வருவோர்தம் அழகு - அடிக்கடி அயலூர்களி லிருந்து தரிசனஞ்செய்தற்கு வருவோரது பத்தியழகும்,— தோத்திரவழகு - இவ்விருதிறத்தினருஞ் சுவாமியைத் தோத் திரஞ்செய்கின்ற கந்தரலங்காரம், கந்தரனுபூதி முதலிய தோத் திரங்களின் இராகவோசையழகும்,—நந்தனவனத்தழகு - இத் திருக்கோயிலின் நந்தனவனத்தழகும்,—நால்வீதியழகு - நான்கு வீதிகளினுமுள்ள பரிசுத்தவழகும்,—நளிர்பந்தரழகு - உயர் ந்து குளிர்ந்திருக்கும் திருப்பந்தரின் கீற்றுவரிசையழகும் ஆகிய,—இவைகளிற் சற்றலத் திருவருள் விலாசமே காண லாம் - இன்னோரன்னவைகளிற் பெரிதும் சுப்பிரமணியக்கடவு ளது திருவருள்விலாசமானது எப்போதுஞ் சகசித்திருப்பதைப் பிரத்தியட்சமாகக் காணலாம்,—சாந்தநாயகிசமேத. எ - று. ()

## ஆறுமுகநாவல சற்குரு.

ஆறுமுக நாவல னெனுஞ்சபாப் பிரசங்க
　சிங்கமிங் கவதரித்த
தாருமறி வாரவன தறிவொழுக் கங்கல்வி
　யறிகிலார் யாதுமறியார்
தேறுமுக மொன்றிலேற் கறிவுசிறி தருள்செய்த
　தேசிகோத் தமனுமிவனே
செந்தமிழி னூலுரைக டந்ததிங் குரைசெயச்
　சேடனுன் முடிவதாமோ
நீறுமுக முறுவித் தருங்கண்டி கைக்கலனி
　னேயமிரு வித்தெங்கணு
நிகமாக மம்பூசை நிலைநிறீஇ விட்டதிவ
　னிமலப்ர சங்கநிதியே
சாறுதனு மாதத்தி னிற்பத்து வீறவருள்
　சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஆறுமுகநாவலனெனுஞ் சபாப் பிரசங்க சிங்கம் இங்கு அவதரித்தது ஆரும் அறிவார் - ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவல ரென்றெங்கும் பிரசித்திபெற்ற சபாப்பிரசங்க சிங்கவேறனவர் இந்நல்லூரின்கண்ணே அவதாரஞ் செய்தருளியதைத் தமிழ்த் தேயவாசிகளும் பிறருமாகிய அனைவருமறிவார்கள்,—அவனது அறிவு ஒழுக்கம் கல்வி யறிகிலார் யாதும் அறியார் - அந்நாவல ரது கல்வியறிவொழுக்கங்களை யறியாதவர் மற்றொன்றையு மறியாத மந்தமதியினரேயாம்,—தேறுமுக மொன்றிலேற்கு அறிவு சிறிது அருள்செய்த தேசிகோத்தமனுமிவனே - லௌ கீகவைதீகங்களைத் தெளிந்துகொள்ளும் வாயிலொன்று மற்ற

தமியேனுக்கும் இலக்கண விலக்கிய அறிவோடு திரிபதார்த்த அறிவையும் என்பக்குவத்திற்கேற்ப ஒரு சிறிதுபதேசித்தருளிய உத்தமோத்தம ஆசிரிய மூர்த்தியும் இந்நாவலரவர்களேயாம்,— செந்தமிழில் நூலுரைகள் தந்த திங்குரை செயச் சேடனுன் முடிவதாமோ - இவர்கள் செந்தமிழ்ப்பாஷையிலே செய்தருளிய நூல்கள் உரைகளது அருமை பெருமைகளை உள்ளபடி வரையறுத்துச் சொல்ல ஆயிரம் நாக்குக்களையுடைய ஆதிசேடனும் முடிவதாகுமோ,—நீறுமுக முறுவித்து - எங்கெங்குமுள்ளவர்களது நெற்றியில் நாடோறுந் தரிக்கப்படும் விபூதியை இடையறாது தரித்துத் துலங்கும்படி செய்வித்தும்,— அருங்கண்டிகைக் கலனின்நேயம் மிகுவித்து - உருத்திராட்ச வடமாகிய அரிய ஆபரணத்திலே சிரத்தையை மிகுவித்தும்,—எங்கணும் நிகமாகமம் பூசை நிலை நிறீஇவிட்டது இவன் நிமலப்ரசங்கநிதியே - வேதாகமங்களையும் அவற்றிற் பிரதி பாதிக்கப்பட்ட சிவபூசையையும் உலகெங்கும் நிலைநிறுத்திவிட்டதும் இச் சற்குருவினுடைய சொற்குற்றம் பொருட்குற்றங்களற்ற நிர்மலமாகிய பிரசங்கமென்னும் சலநிதியாகிய சமுத்திரமேயாம்,— தனுமாதத்தினிற்சாறு பத்து வீற அருள் - சுவாமீ! மார்கழி மாதத்துச் செய்யப்படும் பத்துத்தின மகோற்சவங்களுந் தமியேங்கள்பொருட்டு முன்னையினும் பார்க்க விருத்தியடையும்படி பூரணானுக்கிரகஞ் செய்தருளும்,—சாந்தநாயகிசமேத.எ-று.

திருத்தொண்டரைச்சிவ மெனக்கொண் டவன்சைவ
சித்தாந்த சிகைகண்டவன்
சிவகாம சுந்தரி சபாநடே சன்பாத
சீர்த்திக ளெலாம்விண்டவன்
உருக்கொண்ட புண்ணியத் துயிரனன் றன்பெய
ருரூடியாக் கொண்டவழவன்
னுயர்தரத் தருமகல் லூரிபல் லூரினு
மொழுங்குற நடாத்துத்தமன்
செருக்கொண்ட யேசுமத மேங்குபு திடுக்கிடத்

திறல்கொண் டடர்த்ததீரன்
றிவ்யசிவ பூசா துரந்தரன் சமயகுரு
செல்மசை வத்துறவிதீத்
தருக்குண்ட தூர்ப்படா டோபநா வலரல்லர்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். திருத்தொண்டரைச் சிவமெனக் கொண்டவன் - இவ்வாறுமுகநாவலரவர்கள் உண்மைத் திருத்தொண்டர்களைச் சிவமாகப் பாவித்துக் கைக்கொண்டொழுகுபவர்,— சைவசித் தாந்த சிகைகண்டவன் - சிவஞானபோதம் முதலிய பதினான்கு சித்தாந்த சைவசாஸ்திரங்களின் முடிவை ஐயந்திரிபு அறி யாமை யென்னும் முக்குற்றங்களுமறத் திருவருளாற் கண் டறிந்தவர்,—சிவகாமசுந்தரி சபாநடேசன் பாதசீர்த்திகளெ லாம் விண்டவன் - ஸ்ரீ சிதம்பரத்திலெழுந்தருளியிருக்கின்ற சிவகாமசுந்தரியம்மை சிற்சபா நடேசமூர்த்திகளினுடைய சத்தி மகிமை சிவமகிமைகளைத் தாமியற்றிய பல நூல்களினாலும் உரைகளினாலும் பிரசங்கங்களினாலும் சதா வெளியிட்டவர்,— உருக்கொண்ட புண்ணியத் துயிரனோன் - சிவபுண்ணியங்கள் கரசரணாதி அவயவங்களையுடைய ஓர் வடிவங்கொள்ளுமே யாயின் அவ்வடிவத்தை யியக்கும் உயிர் இவர்போலும் என்று உலகம் சொல்லத்தகுந்தவர்,— தன்பெயர் உரூடியாக் கொண்ட உழவன் - தம்முடைய நாவலரென்னும் விசேடநாமத்தை யோகரூடியாகிய காரணக்குறியாக உலகங் கைக்கொள்ளத் தாமதனைப் பெற்றுக்கொண்ட தீரர்,—உயர்தரத் தருமகல்லூரி பல்லூரினும் ஒழுங்குற நடாத்து உத்தமன் - தொல்காப்பிய முதலிய உயர்தர இலக்கண இலக்கிய நூல்களைக் கற்பிக்கும் தரும வித்தியாசாலைகளைச் சிலதேயங்களினுள்ள பல வூர்களி னூர் தாபித்து அவைகளைத் தங்காலத்தும் பிற்காலத்தும் ஒழுங்

காக நடத்துவிக்கு முத்தமபுருஷர்,—செருக்கொண்ட யேசு மதம் எங்குபு திடுக்கிடத் திறல்கொண்டு அடர்த்த தீரன் - சைவ சமயத்தோடு பகைகொண்டு வாதப்போர்புரிந்த கிறீஸ்தவமதத்தை அம்மதானுசாரிகளேங்கித் திடுக்கிடும்படி திருவருள் வலிமை கல்விவலிமை சொற்சாதுரிய வலிமைகளாகிய படைக்கலங்களைக் கொண்டு அழித்தொழித்த தைரியபுருஷர்,—திவ்ய சிவபூசா துரந்தரன் - சைவாகமவிதிப்படி ஒருசிறிதுந் தவறாது விதிமார்க்கம் பத்திமார்க்கம் என்னு மிரண்டையுங் கருவியாகக் கொண்டு செயப்படும் உடையவர்சிவபூசையென்று விதந்து சொல்லப்படும் படிகலிங்கபூசா துரந்தரர்,—சமயகுரு - சுத்தாத்துவித சித்தாந்த சைவசமயக் குருமூர்த்தியாயுள்ளவர்,—சென்ம சைவத்துறவி - சித்தாந்தசைவ நைட்டிகப்பிரமசரிய நிலையை ஒரு சிறிதுந் தவறாது குறிக்கொண்டனுட்டிப்பவர்,—தீத்தருக்குண்ட தூர்ப்படாடோப நாவலரல்லர் - பொறாமையினாலே பிற மகான்களைத் தூஷிக்குங் கொடிய நாவலரும், தம்மினும் பார்க்கச் சித்தாந்த சைவநூலின்கண்ணே சிறந்தவர் பிறரொருவருமிலரென்று தற்புகழ்ச்சி செய்துகோடற்குக் காரணமாகிய செருக்கினால் விழுங்கப்பட்ட கெட்டநாவலரும், அனைவருந் தம்பாதத்திலே வந்து வீழ்ந்து தம்மை நன்கு மதிப்பிக்கச்செய்யவேண்டுமென்று உத்தேசித்துச் சிவவேடம்பூண்ட ஆடம்பர நாவலருமல்லர் இவ்வாறுமுகநாவலர் இக்குற்றங்களற்ற உண்மைநாவலரேயாம்,—சாந்தநாயகிசமேத. எ - று. யோகரூடி ரூடி எனத் தலைக்குறையாய் நின்றது. தருக்குண்ட நாவலர், தூர்நாவலர், படாடோபநாவலர் எனத் தனித்தனி கூட்டுக. (அக)

நாவலசற்குரு மருகரும், மாணக்கரும், வித்துவசிரோமணியுமாகிய பொன்னம்பலப்பிள்ளையவர்கள்.

பொன்னம் பலப்பெயர்ப் புட்கலா வர்த்தம்
புராதன நியாயோததி

புகழ்சங்க லக்கியப் புணரிரா மாயாணப்
பொருவறு மளக்கர்புவியிற்
றுன்னித் துலங்கிமலி சூதஞெலி மாலையாந்
தொல்பயோ ததிகாவியத்
துங்கவார் கலிபார தப்பரவை லக்கணத்
தொடுகடல்க டெய்த்தெழுந்தே
மின்னித் திடுக்கிட விடித்தியாழ்ப் பாணகிரி
மீதேறி நல்லைமுடிமேன்
மேவிப் படிந்துசெந் தமிழ்மேதை நிதிமாரி
மிகவும் பொழிந்திட்டதிச்
சன்மத்து வித்தியார்த் திப்பயிர் தழைத்திடச்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பொன்னம்பலப்பெயர்ப் புட்கலாவர்த்தம் - பொன்னம்பலமென்னும் பெயரையுடைய சொர்ணமழையை வருஷிக்கும் புட்கலாவர்த்தமென்னும் மேகமானது,— புராதன நியாயோததி - பழைய திருவள்ளுவர் முதலிய நீதிசாத்திர சமுத்திரமும்,—புகழ்சங்கலக்கியப் புணரி - புகழ்ந்துசொல்லப் படுஞ் சங்கவிலக்கிய சமுத்திரமும்,—ராமாயணப் பொருவறு மளக்கர் - கம்பராமாயணமென்னும் நிகரற்ற சமுத்திரமும்,— புவியிற் றுன்னித் துலங்கி மலி சூதஞெலிமாலையாந் தொல் பயோததி - இந்நிலவுலகத்திலே யெங்கும் பரந்து பிரகாசித்து நிறைந்த சிவபுராணமாகிய பழைய பாற் சமுத்திரமும்,—காவி யத் துங்க வார்கலி - இரகுவம்சமுதலாகிய உத்துங்கம் பொரு ந்திய காவிய சமுத்திரமும்,—பாரதப் பரவை-பாரத மகா சமுத் திரமும்,—லக்கணத் தொடு கடல்கள் துய்த்தெழுந்தே - தொல்

காப்பியம் முதலிய இலக்கணமுமாகிய படிப்பவராது அறியாமை யைத் தோண்டுஞ் சத்த சமுத்திரங்களையும் ஒருங்கு பருகிக் கொண்டெழுந்து,—மின்னித் திடுக்கிட இடித்து - இடை விடாது மின்னிப் புலவர்களாகிய யானைகள் திடுக்கிடும்படி பேரிடி யிடித்து,—யாழ்ப்பாணகிரிமீதேறி நல்லை முடிமேன் மேவிப்படிந்து - யாழ்ப்பாணமாகிய மலையின்மீதேறி நல்லூ ராகிய அம்மலையின் மேற்சிகரத்திற் சென்று படிந்து,—செந் தமிழ் மேதை நிதி மாரி மிகவும் பொழிந்திட்டது—செந்தமிழறி வுகளாகிய சொர்ணமழைகளை இறப்பவும் பொழிந்தது,—இச் சன்மத்து வித்தியார்த்திப் பயிர் தழைத்திட - இம்மனிதசன்மத் தின் கண்ணே மாணுக்கர்களாகிய செஞ்சாலிப்பயிர்கள் தழைத் தோங்கும் பொருட்டென்க,—சாந்தநாயகிசமேத. எ - று.

சூத னுலிமாலை - புராணம். மேதை - அறிவு. (அஉ)

## கார்த்திகேய நைட்டிகப் பிரமசாரி.

நைட்டிகப் பிரமசாரி யத்திற் பிதாமகனுேர்
நல்லருட் கன்னையென்னை
நானு விதக்கலை தெருட்டிவிடு குருமூர்த்தி
நாயினேற் கிருகண்மணி
தெவிட்டும் புராணங்க ளிற்சூத னிறைபொறைச்
செயலில்வாய் மையிலறத்தின்
சேயிலக் கணலக்கி யக்கடல் சிவாகமச்
செல்வனல் லைச்சேயடி
உவட்டும் பிறப்பிறப் பொழிதரச் சேவிக்கு
முத்தமன் கார்த்திகேய
வோசனுெளி மேவுகள பாதபது மங்களெ
னுளக்குளத் துண்மலர்தரும்
சமட்டிவிச் சாபுரத் தனிமா முதற்றலைவி

சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நைட்டிகப் பிரமசரியத்திற் பிதாமகன்—நைட்டிகப் பிரமசரிய நிலையிலே பீஷ்மாசாரியர்,—நல் அருட்கு ஓர் அன்னை-நல்ல அருளுக்கு ஒரு மாதா,—என்னை நாலுவிதக் கலை தெருட்டிவிடு குருமூர்த்தி - தமியேனைப் பல திறத்தனவாகிய நூல்களைக் கற்பித்துத் தெளிவித்த வித்தியா குரு மூர்த்தி,—நாயினேற்கு இருகண்மணி-நாயினிற் கடையாம் நாயேற்கு என்னிருகண்மணி,—தெவிட்டும் புராணங்களிற் சூதன் - படிப்பவரைக் கேட்பவரை மனத்திற் சந்தோஷ நிறைவிக்கின்ற புராணங்களிலே சூதமுனிவர்,—நிறை பொறைச் செயலில் வாய்மையில் அறத்தின் சேய் - அடக்கமும் பொறையுமாகிய செய்கைகளினும் உண்மை பேசுதலினும் தருமபுத்திரர்,—இலக்கண லக்கியக் கடல் - இலக்கணலக்கியங்களிலே கடல்,—சிவாகமச் செல்வன் - சிவாகமவியுற் பத்தியிலே பெருஞ்செல்வர்,—நல்லைச் சேயடி உவட்டும் பிறப்பு இறப்பு ஒழிதரச் சேவிக்கும் உத்தமன் - நல்லூரிலெழுந்தருளியிருக்குஞ் சுப்பிரமணியக்கடவுளது திருவடிகளை அறிஞர் அருவருக்குஞ் சனனமரணமிரண்டும் ஒழியும்படி பிரதிதினமும் ஒரு சிறிதுந் தவறுது விரதநியமமாகச் சென்று வழிபடுமுத்தம புருஷருமாகிய,—கார்த்திகேய வோசன் ஒளிமேவு உகளபாத பதுமங்கள் என் உளக்குளத்துள் மலர்தரும் - கார்த்திகேய உபாத்தியாயரது பேரொளிபொருந்திய உபயபாதாரவிந்தங்கள் தமியேனது மனமாகிய தடாகத்தின்கண்ணே அனவரதமும் விகசியாநிற்கும்,—சமட்டி விச்சாபுரத் தனிமாமுதற்றலைவி - சமட்டிவிச்சாபுரமென்னும் மதுரையிலெழுந்தருளியிருக்கின்ற ஒப்பற்ற மோட்சசாம்பிராச்சியத்திற்கு முதற்றலைவியாகிய,—சாந்தநாயகிசமேத. எ - று. (அந)

## வண்ணை வைத்தீயேசுரர் தையனுயகியம்மை.

வண்ணைவாழ் மகைசுவர்ய மகௌதா ரியப்பிரபு
வைத்யலிங் கச்செட்டிமுன்
வைத்தியே சுரர்தைய னுயகியை விதியுளி
வழாதுபிர திட்டைசெய்தான்
கண்ணிவ் வியாழ்ப்பாண புருடற் கிரண்டொன்று
கழறுறு முகநாவலன்
காசிவரை சத்திரங் கண்டகோ வொன்றிவ்விரு
கண்களிற் கண்டன்பெனும்
பெண்ணைப் புணர்ந்தின்ப வாரிதோய்ந் தருளெனும்
பிள்ளையைப் பெற்றில்லறப்
பேற்றிற் சுவர்க்கமுதல் வீற்றிருந் துறவு
பேணிமுத் தியையும்பெறும்
தண்ணறுங் கழுநீர்த் தடாகநீர்த் தத்தாடு
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். வண்ணை வாழ் மகைசுவர்ய மகௌதாரியப்பிரபு வைத்யலிங்கச்செட்டி - சற்றேறக்குறைய நூற்றுநாற்பது வருடங்களுக்குமுன் வண்ணைப்பண்ணையிலே வாழ்ந்திருந்த மகா ஐசுவரியமும் மகா கொடையுமுள்ள மகாப்பிரபுவாகிய வைத்தியலிங்கச்செட்டியார்,—முன் வைத்தியேசுரர் தையல் நாயகியை விதியுளிவழாது பிரதிட்டை செய்தான் - வைத்தியேசுரரையுந் தையனுயகியம்மையையும் விதிப்படி தவறுது அங்கே ஒரு மகா சிவாலயங் கட்டுவித்துப் பிரதிட்டை செய்தருளினார்,—இவ்வியாழ்ப்பாண புருடற்கு கண் இரண்டு - இவ்வியாழ்ப்பாணமாகிய ஆண்மகனுக்குக் கண்களிரண்டுள்ளன,—

ஒன்று கழறு ஆறுமுகநாவலன் - அவற்றுள் வலக்கண்ணனது மேற்சொல்லிய ஆறுமுகநாவலரேயாம்,—ஒன்று காசிவரை சத்திரங் கண்டகோ - மற்றொன்றாகிய இடக்கண்ணனது இவ்வியாழ்ப்பாணத்திலிருந்து காசித் திருப்பதிபரியந்தம் யாத்திராவாசிகட் குபயோகப்படும்பொருட்டு ஒவ்வோர் நேரப் பிரயாணத்துக் கிடையி லொவ்வோர் சத்திரங் கட்டுவித்த இளங்கோவாகிய வைத்தியலிங்கச் செட்டியாரேயாம்,—இவ்விருகண்களில் அன்பெனும் பெண்ணைக் கண்டு புணர்ந்து - அவ்வியாழ்ப்பாணபுருடன் இவ்விருகண்களினாலும் சிவபத்தி யென்னுங் கன்னிகையைக்கண்டு அவளை மணஞ்செய்து,—இன்ப வாரி தோய்ந்து அருளெனும் பிள்ளையைப்பெற்று - இன்பசாகரத்தமிழ்ந்தி அருளென்னு மகவைப்பெற்றிருந்து,—இல்லறப் பேற்றில் சுவர்க்கம் முதல் வீற்றிருந்தும் - இங்ஙன மனுட்டித்த இல்லறப் பேற்றினாலே சுவர்க்கம் முதலிய மேலுலகங்களில் வீற்றிருந்தும்,—துறவு பேணி முத்தியையும் பெறும் - பின்னர்த் துறவறத்தைப் பாதுகாத்தனுட்டித்தமையினாலே மோட்சத்தையும் பெறுதற்கும்,—தண் நறுங் கழுநீர்த்தடாக தீர்த்தத் தாடு - தட்பமாகிய நறுமணங் கமழுகின்ற செங்கழுநீர்த் தடாக தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தருளுகின்ற,—சாந்தநாயகிசமேத. எ - று.

ஈண்டுச் செங்கழுநீர்த்தடாகமென்றது இச்சந்திரமௌலீசர் சந்நிதானத்திருக்குந் திருக்குளத்தை. (அ௪)

குருநறுங் கொன்றையந் தொடையலான் வண்ணை
 கோயில்கொண் டருளியின்பக் [யிற்
குயிலொடங் கமர்தலாற் றையனு யகியம்மை
 கோதிறிரு வருள்குடைதலாற்
பொருவரும் வண்ணைநன் னகராகி யின்பம்
 புதுக்குபல் குடிகண்மல்கிப்

பொன்னக ரெனப்பொலிந் தக்கிரா காரமும்
பூசுரர் திருக்கூட்டமும்
திருமருவு சைவசத் திரமொடு மடங்களுஞ்
செய்யகடை வீதிபிறவுந்
திகழ்ந்திவ் வியாழ்ப்பாண சிகரத் திலங்கிடுந்
திவ்யமகு டத்திணுங்கும்
தருவளர் தருந்தனித் திருவளர் திடற்கண்வாழ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே பைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். குருநறுங் கொன்றையந் தொடையலான் - பொன்னிறம் பொருந்திய நறுமணங் கமழுங் கொன்றை மாலையைத் தரித்த சிவபெருமான்,—வண்ணையிற் கோயில்கொண் டருளி - மேலே கூறியபிரகாரம் வண்ணார்பண்ணையிலே கோயில்கொண் டெழுந்தருளி,—இன்பக்குயிலொடு அங்கு அமர்தலால் - பேரின்பக் குயிலாகிய தேவியாரோடும் வீற்றிருத்தலினாலும்,—தையல்நாயகியம்மை கோதில் திருவருள் குடைதலால் - அத்தையலநாயகியம்மையாரது குற்றமற்ற திருவருட் பிரவாகத்திலே அங்குள்ளவர்கள் நித்தியஸ்நானஞ் செய்தலினாலும்,—பொருவரும் வண்ணை நன்னகர் ஆகி - அவ்வண்ணார் பண்ணையானது நிகரற்ற சிறந்ததோர் பட்டணமாகி,—இன்பம் புதுக்கு பல்குடிகள் மல்கிப் பொன்னகர் எனப் பொலிந்து - சிற்றின்பம் பேரின்பங்களைப் புதுவது புதுவதாகப் பெருகச் செய்யு நாகரீகக் குடிசனங்கள் நிறையப்பெற்று, அமராவதியாகிய இராசதானியைப்போல யாழ்ப்பாணத்துக்கு இராசதானியாகத் தோற்றம் பொலிந்து,—அக்கிரகாரமும் - அந்தணர்களது அக்கிரகாரமும்,—பூசுரர் திருக்கூட்டமும் - அப்பிராமணர்களது திருக்கூட்டங்களும்,—திருமருவு சைவசத்திர

மொடு மடங்களும் - அன்னபூரணியம்மை வசிக்குங் கண்மணி யம்மை சைவசத்திரங்களும் திருமடங்களும்,—செய்ய கடை வீதி - அழகிய கடைவீதிகளும்,—பிறவும் திகழ்ந்து இவ்வி யாழ்ப்பாண சிகரத்திலங்கிடும் திவ்விய மகுடத்திணேங்கும் - இவைபோல்வன பிறவும் பிரகாசிக்கப்பெற்ற, இவ்வியாழ்ப் பாண புருடனது சிரசிற் பிரகாசிக்கும் இரத்தின மகுடத்தை யொத்துத் தழைத்தோங்காநிற்கும்,—தருவளர் தரும் தனித் திருவளர் திடற்கண்வாழ் - இத்தல விருட்சமாகிய வேர்வரு க்கை யொன்று ஆச்சரியகரத்தைத் தரப்பெறும் ஒப்பற்ற திரு வளர்திடல் என்னுங் காணிப்பெயரையுடைய திவ்வியதானத் துக் கோயில்கொண் டெழுந்தருளி வாழ்ந்தருளுகின்ற,—சாந்த நாயகிசமேத. எ - று. அக்கிராகாரம் நீட்டல்விகாரம்.

சந்திரமௌலீச ராலயத்துக்குத் தலவிருட்சம் - வேர்வருக் கையாகிய பலாமர விசேடமொன்றென்றும், இச்சிவாலயங் கட் டப்பட்ட நிலத்தின்பெயர் திருவளர்திடல் என்று மறிக. இவ் வெண்கற்றிருப்பணிக் கோயிலுக்குமுன் செங்கற்றிருப்பணிக் கோயிலொன்று மிகவும் பழையதாய் அவ்விடத்திருந்ததென் னுங் கன்ன பரம்பரையை இத்திருவளர்திடல் என்னுங் காணிப் பெயர் நன்கு வற்புறுத்துகின்றது.　　(அ௫)

## மானிப்பாய் மருதடிவிநாயகர்.

மருதடி விநாயகன் மானியம் பதிவாசி
　மறைமுத லெழுத்துருமிறை
மதகய முகற்செற்ற மூலவா தாரமுதன்
　மாபாரதம் பொறித்தெந்
கருதடிந் திடுகடவு ளவ்வைகயி லையிணுறக்
　கடிதுய்த்து விடுகணபதி
கருதினவர் கருதாத வர்க்குநன் மைகடமை

காட்டும்விக் கினகருத்தா
அருவடிவ மாமமல னேழையேன் பிழைபொறுத்
தருடரும் கருணைக்கட
லம்புயன் முதலோரு மறியாத தத்துவ
னளப்பரிய வாந்தரங்கன்
சருநெடிது துய்த்தொர்புன் மரமாகி யிங்குளேன்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
ரந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மானியம் பதி வாசி மருதடிவிநாயகன் - யாழ்ப் பாணத்து மானிப்பாய் என்னு மூரிலே ஒரு விசேஷமாகிய மருதமரத்தினடியிலே கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் விநாயகக்கடவுளானவர்,—மறைமுதலெழுத் துறமிறை - வேத த்தின் முதலிலேயுள்ள பிரணவாக்ஷரத்தினின்றுந் தோன்றுந் தலைமைப்பாட்டையுடையவர்,—மதகயமுகற் செற்ற மூலவா தாரமுதல் - மதம்பொருந்திய கயமுகாசுரனைக் கொன்ற ஆறு தாரங்களுள் மூலாதாரத்துக் கதிதெய்வமாகவுள்ளவர்,—மாபா ரதம் பொறித்து எங்கருதடிந்திடுகடவுள் - மகாபாரதத்தை மேருகிரியின்கண்ணே தங்கொம்பை முறித்து எழுத்தாணி யாகக் கொண்டெழுதி அதனாலே எம்போலு மான்மாக்களது சனனமூலத்தை அழித்தருளும் பேரருட்கடவுள்,—அவ்வை கயிலையினுறக் கடிதுய்த்துவிடு கணபதி - வெள்ளையானையின் மீதிவர்ந்தும் பட்டத்துக் குதிரையின்மீதிவர்ந்தும் சுந்தரமூர் த்திநாயனாரும் சேரமான்பெருமாணாயனாரும் முந்திச்சென்று கைலாயகிரியை அடைவதன் முன்னமே ஔவைப்பிராட்டி யாரை அக்கைலாயகிரிக்குச் செல்லும்படி தந் திருக்கரத்தி னாலே தூக்கிக் கைலாயகிரிவரையுந் தந்திருக்கரத்தை நீட்டி அங்கே அதிசீக்கிரம் செல்லும் வண்ணம் செலுத்திவிட்ட

பிரதமகணங்கட்கெல்லாம் அதிபதி,—கருதினவர் கருதாத வர்க்கு நன்மை தீமைகள் காட்டும் விக்கினகருத்தா - ஒன்றை ஆரம்பஞ்செய்யுமிடத்துத் தம்மைத் தியானஞ்செய்பவரும் செய் யாதவருமாகிய இருவருக்கும் முறையே நற்பலனையுந் தீப்பல னையும் விளக்கிக்காட்டுபவரென உடம்பாடும் எதிர்மறையு மாகிய இருபொருள்களும் ஒருங்குதரும் விக்கினகருத்தா என் னுந் திருநாமத்தையுடையவர்,—அருவடிவமாம் அமலன் - நிட் கள சகளமாகிய திருவுருவத்தையுடைய மலரகிதர்,—ஏழை யேன் பிழைபொறுத்து அருள்தருங் கருணைக்கடல் - ஏழை யடியேன் செய்யுங் குற்றங்களைத் திருவுள்ளத்திற் சகித்துக் குணமாகக் கொண்டருளி அனுக்கிரகத்தைச் செய்யும் கிருபா சமுத்திரம்,—அம்புயன் முதலோரும் அறியாத தத்துவன் - பிரமா விஷ்ணு முதலிய தேவர்களும் அறிந்து கோடற்கரிய பரமரகசியப் பொருளாயுள்ளவர்,—அளப்பரிய ஆந்தரங்கன் - வேதசிவாகமங்களும் வரையறைசெய் தளந்து கோடற்கரிய பரமரகசியப் பொருளாயுள்ளவர்,—சருகெடிது துய்த்து ஓர் புன்மரமாகி இங்குளேன் - செஞ்சாலிச் சோற்றைச் சன்மந் தொடங்கிப் புசித்துத் தேவரீரை மனம் வாக்குக்காயங்களி னாலே வழிபடாமையால் ஒரு பிரயோசனமுமற்ற புல்லிய முரு க்கமரம்போலிங்கே வாளா இறுமாந்திருக்கின்றேன், இனி யாதுசெய்வன் கொல்லோ,—சாந்தநாயகிசமேத. எ - று. (அகூ)

## நகுலாசலமும் நகுலதீர்த்தமும்.

மேருமால் வரையில்வரு நகுலமுக முனிமுனண்
  மேவியெங் கெங்குமூழ்கி
மீதூ ரிலங்கைவட கடலின்மேல் பாற்றீர
  மிளிர்வெற்பொர் நதிகண்டுளஞ்
சேருமா தரவினொடு திருவருள் செலுத்திடச்
  சென்றுகிய மத்தொடாடித்

தீர்வைமுக மொருவியே சிவதரிசனஞ் செய்து
நிகழ்நிட்டை தனின்வைகினான்
சாருமோர் காரணம் பற்றியச் சைலமுந்
தாழ்கங்கை யுந்தானுவெஞ்
சத்தியுந் தம்பெயர் முதற்கணாகு லப்பெயர்
தழங்கநில வுலகுசாற்றும்
தாருகா வனர்கரும சமயந் தடுத்தாட்கொள்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நகுலமுகமுனி - நகுலமுனிவரானவர்,—மேரு மால்வரையில் முன்னாள் வரு - உத்தரகுருவின்கண்ணே தம்முடைய கீரிமுக நீக்கத்தின்பொருட்டுத் தீர்த்தஸ்நானஞ் செய்துகொண்டு மேருமால்வரையின் கண்வந்து,—அங்கெங்கும் மேவி மூழ்கி - அங்கே சந்தித்த முசுகுந்த சக்கிரவர்த்தியோடு அம்மேருகிரிக்குத் தெற்கேயுள்ள தீர்த்தங்களெங்கெங்குஞ் சென்று தீர்த்தஸ்நானஞ்செய்து,—மீதூர் இலங்கை வடகடலின்மேல் பால் தீர மிளிர் வெற்பொர் நதிகண்டு - இத்தீர்த்தங்கட்கெல்லாம் மேம்பட்ட இலங்காதேயத்தின் வடகடலின் மேல்பாகத்துள்ள ஒருமலையிற் பிரவாகிக்கின்ற அருவி நதியைக்கண்டு,—உளஞ் சேரு மாதரவினொடு திருவருள் செலுத்திடச் சென்று - மனத்திற் பொருந்திய விருப்பமுந் திருவருளுஞ் செலுத்தாநிற்பச் சமீபத்திற் போய்,—நியமத்தொடாடித் தீர்வை முகம் ஒருவியே - சங்கற்ப நியமத்தோடு ஸ்நானஞ் செய்து கீரிமுகம் நீங்கப்பெற்று,—சிவதரிசனஞ்செய்து நிகழ்நிட்டை தனில் வைகினான் - அங்கே திருத்தம்பலையிலெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானை அனுதினமுந் தெரிசனஞ் செய்துகொண்டு சிவயோகநிட்டையி லமர்ந்தருளினார்,—சாரு

மோர் காரணம் பற்றி அச்சைலமும் - அதனோடு பொருந்திய ஒரு காரணத்தினால் அந்தமலையும்,—தாழ்கங்கையும் - அம்மலையிற் பிரவாகிக்கும் கங்கையும்,—தாணுவும் - அங்கெழுந்தருளியிருக்குஞ் சிவலிங்கப்பெருமானும்,—சத்தியும் - சிவசத்தியும்,—தம்பெயர் முதற்கண் நகுலப்பெயர் தழங்க நிலவுலகு சாற்றும் - தத்தம் பெயர்களுக்கு முதலிலே நகுலமென்னும் பெயரைப் பிரயோகித்து நகுலகிரி, நகுலதீர்த்தம், நகுலேசர், நகுலேசுவரி என அன்று தொடக்க மிந் நிலவுலகம் சொல்லிவழங்காநிற்கும்,—தாருகாவனர் கருமசமயந் தடுத்து ஆட்கொள் - தாருகாவனத்திருடிகளை அவர்கள் புதிதாகக் கற்பித்தெடுத்துக்கொண்ட கருமமீமாஞ்ச மதத்தினின்றும் வலிந்தாட்கொண்டருளிய,—சாந்தநாயகிசமேத. எ - று. (அஎ)

## நகுலதீர்த்தம்.

ஈதன்றி யந்தணரோ டரசரும் வணிகர்களு
மேரினரு மேனையோரு
மிம்மையொடு மறுமையுங் கருதியிதின் மூழ்கியவை
யெய்தினா ரெண்ணிறந்தோர்
கோதின்றி வீடடைத லிங்கூடு மென்றிடிற்
கூறலாந் தகையதாமோ
குழகனரு டருட்சத்தி பதிதலாற் குடைகுவார்
குற்றமுங் குணமாகுமாற்
றீதின்றி வாதநோய் குட்டநோய் முதலியன
சேதித்த ரோகநியமத்
திடகாத் திரந்தந்து நன்னிலை நிறீஇச்சிவன்
றிருவரு டிளைப்பித்திடுந்
தாதன் றனக்குனது சரணன்றி யரணின்று
சாந்தநா யகிசமேத

சந்த்ரமௌலீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். ஈதன்றி அந்தணரொடு அரசரும் வணிகர்களும் ஏரினரும் ஏனையோரும் - இதுவுமன்றிப் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களும் பிறரும்,—இம்மையொடு மறுமையுங் கருதி யிதின்மூழ்கி அவையெய்தினோர் எண்ணிறந்தோர் - இம்மைப்பயன் மறுமைப்பயன்களைப் பெற விரும்பி இந்நகுலதீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து அவ்வப்பயன்களை அடைந்தவர் எல்லையற்றவர், —கோதின்றி வீடடைதலுங் கூடுமென்றிடிற் கூறலாந் தகையதாமோ - இதிலே ஸ்நானஞ்செய்தவர்கள் ஆணவமலக் குற்றமற்று மோட்சமடைதலுங் கூடுமாயின் இத்தீர்த்தத்தின் மகிமை நம்மால் விதந்து கூறமுடியுமோ,—குழகனது அருட்சத்தி பதிதலாற் குடைகுவார் குற்றமும் குணமாகுமால் - இத்தீர்த்தத்திலே சிவபெருமானது திருவருட்சத்தி விசேடமாகப் பதிந்திருப்பதனால் ஸ்நானஞ்செய்கின்றவர்களது சகலவித குற்றங்களும் குணமேயாக மாறிவிடும்,—தீதின்றி வாதநோய் குட்டநோய் முதலியன சேதித்து - இத்தீர்த்தம் தம்மிடத்து ஸ்நானஞ்செய்கின்றவர்களது வாதநோய் குட்டநோய் முதலியவைகளைச் சிதைத்து,—அரோகதியமத் திடகாத்திரந் தந்து நன்னிலைநிறீஇச் சிவன்றிருவருள் திளைப்பித்திடும் - உரோகமற்ற நிச்சய உறுதிப்பாடு பொருந்திய தைரியத்தை யவ்வச்சரீரங்களிலே உற்பத்திபண்ணி அவர்களை யொரு தீமையுமில்லாமல் நல்லதிருவருணிலையின்கண் நிறுத்திச் சிவபெருமானுடைய திருவடிகளிலே பேரானந்தத்தை யனுபவிக்கச் செய்யாநிற்கும்,—தாதன்றனக்குனது சரண் அன்றி அரண் இன்று - தேவரீருடைய ஏழையடியேனாகிய தமியேனுக்கு நுந் திருவடிகளே யல்லாமல் புகலிடம் வேறின்று,—சாந்தநாயகி சமேத. எ - று. (அஅ)

கடகமா மதியமையிந் நதியறலின் மூழ்குவோர்
கணிதமார் கழறலறிவார்
கரையின்மா மணலைநிகர் தருசன சமூகமொளிர்
காட்சியே கலிநலிதரும்
படகமா வினையனைய மானமா ரரிவையர்கள்
பண்ணைமிக நண்ணிமிளிரும்
பரமனூர் குகனுமைமெயா டமருமா கரையில்வரு
பவனியவ னியைவிழுங்கும்
வடகநீ டிரைதவழு வருமறிஞர் வறிஞர்செறி
மாமடம் பலவைகிடு
மறுவின்மறை யவர்சத் திரங்கள்கதிர் வேற்பிள்ளை
மாமடத் தொடுமல்கிடும்
சடகமா யுழிதருந் தமியனு னடைக்கலஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனேயைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். கடகமா மதியமை இந்நதி யறலின் மூழ்குவோர் கணிதம் ஆர் கழறல் அறிவார் - ஆடிமாதத்து அமாவாசையாகிய விசேட புண்ணியகாலத்திலே இந்நகுல தீர்த்தத்திலே வந்து ஸ்நானஞ்செய்கின்றவர்களது கணக்கை யாவர்தாம் வரையறுத்துச் சொல்லுதலை வல்லராவார்,—கரையின் மாமணலை நிகர்தருசன சமூகமொளிர் காட்சியே கலிநலிதரும் - அக்கடற்கரையின்கண்ணுள்ள பெருமைபொருந்திய மணற்றொகுதியளவை யொத்த அளவையுடைய மகாசனசமூகங்களினது தரிசனமே தமது பாவத்தை யொழிக்கும்,—படகமா வினையனைய மானமார் அரிவையர்கள் பண்ணை மிக நண்ணி மிளிரும் - அச்சமுத்திரதீர்த்தக்கரையின்கண்ணே கவரிமானையொத்த மானம்

பொருந்திய யாத்திரைப் பெண்களினது கூட்டம் மிகவும் பொருந்தி விளங்காநிற்கும்,—பரமனார் குகனுமையொடு அமருமா கரையில் வருபவனி அவனியை விழுங்கும் - நகுலேசர் சுப்பிரமணியக்கடவுளோடும் நகுலேசுவரியம்மையாரோடும் அத்தீர்த்தக்கரையில் அவ்வமாவாசைக்கண் எழுந்தருளி வருகின்ற திருப்பவனியானது பூமியை விழுங்காநிற்கும், —வடக நீள் திரை தவழ வரும் அறிஞர் வறிஞர் செறி மாமடம் பலவை கிடும் - சரீரத்தின் மேற்றோலிலே நரை திரை பொருந்தவரும் முதுமக்களாகிய அறிவிற் பெரியோர்களும், பொருளிற் சிறியோருந் தங்கும் பெரிய திருமடங்கள் பற்பல அச்சுற்றுப் பக்கங்களின்கண்ணேயிருக்கும்,—மறுவின் மறையவர் சத்திரங்கள் கதிர்வேற்பிள்ளை மாமடத்தொடும் மலிகிடும் - மாசற்ற பிராமணர்கள் வசிக்கும் சத்திரங்கள் கதிர்வேற்பிள்ளை யென்னுந் தருமப் பிரபுவினது மகாமடத்தோடு கூடி நிலைபெறும்,— சடகமா யுழிதரும் தமியன் உன் அடைக்கலம் - தேவரீருடைய கோயிற்சந்நிதியிலே ஒருநாளுந் தங்கி வழிபடாமல் ஊர்க்குருவியைப்போல உலகெங்குஞ் சுழன்றுதிரியும் தமியேன் தேவரீருக்கு அடைக்கலம்! அடைக்கலம்!! அடைக்கலம்!!! சாந்தநாயகிசமேத. எ - று. (அகூ).

நகுலதீர்த் தம்பரவை சங்கமித் திடுதலா
  லுடுசா கரசங்கம
நாமமுறு மாகசிவ ராத்திரியி லுடிகொடி
  நாட்கட னுஞற்றிநனுகி
நகுலேச னகுலேசு வரியைநனி தரிசித்து
  நான்கியா மமும்வணங்கி
நகர்வல முறீஇச்செப தபங்கள்பிற பேணிமறு
  நாட்காலை தனினுமூழ்கி
நகுலேச னடியன்னை யடியொடு பணிந்தெழீஇ
  நற்றவரொ டறுகடிகையு

ணன்குபா ரணமுந் நவிற்றியெற் றுயில்செயார்
நான்மையும் பெறுவர்நாயேன்
சகுலேச னுபினேன் செய்பரி சறிந்திலேன்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமெள லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நகுலதீர்த்தம் பரவை சங்கமித்திடுதலால் நாடு சாகரசங்கம நாமமுறும் - இந்நகுலதீர்த்தமானது இந்நகுலாசலத்தினின்று முற்பத்தியாகிச் சமுத்திரத்தோடு கூடுதலினாலே விரும்பப்படுஞ் சாகரசங்கமமென்னுங் காரணப்பெயரைப் பொருந்தும்,—மாகசிவராத்திரியினுடி நொடி நாட்கடன் உஞற்றி நணுகி - மாசிமாதத்தில் வருகின்ற மகாசிவராத்திரி தினத்திலே சென்று விதிப்படி ஸ்நானஞ்செய்து ஆறுவிதமாகச் சொல்லப்படும் நித்திய கருமங்களைச்செய்து முடித்துக் கரையேறி,—நகுலேசன் நகுலேசுவரியை நனி தரிசித்து நான்கு யாமமும் வணங்கி - நகுலேசர் நகுலேசுவரிகளை மிகவும் அன்போடு தரிசித்து நான்குயாமங்களினுஞ் சிறிதுந் தூக்கமின்றி வழிபட்டு,—நகர்வலமுறீஇச் செபதபங்கள் பிறபேணி-இச்சிவாலயத்தை இயன்றவரையும் பிரதட்சிணஞ்செய்து சிவமூலமந்திரமாகிய ஸ்ரீ பஞ்சாட்சரசெபஞ் செய்தன் முதலிய தவவொழுக்கங்களையு மின்னோரன்ன பிறவற்றையும் சைவாகமவிதி தவறுமற் பாதுகாத்துச் செய்து,—மறுநாட்காலைதனினும் மூழ்கி நகுலேசனடி யன்னை யடியொடுபணிந்தெழீஇ - அடுத்தநாட் காலையுஞ் சூரியோதயத்துக்குமுன் தீர்த்தஸ்நானஞ்செய்து மேற்படி மூர்த்திகளிருவரையுந் திருவடிகளில் வணங்கி யெழுந்து புறப்பட்டுச் சென்று,—நற்றவரொடு அறுகடிகையுள் நன்குபாரணமும் நவிற்றி - நல்லதபோதனர்களோடு ஆறுநாழிகைக்குள்ளே நன்கிதாகப் பாரணபோசனமும் பண்ணி,—எல் துயில் செயார் நான்மையும் பெறுவர் - அன்றுபகல் நித்திரையுஞ் செய்

யாதவர் அறம்பொருளின்பம் வீடென்னும் நான்கு புருஷார்த் தங்களையும் நிச்சயமாகப் பெறுவர்,—நாயேன் சகுலேசன் ஆயி னேன் செய் பரிசு அறிந்திலேன் - நாயினுங் கடையேனாகிய நாயேன் பிரபஞ்சத்திற் சம்பந்தமுடையனாயினேன் ஆதலி னாலே தேவரீருடைய திருவடிகளை அடைதற்கு இன்னது செயற்பாலது என்று ஒருவாறறிந்திருந்தும் அவற்றை யநு ட்டியாமையினாலே அறியாதவனுமாயினேன்,—சாந்தநாயகிச மேத. எ - று. (கூ0)

## நகுலேசுவர சிவசக்கரம்.

விந்துமத் தியிலதைச் சூழுஞ் சதுர்த்ததளம்
விள்ளுமதை யட்டதளமேல்
விரவிச் சுலாவுமதை வீறுசோடசதளம்
மீதுறச் சூழுமதனைத்
தந்துமூ வெட்டுத் தளஞ்சூழு மாங்கதைத்
தாவிலெண் ணான்குகோணந்
தகைவுறீஇச் சூழுமச் சக்கரத் தின்மூன்று
தத்துவத் தலைவர்சார்வர்
நந்துமருள் விந்துவிடை நகுலநா யகியோடு
நகுலேச னமருமற்று
நந்திமுத லாயினோர் சோடச தளம்பிற
தளங்களி னயந்தமர்குவார்
சந்துசுந் தரர்தமக் கன்றுசென் றருள்செயுஞ்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மத்தியில் விந்து - சிவசக்கரத்தின் மத்தியிலே ஒரு விருத்தவடிவமான புள்ளியிருக்கும்,—அதைச் சதுர்த்த

தளம் சூழும் - அவ்விந்துவைச் சதுர்த்ததளம் புறத்திலே சூழ்ந்திருக்கும்,—விள்ளும் அதை அட்டதளம் மேல்விரவிச் சுலாவும் - சொல்லப்பட்ட அந்தச் சதுர்த்ததளத்தை அட்டதளம் புறத்தே பொருந்திச் சூழ்ந்திருக்கும்,—அதை வீறு சோடசதளம் மீதுறச் சூழும் - அவ்வட்டதளத்தைப் பெருமைபொருந்திய சோடசதளம் புறத்தே சூழ்ந்திருக்கும்,—அதனை மூவெட்டுத்தளம் தந்து சூழும் - அந்தச் சோடசதளத்தைச் சதுர்விம்சதிதளம் தரப்பட்டுப் புறத்தே சூழ்ந்திருக்கும்,—அங்கதைத் தாவில் எண்ணான்கு கோணம் தகைவுறீஇச் சூழும் - அந்தச் சதுர்விம்சதிதளத்தைக் கேடற்ற துவாதிரிம்சதளம் தடுத்துப் புறத்தே சூழ்ந்திருக்கும்,—அச்சக்கரத்தின் மூன்று தத்துவத் தலைவர் சார்வர் - அச்சிவசக்கரத்திலே ஆன்மதத்துவத்தலைவராகிய பிரமாவும் வித்தியாதத்துவத்தலைவராகிய விஷ்ணுவும் சிவதத்துவத் தலைவராகிய மகாருத்திரரும் தங்குவார்கள்,—அருள் நந்து விந்து விடை நகுல நாயகியோடு நகுலேசன் அமரும் - திருவருள் பெருகுந்தானமாகிய மத்தியிலுள்ள மேற்கூறிய விந்துவிலே நகுலேசுவரியம்மையாரோடு நகுலேசுவரர் வீற்றிருந்தருளுவார்,—மற்றும் நந்தி முதலாயினோர் சோடசதளம் பிற தளங்களின் நயந்து அமர்குவார் - வேறும் திருநந்திதேவர் முதலாகிய கணர்கள் சோடசதளத்தினும் பிறதளங்களினும் விரும்பி வீற்றிருப்பார்கள்,—சுந்தரர் தமக்கு சந்து அன்று சென்றருளும் சாந்தநாயகிசமேத - சுந்தரமூர்த்தி நாயனருக்காகத் தூதாக அக்காலத்துப் பரவைநாயகியாரிடத்துச் சென்றருளும் சாந்தநாயகிசமேத. எ - று.

சதுர்த்ததளம் - நான்குதளம். அட்டதளம் - எட்டுத்தளம். சோடசதளம் - பதினாறுதளம். சதுர்விம்சதிதளம் - இருபத்து நான்குதளம்,—துவாதிரிம்சதளம் - முப்பத்திரண்டுதளம். இத்தளங்களின் அடைக்கப்படும் அக்ஷரங்களைக் குருமுகமாகப் பெற்றுக்கொள்க. (கக)

## நகுலேசுவரி சத்திசக்கரம்.

நடுவிந்து திரிகோண மட்டகோ ணத்திெனடு
நற்றுவா தசகோணமே
னவின்மனுக் கோணமே ஞகசோ டசதள
நண்ணுபூத் திரயமாகிப்
படுசத்தி சக்கரத் தறுகலா பங்கண்டு
பயிலுமா தாரமாறும்
பகர்பிரம ரந்திரமு மாகுமேழ் தானம்
பதித்தைக் கியம்பண்ணிடின்
விடுவிந்து திரிகோண முதலேலலைற யும்பின்னர்
விதுமண் டலத்தினின்று
விளையாடு வாளெங்க ணகுலேசு வரியவள்
வியன்பாத துணையேதுணை
தடுசிந்து நிகர்பிறவி கெடுபுந்தி மயலினைச்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நடுவிந்து - சத்திசக்கரத்தின் மத்தியிலே ஒரு விந்து விருக்கும்,—திரிகோணம் - அதைத் திரிகோணம் புறத்தே சூழ்ந்திருக்கும்.—அட்டகோணத்திெனடு நற்றுவாதச கோணம் - அதை அட்டகோணம் புறத்தே சூழ்ந்திருக்கும் அதைத் துவாதசகோணம் புறத்தே சூழ்ந்திருக்கும்,—மேல் நவில் மனுக்கோணம் - அதைச் சதுர்த்தசகோணம் புறத்தே சூழ்ந்திருக்கும்,—நாகதளம்மேல் - அதை அட்டதளம் புறத்தே சூழ்ந்திருக்கும்,—சோடசதளம் - அதன்புறத்தே சோடசதளஞ் சூழ்ந்திருக்கும்,—நண்ணுபூத்திரயமாகிப் படுசத்திசக்கரத்து - அதைப்பொருந்திய பூத்திரயஞ் சூழ்ந்திருப்பதாகி உளதாகுஞ்

சத்திசக்கரத்திலே,—அறுகலாபங்கண்டு - ஆறுகலாபங்களை யுஞ்செய்து,—பயிலும் ஆதாரம் ஆறும் - பொருந்திய மூலா தாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை என்ற ஆருதாரமும்,—பகர் பிரமரந்திரமுமாகும் எழ் தானமும் விடு விந்து திரிகோண முதலேழையும் பதித்து ஐக் கியம் பண்ணிடில் - சொல்லப்படுகின்ற பிரமரந்திரமுமாகிய எழுதானங்களிலும் மேற்சொல்லிவிடப்பட்ட விந்து திரிகோ ணம் முதலிய எழையும் சக்கரத்திலே பிரதிட்டைசெய்து ஒற் றுமைப்படுத்தொன்ருக்கித் தியானிக்கின்,—எங்கள் நகுலே சுவரி பின்னர் விதுமண்டலத்தினின்று விளையாடுவாள் - எம் முடைய குலதெய்வமாகிய நகுலேசுவரியம்மையார் சந்திரமண் டலமாகிய அந்த விந்துஸ்தானத்தினின்றும் வெளிப்பட்டு ஆன் மகோடிகட்குத் திருவருள் செய்தலாகிய திருவிளையாட்டை எளிதிற் செய்தருளுவார்,—அவள் வியன்பாததுணையே துணை - அவ்வம்மையாரது வியக்கற்பாலனவாகிய உபயதிருவடிகளே எமக்குயிர்த் துணையாம்,—புந்திமயலினைக் கெடு - அடியேனது பிரபஞ்ச மனமயக்கத்தைக் கெடுத்தருளும்,—சிந்துநிகர் பிறவி தடு - அங்ஙனங்கெடுத்துச் சமுத்திரம்போலும் பெரியசனனத் தைக் கெடுத்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

மனுக்கோணம் - மனுக்கள் பதினன்கு மனுக்களாதலின் அத்தொகைக் குறிப்புச்சொல் ஈண்டுப் பதினன்கு கோண த்தை உணர்த்திற்று. நாககோணம் - நாகம் எட்டாகலின் அத் தொகைக் குறிப்புச்சொல் ஈண்டு எட்டுக்கோணத்தை யுணர்த் திற்று. அறுகலாபங்கள்: அறுகலாபங்களுள் முதற்கலாபமா வது - ஆசாரியர் நான்குதீக்ஷை வாயிலாக மந்திரோபதேசஞ் செய்யப்பெறுதல். இரண்டாங்கலாபமாவது - தேவிசந்தியநுட் டானஞ்செய்யப் பெறுதல். மூன்ருங்கலாபமாவது - அங்ககரநி யாசஞ்செய்தல். நான்காங் கலாபமாவது - பாத்திரபூசை கலச பூசை சங்கபூசை பீடபூசைகளைச் செய்தல். ஐந்தாங் கலாப

மாவது - திரிகாலசந்திகளினுங் கவசாதிகளைக்கொண்டு தோத்திரஞ்செய்தல். ஆருங்கலாபமாவது - தேவிசக்கரலக்கணம், அதில் எழுதப்படும் மந்திராதி லக்கணம், அதில் ஆராதிக்கப்படும் தேவிலக்கணம், தேவிகணங்களின் இலக்கணமாகிய இவைகளை யறிதல்.

படும் என்னுஞ் சொல்லை நடுவிந்துபடும் என்றற்றொடக்கத்தனவாக யாண்டுங் கூட்டிப் பொருளுரைத்துக்கொள்க. பூத்திரயமாவது - சத்திசக்கரத்தின் மேல் முடிபிற் சதுரஸ்ரமாக விருக்கும் முக்கீற்றுவடிவம். (கஉ)

## மாருதப் பிரவல்லி.

பாடுசோ முன்மக ளொருத்திமா ருதவல்லி
   பாவமுஞ் சிறிதுடைமையிற்
பாய்மா முகங்கொடு பிறந்தாண் முதக்குறைகொ
   பருவமுறு காலைபடிமேல் [ள்
நீடுமா நதியெங்கு மேகியாத் திரைசெயு
   நினைவினு டந்தைபணியி
னேயமிகு குலமாத ரயன்மாத ரண்ணகர்
   நிரந்தரற் கிளைஞர்சூழக்
கூடுமாதரவி னொடு குன்மவலி மாமுகக்
   கோதுளங் கொண்டுந்திடக்
குணதுங் குடாதும் வடாதுந் தெனதுமாய்க்
   குலவுதீர்த் தங்குடைகுவாள்
தாடுதித் திடவெனக் கன்புதித் திடவருள்செய்
   சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
   சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பாடு சோழன்மகள் மாருதவல்லி ஒருத்தி - புலவர்களாற் புகழ்ந்துபாடப்படும் விக்கிரமசோழனுடைய மகளாகிய மாருதப்பிரவல்லி யென்னும் பெண்ணொருத்தி,—பாவமும் சிறிதுடைமையில் பாய்மாமுகங்கொடு பிறந்தாள் - பூர்வ சன்மத்திலே பெரிதும் புண்ணியமுடையளாயினும் பாவமும் சிறிதுடைமையினாலே குதிரைமுகத்தைக்கொண்டு பிறந்தனள்,—முதுக்குறைகொள் பருவம் உறுகாலே - அவள் பேரறிவைக் கொள்ளும் மங்கைப் பருவத்தை அடைதற்குரிய காலத்திலே (அத்தோஷத்தை யறிந்து),—படிமேல் நீடுமொாநதி எங்கும் எகியாத்திரைசெயும் நினைவினள் - அவள் பூமியின்மேலுள்ள உயர்வாகிய பெரிய தீர்த்தமெங்கும் சென்று யாத்திரைசெய்யுங் கருத்துடையவளாய்,—தந்தை பணியின் - பிதாவினுடைய உத்தரவினால்,—நேயமிகு குலமாதர் அயல்மாதர் நிரந்த நல்கிளைஞர் அண்ணகர் சூழ - அன்புமிக்க தன் குலமகளிரும் தன்வேலைக்காரிகளும் நிறைந்த நல்ல சுற்றத்தவர்களும் அண்ணகர்களுந் தன்னைச் சூழ்ந்துவர,—குன்மவலி மாமுகக்கோது உளங்கொண்டு உந்திடக் கூடும் ஆதரவினொடு - குன்மவலியும் குதிரைமுகக்குற்றமும் தன்மனத்தை யிடமாகக்கொண்டு செலுத்தாநிற்ப, அவைகளை நீக்கவேண்டுமென்று தன்மாட்டுப் பொருந்திய விருப்பத்தினாலே,—குணாதும் குடாதும் வடாதும் தெனாதுமாய்க் குலவு தீர்த்தங் குடைகுவாள் - தன் சோழநாட்டிற்குக் கிழக்குத்திக்கின்கண்ணும் மேற்குத்திக்கின்கண்ணும் வடக்குத்திக்கின்கண்ணும் தெற்குத்திக்கின்கண்ணுமாகப் பொருந்திப் பிரசித்திபெற்ற தீர்த்தங்களிலே ஸ்நானஞ் செய்பவளாகிச் (செல்பவள்),—தாள் துதித்திட எனக்கு அன்பு உதித்திட அருள்செய் - தேவரீருடைய உபயதிருவடிகளையும் தியானித்து வணங்கித் துதிக்கும்பொருட்டுத் தமியேனுக்கு அத்திருவடிகளிலே பேரன்பைத் தந்தருளும்,—சாந்தநாயகிசமேத. எ - று.

அண்ணகர் - அரசன் றேவி யில்லத்து வாயிற்காவல்காக்கும்பொருட்டு ஆண்குறியைச் சேதித்து நிறுத்தப்பட்டவர்.

இவர்கள் இம்மாருதப்பிரவல்லியோடும் இலங்கையிற் சென்றிருந்து இவள்நாயகனுகிய பாலசிங்கமகாராசாவினுல் யாழ்ப்பாணத்திலுள்ள தனக்குரிய நெல்முதலிய இறைப்பொருள்களை அறவிட்டு அவ்வரசனுக்கு அனுப்பும்படி அவனுல் நியோகிக்கப்பட்டு அங்குள்ள மருதநிலங்களிற் றங்கி அவ்வாறு செய்து பிற்காலத்திலே அண்ணமார் என்னும் பெயர் வழங்கப்பெற்று மருதநிலக் கிராமதேவதைகளாய் இன்றும் இருக்கின்றனர். ()

திக்கொடு விதிக்கெங்கு மேகியே நியமத்
 திறந்தொடுந் தீர்த்தமாடித்
திரிகுவா ணகுலமுனி நீர்வைமுக மொருவிடுஞ்
 சிரவணத் தொடுசிவனருள்
புக்குந்தி விடுதலும் பொதிரிளங் கொம்பனுள்
 போதந் திலங்கைநகுலப்
பூதரங் குறுகியந் நகுலமுனி வற்கண்டு
 பொன்னடி வணங்கிப்புணர்
துக்கங் கிளத்திடலும் நகுலதீர்த் தத்தடைவு
 தொல்லைமா முனிசொற்றிடத்
தொழுதகை தலைக்கேற வழுதழுது தேம்பிடுந்
 துணரிணர்க் கோதைபின்னர்த்
தக்கன் சிரந்துமித் தெக்கிய மழித்தருள்செய்
 சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
 சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். திக்கொடு விதிக்கெங்கும் ஏகியே நியமத் திறந்தொடும் தீர்த்தம் ஆடித்திரிகுவாள் - உத்தரதிக்கு முதலிய நேர்திக்குநான்கும் ஈசானதிக்கு முதலிய கோணத்திக்கு நான்குமாகிய எட்டுத்திக்குகளினும் போய் நியமாசாரத்தோடும்

தீர்த்தஸ்நானஞ் செய்துகொண்டு சஞ்சரிப்பவளாகிய மாருதப் பிரவல்லி,—நகுலமுனி நீர்வைமுகம் ஒருவிடும் சிரவணத்தொடு சிவனருள்புக்கு உந்திவிடுதலும் - நகுலமுனிவர் சாகரசங்கம தீர்த்தஸ்நானஞ் செய்து தமது கீரிமுகம் நீங்கப்பெற்ற விஷயத் தைக்கேள்விப்பட்ட மெய்ம்மையாகிய கேள்வியோடு கூடி நகுலேசரது திருவருளானது தன்மனத்திற் புகுந்து பிடர் பிடித்துத் தள்ளிவிடுதலும்,—பொதிர் இளம் கொம்பு அனுள் இலங்கை போதந்து - புஷ்பமுந் தளிருஞ்செறிந்த பொன்னி றக் கொம்பர்போலும் அம்மாருதப்பிரவல்லியானவள், அக்கேள் வியின் வண்ணமே இலங்கையிற் சென்று,—நகுலப் பூதரங் குறுகி,—அதன் உத்தரபாகத்திறுதியிலுள்ள நகுலகிரியைச் சமீபித்து,—அந்நகுலமுனிவற் கண்டு பொன்னடி வணங்கி - அங்கே நிட்டைகூடியிருக்கும் நகுலமுனிவரைத் தரிசித்து அவ ருடைய பொன்போலுந் திருவடிகளை வணங்கி,—புணர் துக்கங் கிளத்திடலும் - தன் மாட்டுப்பொருந்திய துக்கத்தின் கார ணத்தை விளங்க விண்ணப்பஞ் செய்தவுடனே,—நகுலதீர்த் தத்துத் தொல்லை அடைவு முனிசொற்றிட - நகுலதீர்த்தத்தின் பழைய வரலாற்றினை அம்மகிமைபொருந்திய முனிவர் சொல் லாநிற்ப,—தொழுத கைதலைக்கேற அழுது அழுது தேம்பிடும் துணர் இணர்க்கோதை பின்னர் - கும்பிட்ட கைகள் சிரசிலே ஏறப்பெற்று மிகவும் அழுது அழுது விம்மும் மிக்க கொத்துக் களின் கண்ணுள்ள புஷ்பங்களினாலாகிய மாலையைத் தரித்த அம்மாருதப்பிரவல்லியானவள் பின்பு யாதுசெய்தாளோவெ னிற் கூறுதும்,— தக்கன் சிரம் துணித்து எக்கியம் அழித்து அருள்செய்- தக்கனது தலையைத் துணித்து அவனது யாகத்தை அழித்துப் பின்னர் அவன் சிவபூசை செய்ய அவனுக்கு மோக்ஷ த்தைக் கொடுத்தருளிய,—சாந்தநாயகிசமேத. எ - று.

விதிக்கு - கோணத்திக்கு. அது "திக்கொடுவிதிக்கு நீர் செலுத்தி" என்பதனாலும் அறிக. (கூ௪)

தத்துவமசி வாக்கிய முணர்ந்தமா முனிமகா
சங்கற்ப மோதியுதவச்
சால்சமுத் திரசங்க மத்தின்விதி மூழ்கியெழு
தையன்மா முகமுந்தவிர்
சித்தஞ் சிவன்றிரு வடிக்கணெக் குருகிடச்
செந்திருவை நிகர்நன்முகச்
செவ்விபெற் றேகுவாள் சிந்தைமகிழ் வெம்மனோர்
செப்புந் திறத்ததாமோ
முத்தமுத மொழியின் புரிந்துநாட் கடனெழீஇப்
பொற்கோயி லிற்புகுந்தெம்
புண்ணியனை நகுலையைக் கண்ணுறக் கண்டடி
புகழ்ந்தன் பினிற்பணிந்தாள்
சத்தசத் தொடுதனிச் சதசத் துமாகியொளிர்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். தத்துவமசி வாக்கியம் உணர்ந்த மாமுனி மகா சங்கற்பம் ஓதி உதவ - அது நீயாளுய் எனப் பொருள்படும் வேத மகாவாக்கியத்தின் பொருளை அனுபூதியிற் கண்டறிந்த நகுல மகாமுனிவர் புண்ணியதீர்த்த ஸ்நானத்தின் பொருட்டு மகாசங்கற்பஞ் சொல்லி உபசரிக்க,- சால்சமுத்திர சங்கமத்தின் விதி மூழ்கி எழுதையல் மாமுகமும் தவிர்-புண்ணியம் நிறைந்த சாகர சங்கம தீர்த்தத்திலே விதிப்படி ஸ்நானஞ் செய்தெழுகின்ற மாருதப்பிரவல்லி குதிரைமுகமும் குன்மவலியும் ஒருங்கு நீங்கப் பெற்று,—சித்தம் சிவன்திருவடிக்கண் நெக்கு உருகிட - தன் மனமானது சிவபெருமானுடைய திருவடிகளிற் பற்றி நெக்கு நெக்குருகாநிற்ப,—செந்திருவை நிகர் நல்முகச்செவ்விபெற்று

எகுவாள் சிந்தை மகிழ்வு எம்மனோர் செப்பும் திறத்ததாமோ - மகாலக்ஷ்மியினது திருமுகத்தை யொக்குமாறு தன் முகம் அழகொழுகப்பெற்றுக் கரையைச்சார வருகின்ற அச்சோழபுத் திரியினது மனமகிழ்ச்சியானது நம்போலும் சிற்றறிவையுடைய கவிகளால் இவ்வியல்பிற்றென்று சொல்லுந் தரத்ததாகுமோ,— புத்தமுதமொழி பின்னாட்கடன் புரிந்து எழீஇ பொற்கோவி லில் புகுந்து - புதியதொரு தேவாமிர்தம் போலும் மாதுரிய வசனங்களைப் பேசுகின்ற அம்மாருதப் பிரவல்லி கரையை அடைந்தபின் நித்தியகருமத்தைச் செய்துகொண்டு அவ்விடத் தைவிட்டெழுந்து சென்று திருக்கோவிலிற் பிரவேசித்து,— எம்புண்ணியனை நகுலையைக் கண்ணுறக் கண்டு அடிபுகழ்ந்து அன்பினிற் பணிந்தாள் - நாம் பூர்வசென்மங்களிலே செய்து கொண்ட புண்ணியவடிவினராகிய நகுலேசுவரரையும் நகுலேசு வரியையுங் கண்குளிரத் தரிசித்து மெய்யன்பினாலே திருவடி களை வணங்கித் தோத்திரஞ்செய்துகொண்டு நின்றனள்,—சத் தசத்தொடு தனிச் சதசத்துமாகி ஒளிர் - சத்தாகிய சிவமும் அசத்தாகிய பாசமும் இவ்விரண்டின் வேறாய்ச் சதசத்தாகிய பசுக்களுமாகி விளங்குகின்ற,—சாந்தநாயகிசமேத. எ - று.

தத்: அது. துவம் நீ. அசி ஆகிறாய். முகமும் என்னும் எதிரது தழீஇய எச்சஉம்மையாற் குன்மவலிகொள்ளப்பட்டது. தவிர் என்னும் வினையடி தவிர்ந்தென வினையெச்சப் பொருடந்து நின்றது, "வரிப்புனை பந்து" என்புழிப்போல. சத்து என் பது, முக்காலத்தும் ஒரு தன்மையாயுள்ளது. அசத்து என்பது முக்காலத்தும் ஒரு தன்மையாயில்லாதது. சதசத்து என்பது சத்தைச்சார்ந்தவழிச் சத்தாயும் அசத்தைச் சார்ந்தவழி அசத்தா யும் உள்ளது.　　(கூ௫)

பாரிற்ப ணிந்தெழுமந் நாரிமா ருதவல்லி
பரமனைப் பரையைமுனியைப்

பகர்பெருந் தீர்த்தத்தை யொருசிறிது நீங்கலாள்
பாசுரம தொன்றெழுதியார்த்
தாரிற் றிகழ்ந்துநிகழ் தந்தைக் குணர்த்தவத்
தந்தைதன் னுளமகிழ்ந்தே
தானதரு மங்கள்பல செய்ததூ முகன்றிருச்
சட்டகந் தருவித்ததை
வாரிற் றிணிந்தமுலை மாதாக் கனுப்பநா
வாயினூ வந்துறுதலும்
வாங்கியோங் குளமகிழ்வு தேங்கிநகு லாசலை
வளாகபூ ருவதிசையின்வாய்
சாரிற் பலாதனது வேரிற் பழுக்கவருள்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். பாரிற் பணிந்து எழும் அந்நாரி மாருதவல்லி-சந்நிதானத்தே நிலத்தின் கண் வணங்கியெழுந்த மாருதப்பிரவல்லியாகிய அப்பெண்ணரசி,— பரமனைப் பரையை முனியைப் பகர்பெருந்தீர்த்தத்தை ஒருசிறிதும் நீங்கலாள் - நகுலேசுவரரையும் நகுலேசுவரியையும் நகுலமகா முனிவரையும் சாகரசங்கமமென்று பெயர் கூறப்படும் பெருமையாகிய நகுலாசலதீர்த்தத்தையும் ஒரு சற்று நேரமேனும் பிரிந்து நீங்குங் கருத்தில்லாதவளாதலினலே,—பாசுரம் ஒன்று எழுதி ஆர்த்தாரிற்றிகழ்ந்து நிகழ்தந்தைக்கு உணர்த்த - ஒரு திருமுகத்தை எழுதி ஆத்திமாலையினலே எங்கும் விளங்கித்தோன்றுகின்ற தன்பிதாவாகிய விக்கிரமசோழனுக்கு இங்கே நடந்த சம்பவங்களை யெல்லாந் தெரிவிக்க,—அத்தந்தை தன்னுள மகிழ்ந்து தானதருமங்கள் பல செய்து - அப்பிதாவாகிய சோழமகாராசா அத்திருமுகத்தை வாசித்து அறிந்து மிகவும் மனமகிழ்ந்து தன் புத்திரிபேரினலே

தானங்களையும் தருமங்களையும் பலசிறந்தனவாகச் செய்து,— அறுமுகன் திருச்சட்டகம் தருவித்து - அப்புத்திரியின் கேள்விப்படி சண்முகக்கடவுளினது திருவுருவொன்றைச் செய்வித்து,—அதை வாரிற்றிணிந்த மூலமாதுக்கு அனுப்ப - அத்திருவுருவத்தைக் கச்சிறுள் அடங்காத கனதனத்தையுடைய தன் மகட்கு அனுப்பிவிட,—அது நாவாயின் வந்துறுதலும் - அத்திருவுரு மரக்கலத்தின் வாயிலாக வந்துசேருதலும்,—வாங்கி ஓங்கு உளமகிழ்வு தேங்கி - அப்பெண்ணரசி அத்திருவுருவைத் தன்னிருகைகளினுலும் வாங்கி முத்தமிட்டுத் தழைத்தோங்கிய மனமகிழ்ச்சி நிறையப் பெற்று,—நகுலாசலவளாக பூருவதிசையின் வாய் - நகுலாசலத்தின் இடம்பரந்த கிழக்குத் திக்கின் கண்ணே,—சாரிற்பலா தனது வேரிற் பழுக்க அருள் - முதலாவரணத்திலே ஈசானியதிக்கிலே நிற்கின்ற தலவிருக்ஷமாகிய வேர்வருக்கையானது தன் காரணக்குறியின்படி ஓர் திருவாதிரை நட்சத்திரதினத்திலே பூமியின் கீழுள்ள தனது வேரிலே காய்த்துப் பழுக்கும்படி திருவருள் பாலித்த,—சாந்தநாயகிசமேத. எ - று.

திசையின் வாய் என்பதனை வருஞ்செய்யுளின் முதலில்வரும் வந்து என்பதனேடு கூட்டிமுடித்துக் கொள்க. சாரிற் பலாதனது வேரிற் பழுக்கவருள் என்னும் வாக்கியத்தின் சரித்திரத்தை ஈண்டு விரிக்கிற் பெருகும். அதனை அறிந்தவர் மாட்டுக் கேட்டறிந்துகொள்க. (கூ௫)

வந்துகந் தனைநிறுவ விதுவுசித தலமென
 வரையறுத் தறிஞர்நம்மால்
வளரருட் குகனுல யந்தந்து வேண்டுவன
 மரபுளி வகுப்பித்தபின்
றந்துநந் திடையினு டக்கநல் லோரையிற்
 சத்திகளொடுஞ்சண்முகத்

தனிமுதலை யங்கவன் றந்திரத் தொடர்பினாற்
றாபனஞ் செய்வித்தனள்
இந்துசிந் திடுநுதலி யிங்கிதன் பின்னொரு
மிறைகுறை யுருவியல்பினா
லிறைவற்கு நித்தியமை மித்திக நடாய்நிறீஇ
யிருளோமா றொடுமிருந்தாள்
தந்ததொர் தந்திமிதெய் யென்றுமன் றிலயமிடு
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ ளீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ-ள். வந்து கந்தனை நிறுவ இது உசிததலன் எனு அறி ஞர் தம்மால் வரையறுத்து - அம்மாருதப்பிரவல்லியானவள் சென்று சுப்பிரமணியக்கடவுளைப் பிரதிட்டை செய்தற்கு இந் தத் தானமே உத்தமோத்தம தானமென்று சிற்பசாஸ்திரத்திற் பேரறிவையுடைய தபதிகளாலே தான நிச்சயஞ்செய்வித்து,— வளர் அருட் குகனாலயந் தந்து - ஒரு காலைக் கொருகால் மீதூர் ந்துவளருகின்ற திருவருளையுடைய கலியுகவரதராகிய சுப்பிர மணியக்கடவுட்கு அத்தானத்திலே விதிப்படி ஆலயமொன்று அமைப்பித்து முடித்து,—வேண்டுவன மரபுளி வகுப்பித்தபின்- கும்பாபிஷேகத்துக்கு வேண்டப்படும் உபகரணங்களையெல் லாம் விதிப்படி பகுதிப்பட வருவித்தபின்னர்,—தந்துநந்து இடையினாள் - நூலும் பெரிதாயிற்றென்று சொல்லத்தக்க சிறிய இடையினையுடைய அம்மாருதப் பிரவல்லி,—தக்க நல் ஓரையில் சத்திகளொடும் சண்முகத்தனிமுதலை - தகுதியாகிய நல்ல முகூர்த்தத்திலே தெய்வயானையம்மை வள்ளிநாயகி யம்மை என்னுமிருசத்திகளோடும் ஆறுதிருமுகங்களையுடைய முழுமுதல்வராகிய சுப்பிரமணியக்கடவுளை,— அங்கு அவன் தந்திரத் தொடர்பினால் தாபனஞ் செய்வித்தனள் - அவ்வால

யத்தின்கண்ணே குமாரதந்திர விதிப்படி பிரதிட்டை செய்வித்தனள்,—இந்து சிந்திடு நுதலி இங்கு இதன்பின் - மூன்றாநாட் பிறைமதி பின்வாங்குதற்கேதுவாகிய வளைந்த நெற்றியையுடைய அவ்விராச குமாரத்தி (இவ்வாலயத்திலே இதன் பிற்காலத்தும்); - நாளும் இறைகுறைவுறு இயல்பினால் - அநவரதமும் இறையளவேனும் குறைவுபொருந்தாத பிரகாரத்தினால்,—இறைவற்கு நித்தியம் நைமித்திகம் நடாய் நிறீஇ இதனைமாரொடும் இருந்தாள் - சுப்பிரமணியக்கடவுளுக்கு நித்திய பூசைகளையும் மகோற்சவமாகிய நைமித்திகத்தையும் அவற்றிற்கு வேண்டுவன வற்றைச் சம்பாதித்து நிறுவி நடாத்திக்கொண்டு தன் உயிர்த்தோழிகளோடும் நிலவறையின்கண்ணே சிலகாலம் இருந்தனள்,—தந்தொந்தந்திமி தெய்யென்று மன்று இலயமிடு - தந்தொந்தந் திமிதெய்யென்று தைவிகநாடக தாளத்திற்கேற்பக் கனகசபையின்கண்ணே பஞ்சகிருத்திய நிருத்தஞ் செய்தருளுகின்ற,—சாந்தநாயகிசமேத. எ - று. (கஎ)

மானமதை மன்னுயிரி ஞேம்புவா ளாகலின்
　மாதுநில வறையிருந்தாள்
மற்றது குமாரத்தி பள்ளமென வேகொடிம்
　மாநில மதித்துரைக்கும்
கானமர் கடம்புபுனை காங்கேய னெழிலுருக்
　கலமீது வந்திறங்கு
காரணத் திற்கசாக் காங்கெயன் றுறையெனக்
　கழறிடுங் கன்னியன்னம்
நானமத ஞனதிதன் மாமுகம் விடுவித்த
　நலனையந் நகரினேற்றி
நாடுமா விட்டபுர மீதெனு வதனுக்கொர்
　நாமதே யமுநல்கினள்
சானவி சடாடவி மிகாதவி தாச்செய்த

சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மானமதை மன் உயிரின் ஓம்புவாள் ஆகலின்மாது நிலவறை இருந்தாள் - அவ்வரசிளங்குமரி யாது காரணம் பற்றி நிலவறையின்கணிருந்தாளெனின், தன் மானத்தை நிலைபெற்ற தன்னுயிர்போலக் குறிக்கொண்டு பாதுகாக்கும் உயர்குடிப்பிறப்பினளாகலின், அக்கன்னிகை நிலவறையின்கணிருந்தனள்,— அது இம்மாநிலம் குமாரத்தி பள்ளம் எனவே மதித்துக்கொடு உரைக்கும் - அந்நிலவறையை இப்பெரிய நிலவுலகத்தவர்கள் அன்று தொடக்கம் குமாரத்திபள்ளம் என்னும் பெயரினால் நன்குமதித்து இன்றுங் கூறுநிற்பர்,—கான் அமர் கடம்பு புனை காங்கேயன் எழில் உருக்கலமீது வந்து இறங்கு காரணத்தில் கசாக் காங்கெயன் துறை எனக் கழறிடும் - மணம் பொருந்திய கடப்பமலர் மாலையைத்தரித்த சுப்பிரமணியக்கடவுளினது அழகிய திருவுரு மரக்கலத்தின்மீது வந்து இறங்கிய காரணத்தினாலே அக்கசாத்துறையானது அன்று தொடக்கம் காங்கேயன் றுறை யென்னும் பெயரினாலே கூறப்படாநிற்கும்,—கன்னி அன்னம் நானமதனால் நதிதன்மாமுகம் விடுவித்த நலனே அந் நகரின் ஏற்றி ஈது நாடு மாவிட்ட புரம் என அதனுக்கு ஒர் நாமதேயமும் நல்கினள்,—அம்மாருதப் பிரவல்லியாகிய அரசிளங் கன்னியன்னமானவள் தன்னொரு ஸ்நானத்தினாலே அம்மலையருவி நதியானது தன் குதிரைமுகத்தை நீக்கிவிட்ட பெரும் பிரயோசனத்தை அவ்வூரின்மீது பிரயோகித்து எவராலும் விரும்பப்படுகின்ற இச்சுப்பிரமணியதலம் மாவிட்டபுரம் என்று அத்தலத்திற்கு ஒரு நாமதேயத்தையுங் கொடுத்தனள்,— சானவி சடாடவி மிகாது அவிதரச்செய்த - ஆகாய கங்காநதியானது தமது சடைக்காட்டின் கண்ணே பெருக்கெடாது பிரவாகங் குன்றும்படிசெய்தருளிய,—சாந்தநாயகிசமேத. எ - று.

இத்துறைக்குக் காங்கேயன்றுறை யென்னுங் காரணப் பெயர் வருதற்கு முன்னெல்லாம் கசாத்துறை யென்னும் பெயர் வழங்கிற்றெனவறிக. காங்கேயன் எனற்பாலது காங்கெயன் எனக்குறுகிற்று.　　　(கூஅ)

## கசா - கசாத்துறை.

மூர்த்திதீர்த் தந்தலமிம் மூன்றுமிங் குறுதலான்
　மொழிநாட ரபரகிரியை
மொய்த்துநா ளுடொறுஞ் சுத்ததீர்த் தத்தினிடை
　மூழ்கிநனி முற்றுவிப்பார்
ஆர்த்தெழு மகாசன சமூகத்தொ டறுமுகவ
　னுடிமா தோற்சவாந்தத்
தைந்துதேர் வந்துற வெழுந்தரு டிருக்கோல
　வற்புதம தேயற்புதம்
தேர்த்திரு விழாநின்று மாடியமை நாண்மேவு
　சீர்த்திருக் கூட்டத்துடன்
சென்றுதா னுடிமுன் றீர்த்தங் கொடுத்திடுந்
　தெரிசனம தேதெரிசனஞ்
சார்த்தனிக் கண்டிகைச் சண்டிகைக் கருள்செயுஞ்
　சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
　சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். மூர்த்திதீர்த்தம் தலம் இம்மூன்றும் இங்கு உறுதலால் - மூர்த்திவிசேடம் தீர்த்தவிசேடம் தலவிசேடம் என்னும் மூன்று விசேடங்களும் இந்நகுலாசலத்தின்கண்ணே யொருங்கு பொருந்தப்பெறுதலினுல்,—மொழிநாடர் அபரகிரியை - சொல்லப்பட்ட யாழ்ப்பாண நாட்டின் கண்ணுள்ளவர்கள் தத்தம் அந்தியேட்டி முதலிய அபரகிரியைகளை,—நாள் நாள் தொறும் மொய்த்து - நாடோறும் நாடோறும் வெகுதூரத்தி

னின்றும் வந்து நெருங்கி,—சுத்த தீர்த்தத்தினிடை மூழ்கி நனி முற்றுவிப்பார் - பரிசுத்தமாகிய இந்த நகுல தீர்த்தத்தின் கண்ணே ஸ்நானஞ்செய்து நடாத்தி மிகவும் முடிப்பார்கள்,— ஆர்த்து எழும் மகாசனசமூகத்தொடு - அரகர வென்று ஆரவாரித்தெழுகின்ற மகாசனக் கூட்டத்துடனே,— அறுமுகவன் ஆடிமாத உற்சவாந்தத்து ஐந்து தேர் வந்து உற எழுந்தருள் திருக்கோல அற்புதமதே அற்புதம் - ஆறுதிருமுகங்களையுடைய மாவிட்டபுரச் சுப்பிரமணியக்கடவுளானவர் ஆடிமாதத்துப் பிரமோற்சவ முடிவின்கண்ணே பஞ்சாதங்கள் ஒன்றன்பின் னொன்றாக வரத் தமது தேரின்மீது வீதியில் எழுந்தருளுகின்ற திருக்கோல ஆச்சரியமே ஏனையாச்சரியங்க ளெல்லாவற்றினும் மேம்பட்ட ஆச்சரியமாவது,—தேர்த்திருவிழாவின்றும் ஆடி அமை நாள் மேவு சீர்த்திருக் கூட்டத்துடன் சென்று - இரத மகோற்சவத்தினின்று நீங்கி ஆடி அமாவாசைத் தினத்திலே தம்மைச்சூழ்ந்து வருஞ் சைவத்திருவழியினையுடைய திருக் கூட்டத்தாருடனே நகுலதீர்த்தக்கரையை அடைந்து,—முன் தானுடித்தீர்த்தம் கொடுத்திடும் தெரிசனமதே தெரிசனம் - தாமுன்னரே அத்தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து பின்பு எல்லாருக்குந் தீர்த்த ஸ்நானத்தைக்கொடுத்தருளுகின்ற நிகழ்ச்சியைத் தரிசிக்குந் தரிசனமே மற்றெல்லாத் தரிசனத்திலும் மிக மேலாகிய தரிசனமாவது,— சார்த்தனிக் கண்டிகைச் சண்டிகைக்கு அருள் செயும் - தேரோடும் வடக்கு வீதியின் கண்ணே ஒப்பற்ற கண்டிகை வடங்களைத் தரித்த உருத்திரமகா காளிக்குப் பூரணாநுக்கிரகஞ்செய்த,—சாந்தநாயகி சமேத. எ - று. (கக)

## உபாசனமூர்த்தி வணக்கம்.

## உபாசனமூர்த்தியாவது - வழிபடுங் குலதெய்வம்.

நதிகளிற் கங்கைநவ மணிகளிற் பதுமமணி
நாட்டினிற் காசிமீரம்

நல்லாவி னிற்றேனு நங்கையர்க் குண்ணளினை
நகரிற் குபேரநகரம்
பதிகளிற் றில்லைபயில் பூசையுட் சிவபூசை
பதிகொளேன் பிற்சிவநிசி
பதிநூல் களிற்சித்தி முத்தியிற் பரமுத்தி
பாவில்வெண் பாபன்னிரு
மதிகளிற் சிங்கமதி மந்திரிகளிற் பட்டி
மாவினுச் சைச்சிரவமா
மந்திரத் தைந்தெழுத் தேசுத்தி யுட்பிறவி
மாற்றுமத் துவசுத்திபோற்
சதிகளிற் றுண்டவந் தருகடவு ளேகடவுள்
சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ லீசனே யைந்தொழில் விலாசனே
சந்த்ரபுர தலவாசனே.

இ - ள். நதிகளிற் கங்கை - சர்வநதிகளுக்குள்ளும் உத்தர வாகினியாகப் பிரவாகிக்கும் காசித்திருப்பதிக்கங்கை சிறந்தது போலவும்,—நவமணிகளிற் பதுமமணி - நவரத்தினங்களுக் குள்ளே பதுமராகரத்தினம் சிறந்தது போலவும்,—நாட்டினிற் காசிமீரம் - ஐம்பத்தாறு தேயங்களுக்குள்ளே காசிமீரதேயம் சிறந்தது போலவும்,—நல் ஆவினில் தேனு - நல்லபசுக்களுக் குள்ளே காமதேனு சிறந்தது போலவும்,—நங்கையர்க்குள் ளினை - தெய்வமகளிர்களுக்குள்ளே தாமரையாசனியாகிய இலக்குமி சிறந்தமைபோலவும்,—நகரிற்குபேர நகரம் - அநேக நகரங்களுக்குள்ளே குபேரனது அளகாபுரி சிறந்ததுபோல வும்,—பதிகளிற்றில்லை - இந்நிலவுலகத்திலேயுள்ள ஆயிரத் தெட்டுச் சிவஸ்தலங்களுக்குள்ளே சிதம்பரஞ் சிறந்தது போல வும்,—பயில் பூசையுட் சிவபூசை - ஆன்மாக்களாற செய்யப்படு கின்ற பலதிறத்தனவாகிய பூசைகளுக்குள்ளே சிவபூசை சிறந்

தரு போலவும்,—பசிகொள் நோன்பிற் சிவநிசி - உபவாசஞ் செய்த நுட்டிக்கப்படும் அநேக விரதங்களுக்குள்ளே சிவராத்திரிவிரதஞ் சிறந்தது போலவும்,—பதி நூல்களிற் சித்தி - சிவசாத்திரங்களுக்குள்ளே அருணந்திசிவாசாரியஸ்வாமிகள் அருளிச் செய்த ஞானநூலாகிய சித்தியார் என்னுநூல் சிறந்தது போலவும்,—முத்தியில் பரமுத்தி - அபரமுத்தி பரமுத்தி என்னும் இரண்டினுள்ளே பரமுத்திசிறந்தது போலவும்,—பாவில் வெண்பா - நால்வகைப் பாக்களினுள்ளே வெண்பா சிறந்தது போலவும்,—பன்னிருமதிகளிற் சிங்கமதி - பன்னிரண்டு மாதங்களுக்குள்ளே ஆவணி மாதஞ் சிறந்தது போலவும்,—மந்திரிகளிற் பட்டி - அநேகமந்திரிகளுக்குள்ளே விக்கிரமாதித்தனுடைய பட்டி மந்திரி சிறந்தாற் போலவும்,—மாவின் உச்சைச்சிரவ மா - பலநிறத்தனவாகிய குதிரைகளுக்குள்ளே இந்திரனது உச்சைச்சிரவமாகிய குதிரை சிறந்தது போலவும்,—மந்திரத்து ஐந்தெழுத்தே - எழுகோடிமந்திரங்களுக்குள்ளே சிவமூல மந்திரமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரஞ் சிறந்தது போலவும்,—சுத்தியுட் பிறவிமாற்றும அத்துவசுத்தி போல் - சர்வப்பிராயச்சித்தங்களுக்குள்ளே சனன மரணங்களை ஒழிக்கும் நிர்வாண தீக்ஷையாகிய பிராயச்சித்தஞ் சிறந்தது போலவும்,—சதிகளின் தாண்டவந்தரு கடவுளேகடவுள் - சிவபெருமான் ஆன்மாக்கள் பொருட்டுக் கொண்டருளிய அநேக மூர்த்தங்களுக்குள்ளே சிதம்பரத்திலே அனவரத தாண்டவஞ் செய்தருளுகின்ற சபாநாயகமூர்த்தமே எவற்றினும் மேலாகிய மகாசிவமூர்த்தமாகும்,—சாந்தநாயகிசமேத. எ - று. (கOO)

## முடிப்புரை விண்ணப்பம்.

நீயே யுயிர்க்குளுயிர் நீயே யொளிக்குளொளி
  நீயே யெதற்குளெதுவும்
நினையின்றி யாரென்று நினையவும் வல்லரே
  நீசனேன் பிழைபொறுப்பாய்

நீயே நிராலம்ப நித்தமுத் தச்சித்து
  நீகொலாந் திரிபுடிநிதி
நீயே கரந்துமுட னாகியும் வேறாயு
  நின்றனை நடாத்துநிகிலம்
நீயே செயுங்குற்ற முங்குணம தாக்கொண்டு
  நேயருக் கருள்புரிகுவாய்
நிமிர்புன் புலக்கன் மனப்பதக னென்சதக
  நிமலகொண் டாட்கொண்டருள்
தாயே யடைக்கலந் தந்தா யடைக்கலஞ்
  சாந்தநா யகிசமேத
சந்த்ரமௌ ளீசனே யைந்தொழில் விலாசனே
  சந்த்ரபுர தலவாசனே.

இ-ள். உயிர்க்குள் உயிர் நீயே - சீவான்மாக்களுள் இரண்டற வியாபித்துநின்று அவற்றை யியக்குவது தேவரீரே யாம்,—ஒளிக்குள் ஒளிநீயே - அவ்வான்மாக்களுடைய அறிவுக்குள் அறிவாயிருப்பவரும் தேவரீரேயாம்,—எதற்குள் எதுவும் நீயே - இங்ஙனம் சரம் அசரமாகிய இருவகைப் பிரபஞ்சப் பொருள்களுக்குள்ளும் இரண்டறவியாபித்து நின்று அவற்றை யியக்குபவரும் தேவரீரேயாம்,—நினை இன்றி யான் ஒன்று நினையவும் வல்லனோ - ஆகலான் சர்வவியாபகமாகிய தேவரீரை யில்லாமல் தமியேன் எதுவொன்றனையாவது நினைக்கத் தானும் வல்லமை யுடையேனோ? இல்லையே!—நீசனேன் பிழை பொறுப்பாய் - அங்ஙனமாகவும், இச்சதகத்தை நீசத்துவத்தை யுடைய யான் பாடினேன் என்னும் இப்பெருங்குற்றத்தைச் சுவாமீ திருவுளமிரங்கிப் பொறுத்தருளும்,—நிராலம்ப நித்த முத்தச் சித்து நீயே - ஆதாரமற்ற நித்த முத்தச் சித்துவுந் தேவரீரேயாம்—திரிபுடி நிதி நீயே - காண்பான் காட்சி காட்சிப் பொருள் என்னும் மூன்றிற்கும் ஆதாரமுந் தேவரீரேயாம்,—

கரந்தும் உடனாகியும் வேறாயும் நின்று எனை நடாத்து நிகிலம் நீயே - மறைந்து நின்றும் ஒருங்கியைந்து நின்றும் தனித்து நின்றும் தமியேனை நடாத்தியருளுகின்ற சர்வமுந் தேவரீரேயாம்,—ஆதலினாலே, செயுங்குற்றமுங் குணமதாக் கொண்டு நேயருக்கு அருள்புரிகுவாய் நீயே - செய்த குற்றத்தையுங் குணமாக ஏற்றுக்கொண்டு மெய்யன்பர்களுக்குப் பூரணாநுக்கிரகஞ் செய்தருளுபவருந் தேவரீரேயாம்,—நிமிர் புன்புலக் கன்மனப் பதகனேன் சதகம் நிமல கொண்டு-ஆணவமலத்தின் காரியமாய் யானெனதென இறுமாக்கின்ற எளிய அறிவினையும் கருங்கற்போல ஒரு சிறிதும் நெகிழாத மனத்தையுமுடைய பாவியேனது இச்சதகத்தை மலரகிதராகிய தேவரீர் திருவுளமிரங்கி ஏற்றுக்கொண்டு,—ஆட்கொண்டருள் - தமியேனைத் தடுத்தாட்கொண்டருளும்,—தாயே அடைக்கலம் - சாந்தநாயகியாகிய பரமமாதாவே! தேவரீருக்குச் சதா அடைக்கலம்,—தந்தாய் அடைக்கலம்,—சர்திரமௌலீசராகிய பரமபிதாவே! தேவரீருக்குத் தமியேன் சதா அடைக்கலம்! அடைக்கலம்!! அடைக்கலம்!!!

சந்திரமௌலீசர்சதகம் என்னும்
ஈழமண்டலசதகமும் உரையும் முற்றுப்பெற்றன.

**திருச்சிற்றம்பலம்.**



மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

